# கோவூர்கிழார்




ஆசிரியர் :

புலவர் கு. திருமேனி, B.O.L.
தமிழ் விரிவுரையாளர்
தேசீயக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.





**இலக்கிய நிலையம்**

**30, ஆண்டார் வீதி :: திருச்சிராப்பள்ளி–2**



என் அன்பிற்குரியாராய்ப் பண்பிற்கு ஒத்து
எல்லாம் அறிந்தும் ஏதும் அறியார்போல் வாழும்
எங்கள் பேராசிரியப் பெருந்தகை வித்துவான்
திரு. தி. சே. **பாலசுப்பிரமணியம்** M.A. அவர்கட்கு
இந்நூலைக் காணிக்கையாக்குகின்றேன்.



# முன்னுரை

'கோவூர்கிழார்' என்னும் இந்நூல், பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர் நம்நாட்டில் தோன்றித் தமிழரசு ஓச்சித் தலைமைசான்ற சங்கப் புலவர்களுள் ஒருவராய கோவூர்கிழார் பாடிய அனைத்துப் பாடல்களையும் ஆய்ந்து அவற்றின் துணையினல் அவரைப்பற்றியும், அவரால் பாடப் பட்டோரைப்பற்றியும், அவர் கூறிய பலதிறப்பட்ட செய்தி களைப் பற்றியும் தொகுத்துக் கூறுவதாகும்.

இந்நூலில் யான் அவர் பாடிய பாக்களிலுள்ள சில சிறந்த சொற்களையே ஒவ்வொரு பாட்டிற்கும் தலைப்பாகத் தந்து, அவர் பாட்டுக்கள் அனைத்தையும் முழுமையாகப் பதிப்பித்துள்ளேன்.

"ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"

என்பதற்கிணங்க, சங்கநூல்களுக்குத் தனித்தனிப் பாயிர மில்லையேனும், தனித்தனிப் புலவர்களால் பாடப்பெற்ற சங்கநூல்களிலுள்ள அனைத்துப் பாக்களுக்கும் பாயிர முண்டு. அப்பாயிரந்தான் திணை, துறை நிகழ்ச்சி குறிப்புப் போன்ற செய்திகளாகக் கூறுபட்டுக் கிடப்பதாகும். ஒரு நூலுக்குப் பாயிரமறியா மாணவன் எவ்வாறு 'குறிச்சி புக்க மான்போல்' இடர்ப்படுவானே, அங்ஙனமே சங்கப்பாடல் கட்கு அமைந்த திணையும், துறையும் நிகழ்ச்சிக் குறிப்பும் அறியாவழி பொருள் காணது உழப்பான். அத்தகைய பாயிரம் புறநானூற்றுப் பாடல்களில் செம்மையாக

இல்லாமையால் பொருளறிவதில் இடர்ப்பாடுகண்டு அது பற்றிய செய்திகளைக் கோவூர்கிழார் பாடல்கட்கு ஒருவாறு இந்நூலுள் தெளிவுபடுத்தியுள்ளேன்.

சங்கப்பாடல்கள் வெறும் செய்திகளைச் சொல்லியனவாக மட்டும் அமையாமல் நவில்தொறும் நயஞ்சுரக்கும் உணர்வு என்னும் இலக்கிய உறுப்பினையும் பெற்றுள்ளன. அதனால் ஒரு செய்யுளில் திணை துறை சூழ்நிலை தெரிந்து பொருள் அறிவதோடு அப்பாட்டின் வாயிலாக அப்புலவன் அமைத்த உணர்வினை உணர்தலே பொருள் உணர்தலாகும். அவ் விலக்கிய உறுப்பினைக் கோவூர்கிழார் எங்ஙனம் தம் பாட்டுக் களில் அமைத்துப் பாடியுள்ளார் என்பதை ஒருவாறு உணர்த்தியுள்ளேன்.

கோவூர்கிழார் தாம் கூறவந்த பொருளைத் தெளிவு படுத்தவே உவமைகளைக் கையாண்டாரெனினும் அன்று அவர் கையாண்ட பல உவமைகள் நமக்குப் புரியாதன வாயின. 'பொருளும் இன்பமும் அறத்து வழிப்படூஉம் தோற்றம்போல' என்பதும், 'அராப்போலும் வறன்' என்பதும் 'அல்லிப்பாவை ஆடுவனப்பேய்ப்ப' என்பதும் அன்றுபோல் இன்று தெளிவுறப் பொருளைப் புலப்படுத்த வில்லை. பழைய உரையாசிரியர் தொடங்கி இன்றைய உரையாசிரியர் அனைவர்க்கும் அவை தெளிந்த பொருள் காட்டா உவமைகள் ஆயின. அவற்றிற்கு இயன்றவரை விளக்கம் கூறியுள்ளேன்.

கோவூர்கிழார் பாடல்களைத் தெளிவோடு பொருட் பொருத்தமுற இலக்கியவுணர்வினைப் புலப்படுத்தி நடத்த விரும்பும் ஆசிரியப் பெருமக்கட்கு இந்நூல் பெரிதும் பயன்படும். தமிழைத் தரங்கெடாது படித்து உணர விரும்பும் மாணவர்க்கு இந்நூல் நல்ல துணையாகும். தமிழ் நலந்துய்க்கும் பொதுமக்கட்கு இந்நூல் தக்கதொரு வழிகாட்டி.

இல்லாமையால் பொருளறிவதில் இடர்ப்பாடுகண்டு அது பற்றிய செய்திகளைக் கோவூர்கிழார் பாடல்கட்கு ஒருவாறு இந்நூலுள் தெளிவுபடுத்தியுள்ளேன்.

சங்கப்பாடல்கள் வெறும் செய்திகளைச் சொல்லியனவாக மட்டும் அமையாமல் நவில்தொறும் நயஞ்சுரக்கும் உணர்வு என்னும் இலக்கிய உறுப்பினையும் பெற்றுள்ளன. அதனுல் ஒரு செய்யுளில் திணை துறை சூழ்நிலை தெரிந்து பொருள் அறிவதோடு அப்பாட்டின் வாயிலாக அப்புலவன் அமைத்த உணர்வினை உணர்தலே பொருள் உணர்தலாகும். அவ்விலக்கிய உறுப்பினைக் கோவூர்கிழார் எங்ஙனம் தம் பாட்டுக்களில் அமைத்துப் பாடியுள்ளார் என்பதை ஒருவாறு உணர்த்தியுள்ளேன்.

கோவூர்கிழார் தாம் கூறவந்த பொருளைத் தெளிவு படுத்தவே உவமைகளைக் கையாண்டாரெனினும் அன்று அவர் கையாண்ட பல உவமைகள் நமக்குப் புரியாதன வாயின. 'பொருளும் இன்பமும் அறத்து வழிப்படூஉம் தோற்றம்போல' என்பதும், 'அராப்போலும் வறன்' என்பதும் 'அல்லிப்பாவை ஆடுவனப்பேய்ப்ப' என்பதும் அன்றுபோல் இன்று தெளிவுறப் பொருளைப் புலப்படுத்த வில்லை. பழைய உரையாசிரியர் தொடங்கி இன்றைய உரையாசிரியர் அனைவர்க்கும் அவை தெளிந்த பொருள் காட்டா உவமைகள் ஆயின. அவற்றிற்கு இயன்றவரை விளக்கம் கூறியுள்ளேன்.

கோவூர்கிழார் பாடல்களைத் தெளிவோடு பொருட் பொருத்தமுற இலக்கியவுணர்வினைப் புலப்படுத்தி நடத்த விரும்பும் ஆசிரியப் பெருமக்கட்கு இந்நூல் பெரிதும் பயன்படும். தமிழைத் தரங்கெடாது படித்து உணர விரும்பும் மாணவர்க்கு இந்நூல் நல்ல துணையாகும். தமிழ் நலந்துய்க்கும் பொதுமக்கட்கு இந்நூல் தக்கதொரு வழிகாட்டி.

இந்நூலில் யான் கையாண்ட பழந்தமிழ்ச் சொற்களை எல்லோருமறிந்து போற்றவேண்டி நூலிறுதியில் அருஞ்சொற்பொருள் விளக்கமொன்று தந்துள்ளேன். இந்நூலில் யான் மேற்கொண்ட முயற்சியினை 'இகலிலா எஃகுடையர்' பாராட்டுவர் என்பது என் துணிவு.

இந்நூல் உருப்பெறுவதற்கு என் மாணவர்களே பெரிதும் துணை நின்றவர்கள். அடுத்துத் துணைபுரிந்தவர் சீதாலட்சுமி இராமசாமி மகளிர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றும் திரு. புலவர் கமலம் B.O.L. ஆவர். என் நண்பர் திரு. அ. அரங்கராசன் அவர்களுடைய உதவி மிகப் பெரியது. இவர்கட்கு என் நன்றி.

குறுகிய காலத்தில் நல்லமுறையில் அச்சேற்றித்தந்த சோதி அச்சகத்தாருக்கு என் நன்றி.

திருச்சிராப்பள்ளி,
15—12—1962

கு. திருமேனி.

# பொருளடக்கம்

# கோவூர்கிழார்

## சங்க இலக்கியம்

பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழ் வேந்தர்கள் புலவர்களைக் கூட்டித் தமிழை முப்பாற்படுத்திப் பேணி வளர்த்தனர். அவைதாம் சங்க நூல்கள் என்று இன்று நம்மால் பயிலப்பெறும் தமிழ் இலக்கியங்களாகும். தலைமை சான்ற உலக இலக்கியங்களில் தமிழ் இலக்கியங்களும் ஒத்த இடம்பெறத்தக்கவேனும், அவை அத்தகைய பெருமை யினைப் பெறுதுபோயின. இந்தியாவிலுள்ள பல வேறு மொழிகளுக்கு அந்த வாய்ப்புக் கிடைத்திருந்தும் தமிழ் இலக்கியங்கள் அதனைப் பெருமைக்குத் தலையாய காரணம், இந்திய வரலாற்றில் தமிழக வரலாறு தக்க இடம் பெருமை யும், மேலை நாட்டினர்க்குத் தமிழ்மொழி செவ்வையாக அறிமுகமாகாமையுமேயாம். தமிழகம் இந்திய வரலாற்றில் செம்மையாகக் குறிக்கப்பெற்றிருந்தால், வடமொழிபோல் தமிழ்மொழி ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பெற்றிருக்கும். அவ்வாறு பெற்றிருந்தால் தமிழும் உலகறிந்த மொழிகளுள் ஒன்ருக மதிக்கப்பெற்றிருக்கும் என்பது உறுதி.

இந்திய மொழிகளின் பெருமைகளை நாடறியச் செய்த வர்கள் மேலைநாட்டாரும், மேலைநாட்டு மொழிகளில் தக்க பயிற்சியுடைய அந்த அந்த மொழிக்குரியாருமே யாவர். தமிழகத்து வாழ்ந்து தமிழைத் தாய்மொழியாகக் கொண் டிருந்தும், தம்மைத் தமிழிற்கு வேற்றவராக்கி நினைத்த தோடமையாது, பிறமொழியின்பால் பற்றுக்கொண்டு தம் முயற்சியினையும் அறிவினையும் அவற்றை வளர்க்கவே பயன் படுத்தினர், ஒரு சில தமிழறிஞர்கள். இதனால்தான் தமிழ்

மொழி இன்றும் உலகப் பெருமொழிகளில் ஒன்ருக இடம் பெற முடியாதிருக்கின்றது. நம் இலக்கியங்களை நாம்தாம் உயர்ந்தது உயர்ந்தது என்கின்ருேமன்றிப் பிறமொழி யாளர் மதித்துப் போற்றுகின்றனர் என்பதற்குச் சான்றுகள் இல்லை. கீதைபோல் குறளும், வான்மீகிபோல் கம்பரும், சாகுந்தலம்போல் தமிழில் உள்ள எதுவும் மதிக்கவோ, பாராட்டவோ, பாடமாக்கிப் பயிலவோ, மேற்கோளாக்கிப் புகழவோ கண்டிலம். தமிழிலக்கியம் காலப்பழைமையாலும், இலக்கிய வளத்தாலும், இலக்கண அமைதியாலும் தலை சிறந்தது; உயர்ந்த கருத்துக்களைக் கொண்டு பலதுறைப் படத் தொடர்ந்த வளர்ச்சியுடைமையாலும் நிகரற்றது. எனினும், இம்மொழிக்குடையார் இம்மொழிப் பற்றுடையவ ராயும், பிறமொழியின் துணையினுல் தம்மொழி வளர்க்கும் ஆற்றலும் அறிவும் உடையவர்களாயும் இல்லை. எனவே, தமிழ் மொழி உலக அரங்கில் தக்க இடம் பெருமைக்குக் காரணம்இதன் குறைபாடன்று, இதற்குரியார் குறைபாடே யாகும்.

இப்பழந்தமிழ் இன்று தனக்குத் தலையானதாகவும் முதலானதாகவும் கொண்ட நூல் தொல்காப்பியம். அதனை அடுத்துச் சங்க இலக்கியங்களும், காவியங்களும், பக்திப் பாடல்களும், புராணங்களும், பிரபந்தங்களும், புதினங் களும், சிறுகதைகளும், கவிதைகளும் என அவ்விலக்கியம் இன்றுவரையிலும் தொடர்ந்து வளர்ந்துகொண்டே வருகின்றது.

மேற்குறித்த சங்கஇலக்கியங்கள் என்று வழங்கப்பெறும் தமிழ்ச் செல்வங்கள், பலருடைய பலகாலத்து உழைப்பாகும். அவ்வுழைப்பினைப் பலகாலத்திற்குப் பிறகு பலர் பலவாறு தொகுத்தனர். தொகுத்தவர் அதனை வகுத்துப் பெயர்களும் சூட்டினர். அவர்கள் அவ்விலக்கியச் செல்வங்களைப் பகுத்த முறை, பெயரிட்ட பெற்றி இவைபற்றிய செய்திகளுள் சில நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. அகநானூற்றினை முப்பகுதியாகப் பிரித்துக் களிற்றுயானை நிரை, மணிமிடை

பவளம், நித்திலக் கோவை எனப் பெயர் புனைந்துள்ளனர். இப்பெயருக்கு இன்றுகாறும் நாம் தக்க காரணங் கண்டிலம். அகநானூற்றைப்போல் புறநானூற்றிற்கு இத்தகைய பிரிவில்லை. அங்ஙனமே குறுந்தொகை, நற்றிணை போன்ற நூல்களிலும் இப்பகுப்பும் பெயருங்காணேம்.

சங்கப் பாட்டுக்கள் பெரும்பாலும் தனித்தனியாக அமைந்தவை. அவற்றை மக்கள் உணர்ந்து மகிழ்ந்து பயன்பெறவேண்டி, அப்புலவர்பெருமக்கள் அப்பாட்டுக்களை எழுத நேர்ந்த சூழ்நிலையை அறிவிக்க இன்ன நேரத்தில், இன்ன சூழ்நிலையில், இன்னூர் இன்னுரை இதற்காகப் பாடியது என்ற செய்திகள் பலவற்றைத் திணை என்றும் துறை என்றும் சுருக்கமாகக் குறித்து உதவினர். அவற்றுள் திணை என்பது பெரும் பகுதியை உடையது; துறை என்பது அத்திணையின் உட்பகுதியாகும்.

இங்ஙனம் புலவர்கள் தாமாக நினைந்து இயற்றிய பாக்களில் இத்தகைய திணை துறை முதலியன அமைந்துள்ளன. ஆனல், நிகழும் சில நிகழ்ச்சிகளை எல்லோருக்குமிடையில் பாடநேர்ந்தபோது அப்புலவர்பெருமக்கட்குத் திணை துறை கூறிப் பாடவேண்டிய இன்றியமையாமை இல்லாது!போயிற்று. அப்பாட்டுக்கள் தமக்கெனத் திணையையும் துறையையும் பெறுமலேயே பொருளுணர்த்தின. ஆனல், அப்பாட்டுக்கள் அப்பொழுது திணை துறைகளைக் குறிப்பிடப் பெருதுபோகவே பின்னர் வந்தோர் அவற்றிற்குத் திணையும் துறையும் வகுக்க நேர்ந்தது. அவற்றிற்கு இலக்கண நூல்களைத் துணையாகக்கொண்டும், கேட்டறிந்த செய்திகளைக் கொண்டும், பாட்டின் பொருளைக் கொண்டு உய்த்துணர்ந்தும் திணை துறைகளை வகுத்து வைத்தனர்.

அப்படி வகுக்கும்போது தொல்காப்பியத்தைப் பின்பற்ருது அதற்குப் பின்னர்த் தோன்றிய இலக்கண நூல்களைத் துணையாகக் கொண்டு திணை துறைகளை அமைத்தனர். இதனுல்தான் தொல்காப்பியத்திற்கு உரைகண்ட

இளம்பூரணர், நச்சினர்க்கினியர் போன்ருேர் சங்கப் பாடல்களைத் தொல்காப்பியச் சூத்திரங்கட்கு மேற்கோள் காட்டும்போது ஒருவர் ஒரு திணையில் ஒரு துறைக்கு ஒரு பாட்டை மேற்கோளாகக் காட்ட, மற்ருெருவர் அதனையே வேறு ஒரு திணையில் வேறு ஒரு துறைக்கு உதாரணமாகக் காட்டியுள்ளார். ஆனல், அப்பாட்டுக்களின் அடியில் குறிக் கப்பெற்றுள்ள திணையும் துறையும் அவற்றின் முற்றிலும் வேறுபட்டிருக்கின்றன. இம்மாறுபாடுகள் அகப்பாட்டிலும் புறப்பாட்டிலும் நிகழ்வதைக் காணும்போது இளம்பூரணர், நச்சினர்க்கினியர் காலத்தில் சங்கப்பாடல்களுக்கு நிலையான திணை துறை அமைப்பு அமைந்திருக்கவில்லைபோலும்! திணை துறை அமைப்பைப்பற்றித் தொல்காப்பியத்தில் நச்சினர்க்கினியர் குறையாகக் குறிப்பிட்டதுங்கூட இளம் பூரண அடிகள் போன்ற உரையாசிரியர்களையும் திணை துறை வகுத்த வேறுசிலரையும் என்று எண்ணத் தோன்று கின்றது.

ஒரு பாட்டிற்குத் திணையும் துறையும் தெளிவில்லையேல், அதற்கு உரையும் தெளிவாகச் சொல்ல முடியாது. ஒவ் வொரு சொல்லிற்கும் சூழ்நிலைக்குத்தகப் பொருள் வேறு பாடுண்டு. ஆதலால், சூழ்நிலை உணர்த்தும் திணை துறை களை ஆய்வது அத்துணை இன்றியமையாச் செயலாகும்.

## புறநானூறு

தமிழ் இலக்கியங்களை இலக்கிய முறையில் அகம் என்றும் புறம் என்றும் பகுத்து, அவற்றிற்குத் திணை என்றும், துறை என்றும் இலக்கண உட்பிரிவுகளை வகுத் துள்ளனர் பெரியோர்கள். அவ்விலக்கணத்திற்கு இலக் கியமாகப் புறப்பகுதி யுணர்த்தும் நூல்களுள் புறநானூறும் ஒன்று.

அகத்திணை என்பது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்பனவற்றைக் கொண் டது. புறத்திணை என்பது வெட்சி, வஞ்சி, உழிஞை,

தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பனவற்றை அடக்கியது. இவைகளே அகத்திணைகட்கு ஒத்த புறத்திணைகள் என்பர் தொல்காப்பியர்.

ஆசிரியர் அகத்தியனுருடைய மாணுக்கர் பன்னிருவர் செய்த நூல் பன்னிருபடலமென்றும், பன்னிருவருள் ஒருவர் செய்த நூலே பன்னிருபடலமென்றும் வரலாறு கூறுவர். அக்கூற்று உண்மையாமாறில்லை. அகத்தியர் மாணவர்களுள் தொல்காப்பியரும் ஒருவராவர். அவர் அப்பன்னிரு படலத்துள் ஒன்றினை யாத்தார் என்று கூறவேண்டும். அன்றேல், பன்னிருவருள் ஒருவர் செய்த நூல் என்று கொண்டாலும் ஒருசாலை மாணுக்கருள் இத்தகைய மாறுபாடு இருக்க வாய்ப்பில்லை. அதனால், பன்னிருபடலம் என்பது பின்னர் வந்த யாரோ செய்ததாகும்.

அந்தப் பன்னிருபடலத்தினைத் தமக்கு முதல் நூலாகக் கொண்ட ஐயனாரிதனர் தாமும் அம்முதல் நூலோடு மாறுபடாது புறத்திணைகளைப் பன்னிரண்டாகச் செய்தனர் என்ப. அவர் கருத்துப்படி வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்ற பன்னிரண்டு திணைகள் ஆகும். அத்திணைகளின் உட்பிரிவுகளே துறைகள் எனப்படும் ஆநிரை மீட்டல் என்னும் பொருளில் ஐயனாரிதனர் கொண்டுள்ள கரந்தைத் திணையினைத் தொல்காப்பியர் ஒரு தனித்த திணையாகக் கொள்ளாது அதனை வெட்சித் திணையுள்ளேயே அடக்கிக் கூறுவர். எதிரூன்றல் காஞ்சி என்ற பொருளில் பன்னிருபடலமுடையாரும் புறப்பொருள்வெண்பாமாலை ஆசிரியரும் கொண்ட அக்காஞ்சித் திணையினைத் தொல்காப்பியர், வீடுபேறு காரணமாகப் பலதிறப்பட்ட நிலையாமையைச் சான்றோர் கூறும் குறிப்பினை உடையது என்று அதனைத் தனித் திணையாக அடக்குவர். இவ்வாறே தொல்காப்பியர் நொச்சி என்ற தனித் திணையினைக் கொள்ளாது அவர்கள் கூறும் அத்திணைப் பொருளை உழிஞையில் பெற வைத்துள்ளார்.

பொதுவியல் என்றதொரு திணை தொல்காப்பியருக்கு இல்லை. கைக்கிளையையும், பெருந்திணையையும் புறப் பொருள்வெண்பாமாலை ஆசிரியரைப்போலப் புறத் திணையுள் அடக்கவில்லை. இவையெல்லாம் தொல் காப்பியத்தினின்றும் வேறுபட்டுப் பின்னர் வந்த ஆசிரியர் கள் செய்த மாற்றங்களாகும்.

புறநானூற்றில் உழிஞைத் திணையைத் தவிர தொல் காப்பியர் கூறிய எல்லாத் திணை துறைகளிலும் பாட்டுக்கள் இருக்கின்றன. அதுபோலவே பன்னிருபடல ஆசிரியர், புறப்பொருள்வெண்பாமாலை ஆசிரியர் போன்றவர்கள் குறித்த எல்லாத் திணைகளிலும் பாடல்கள் இருக்கின்றன.

இதனை அடியிற்காணும் குறிப்புக் கொண்டுத் தெளிய லாம்.

| புறப்பொருள் வெண்பாமாலை. | புறநானூறு. | தொல்காப்பியம். |
|---|---|---|
| 1. வெட்சி | வெட்சி | வெட்சி |
| 2. கரந்தை | கரந்தை | — |
| 3. வஞ்சி | வஞ்சி | வஞ்சி |
| 4. காஞ்சி | காஞ்சி | காஞ்சி |
| 5. நொச்சி | நொச்சி | — |
| 6. உழிஞை | — | உழிஞை |
| 7. தும்பை | தும்பை | தும்பை |
| 8. வாகை | வாகை | வாகை |
| 9. பாடாண் | பாடாண் | பாடாண் |
| 10. பொதுவியல் | பொதுவியல் | — |
| 11. கைக்கிளை | கைக்கிளை | — |
| 12. பெருந்திணை | பெருந்திணை | — |

புறப்பொருள்வெண்பாமாலையில் திணைகளாக ஓதப்பெற்ற கரந்தை, நொச்சி, கைக்கிளை, பொதுவியல், பெருந்திணை, என்ற இந்த ஐந்து திணைகளும் தொல்காப்பியத்தில் புறத் திணைகளாகக் கூறப்பெறவில்லை. தொல்காப்பியத்தில்

குறிக்கப்பெற்றுள்ள உழிஞைத் திணைக்குப் புறநானூற்றில் பாட்டில்லை. புறநானூற்றில் காட்டப்பெற்ற பதினேரு திணைகளும், தொல்காப்பியர் கூறும் உழிஞைத் திணையும், புறப்பொருள்வெண்பாமாலையில் வரும் பன்னிரண்டு துறைகளில் இருக்கின்றன.

தொல்காப்பியர் புறப்பொருள்வெண்பாமாலை ஆசிரியர் கூறிய பல திணைகளைத் தாம் கூறும் திணைகளில் அடக்கிக் கூறுகின்ருர். சில திணைகட்குத் தொல்காப்பியர் கொண்ட பொருளுக்கும், புறப்பொருள்வெண்பாமாலை ஆசிரியர் கொண்ட பொருளுக்கும் வேறுபாடிருக்கிறது. புறநானூற்றில் வந்துள்ள திணைகள் புறப்பொருள்வெண்பாமாலையில் வந்திருப்பினும், புறநானூற்றுப் பாட்டுக்கள் பலவற்றிற்குத் தொல்காப்பியர் கூறும் திணைப்பொருளும், துறைப்பொருளும் பொருந்துகின்றனவேயன்றிப், புறப்பொருள்வெண்பாமாலை ஆசிரியர் கூறும் திணைப் பொருளும், துறைப்பொருளும் பொருந்தவில்லை. ஆதலால், புறநானூற்றுப் பாட்டு அமைந்திருக்கும் பொருளமைதிக்கேற்பத் தொல்காப்பியர் கூறும் திணையும் பொருளும் கூறலே பொருத்தமன்றி, ஆண்டுக் குறிக்கப்பெற்றிருக்கும் திணை துறைகளைக் கொண்டுப்பொருள் கூறல் இடர்ப்பட்டதாகும். புறம்பொருள்வெண்பாமாலை ஆசிரியர் தாம் கூறிய இலக்கணத்திற்கு இலக்கியமாகத் தாமே வெண்பாக்களைப் பாடியுள்ளாரேயன்றிப் புறநானூற்றிற்கு இலக்கணமாக அவர் சூத்திரம் யாக்கவில்லை. அஃது ஒன்றே புறநானூற்றிற்குப் புறப்பொருள்வெண்பாமாலை இலக்கணமாகாது என்பதைக் காட்டும்.

புறநானூற்றில் பல பாக்களுக்குத் திணை துறை வகுத்தவர்கள் பின்னர் வந்த வேறு யாரோ அன்றிப் பாக்களை யாத்தோர் அல்லர். அப்பாக்களுக்கு எவர் துறை வகுத்தபோதிலும், ஒரு பாட்டு ஒரு திணையையும், அதன்பாற்பட்ட ஒரு துறையையும் சார்ந்ததாகுமன்றி இதுவுமாகும் என்று அப்பாட்டிற்கு வேறு திணையும் துறையும் கூறமுடியாது.

புறநானூற்றில், "மண்திணிந்த நிலனும்" என்று தொடங்கும் பாட்டு, பாடாண் திணையுள் செவியறிவுறூஉ என்னும் துறையின்பாற்படும் என்றும், வாழ்த்தியல் என்ற துறைக்கும் உரியது என்றும் துறை வகுக்கப்பெற்று உள்ளது.

இவ்வாறே புறத்தின் ஐந்தாம் பாடலின் திணையும் துறையும், பாடாண் திணையுள் செவியறிவுறூஉ என்றும், பொருண்மொழிக் காஞ்சியுமாம் என்றும் எழுதப்பெற்றுள் ளது. அங்ஙனமே ஏழாம் பாடல் வஞ்சித் திணையுள் கொற்ற வள்ளைத் துறைக்குரியதாகவும், மழபுல வஞ்சிக்குரியதாக வும் குறிக்கப்பெற்றுள்ளது. புறத்தின் எட்டாம் பாடலும் பாடாண் திணையுள் இயன்மொழித் துறையோடு பூவை நிலையுமாம் என்று எழுதப்பெற்றுள்ளது. இவ்வாறு ஒரு திணையுள் உள்ள வேறு வேறு துறைக்குரியனவாகப் பாக்கள் குறிக்கப்பெற்றதோடு அமையாது வேறு வேறு திணைகளில் உள்ள வேறு வேறு துறையில் அமைந்ததாக ஒரு பாடலே இடம்பெற்றுள்ளது.

"சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்" என்ற பாடல் வாகைத் திணைக்குரிய அரசவாகை என்று குறிக்கப் பெற்றதோடு நில்லாமல், வஞ்சித்திணைக்குரிய மழபுல வஞ்சியுமாம் என்று சார்த்தப்பெற்றுள்ளது. வாகைத் திணையில் மழபுலவஞ்சி என்றதொரு துறை தொல்காப்பியத் திலும் இல்லை; புறப்பொருள்வெண்பாமாலையிலும் இல்லை. ஆனால், திணை துறை வகுத்தவர்கள், திணை வாகை என்றும் துறை மழபுல வஞ்சியுமாம் என்றும் குறிப்பிட்டுள் ளனர். இப்பாட்டினையே இளம்பூரண அடிகள் வஞ்சித் திணைக்குரிய இயங்குபடை அரவம் என்ற துறைக்கு மேற்கோளாகக் காட்டியுள்ளார். (தொல். புறத். சூ. 7. நச். 8) இதுபோன்ற மாறுபாட்டினைக் கண்டதால்தான் நச்சினார்க் கினியர், "கொடுப்போரேத்தி" என்று தொடங்கும் தொல் காப்பியச் சூத்திர உரையில், "தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றிற்குத் துறை கூறினரேனும், அகத்தியமும்

தொல்காப்பியமுமே தொகை நூல்களுக்கு நூலாகலின் அவர் சூத்திரப் பொருளாகத் துறை கூறவேண்டும் என்றறிக'' என்று எழுதியுள்ளார். இதற்கேற்ப ''களிறு கடைஇய'' என்று தொடங்கும் ஏழாம் பாடல் வஞ்சித் திணையில் கொற்றவள்ளைத் துறைக்குரியதோடு மழபுலவஞ்சியுமாம் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது. அப்பாட்டிற்கு உரைகண்ட பழைய உரையாசிரியர், '' இது பிறர் அகன்றலைநாடு நல்ல இல்ல ஆகுப'' என்றமையாற் கொற்றவள்ளையும், ''ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலை'' என்றமையான் மழபுல வஞ்சியுமாயிற்று என்று எழுதியுள்ளார். இதனுல் உரைகூற வந்த ஆசிரியர்கட்குப் பாட்டினைப் பாடிய புலவர்கள் அமைத்த திணையும் துறையும் தெளிவாகத் தெரியாமையால், பாட்டின் அடியில் குறிக்கப்பெற்றிருக்கும் திணைக்கும் துறைக்கும் தம் அறிவின் துணையினுல் இலக்கண அடிப் படையிலும், பொருள் அடிப்படையிலும் ஒவ்வொரு திணை யோடும் துறையோடும் சார்த்திப் பொருத்திக் கூற முற்பட் டிருக்கின்றனர். இத்தகைய தொல்லைகள் அகப்பாடல் களிலும் உண்டு.

இன்று புறநானூற்றினைப் பின்பற்றி ஆயிரமாயிரம் நூல்கள் வெளிவந்தும் ஒன்ருவது புறநானூற்றுத் திணை துறைகளின் விளக்கம்பற்றியோ, அவற்றெடுபட்ட பாட்டின் பொருள் பொருத்தம்பற்றியோ தெளிவுறுத்தியதாக இல்லை.

திணை துறைகளைப்பற்றிய செய்திகள் இவ்வாருகப் புறநானூற்றில் ஓர் அரசனைப்பற்றிப் பாடிய பல பாக்கள் பொருள் இயைபின்றி முன்பின்னுக மாறிக் கிடக்கின்றன. மேலும், காலவரையறையைப்பொறுத்தோ, அரசபரம்பரை யைப் பொறுத்தோ முறைமைப்பட ஒன்றன்பின் ஒன்ருக அமையவும் இல்லை. இவற்றையெல்லாம் அறிஞர் பெரு மக்களும், ஆராய்ச்சித் துறைப்பட்டாரும் ஆய்ந்து செப்ப னிட்டால் புறநானூற்றுப் பாடல்களை மக்கள் மயக்கமின்றிப் பொருளுணர்ந்து மகிழ்வார்கள்.

புறநானூற்றில் பாடிய புலவர்பெருமக்களுள் நூற்று ஐம்பத்தெட்டுபேர் பெயருடையவராகவும், பன்னிரண்டு பாட்டுக்களைத் தந்தும் பெயர் அறியப்படாதவராகச் சிலரும் இடம் பெற்றிருக்கின்றனர். இப்புலவர் பெருமக்களுள் ஒரு பாட்டே பாடியவரும், பலபாட்டுகளைப் பாடியவரும் உண்டு. அவர்தம்முள் பலபாடல்களைப் பாடிப் பெருமைகொண்ட பலருள் கோவூர்கிழாரும் ஒருவராவர்.

இவரால் பாடப்பெற்ற சோழ அரசர்கள் ஐவராவர்.

1. சோழன் நலங்கிள்ளி 31, 32, 45, 68, 308, 382, 400.
2. நெடுங்கிள்ளி 44.
3. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் 70, 41
4. காரியாற்றுத் துஞ்சிய கிள்ளிவளவன் 47.
5. குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் 373.

இவ்வரசர்கள் 'சோழன்' என்ற அடைமொழியையும், 'நலம்', 'நெடும்' என்ற அடைமொழிகளையும் இங்கிருந்த அல்லது இன்னது செய்த அல்லது இங்குத் துஞ்சிய(இறந்த) என்பனபோன்ற செய்தி அடைகளையும், 'வளவன்' என்ற பின்மொழியையும் தம்பெயருக்கு இருமருங்கும் கொண்டிருக்கின்றனர். நெடுங்கிள்ளி 'சோழன்' என்ற அடையின்றியே வழங்கப்பெறுகின்றான்.

## சோழன் நெடுங்கிள்ளி

இவன் கோவூர்கிழாரால் பாடப்பெற்ற இந்த அரசர்கள் ஐவருள் காரியாற்றுத் துஞ்சிய கிள்ளிவளவன், நெடுங்கிள்ளியாதல் கூடும் என்பர் ஐயர் அவர்கள் இவன் உறையூரைத் தனக்குத் தலைநகராகக்கொண்டு ஆண்டவன். இவனுக்கு ஆவூர் என்ற தலைநகரும் உரியதாகும். இவன் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சோழன் நலங்கிள்ளிக்குப் பகைவன். நலங்கிள்ளி இப்பகை காரணமாக நெடுங்கிள்ளியின் உறையூரையும்,ஆவூரையும் தனக்கு உரிமையாக்க முனைந்து

முற்றுகையிட்டிருக்கின்றான். இதனால்தான் நலங்கிள்ளியின் முற்றுகையின்போது கோவூர்கிழார் நெடுங்கிள்ளியிடம்

"அறவையாயின் நினதெனத் திறத்தல்"

என்று கூறுகின்றார். அன்றியும் ஓரிடத்து,

"உறந்தை யோனே குரிசில்
பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே" (புறம் : 68)

என்று நலங்கிள்ளி அவனுக்குரிய காவிரிப்பூம்பட்டினம் நீங்கி உறையூரில் வாழுகின்ற செய்தி குறிக்கப்பெற்றுள்ளது.

## சோழன் நலங்கிள்ளி

இவன் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். சேர, பாண்டியர்களை வென்று மேம்பட்டவன். எனினும், இவன் அரசர்க்கு இயல்பாக வேண்டப்படுவதாய ஈகைக்குணமற்றிருந்தான் அதனால்தான் இளந்தத்தன் என்ற புலவன் அவன் நாட்டினின்று நீங்கி அவனுக்குப் பகைவனாய் விளங்கிய நெடுங்கிள்ளியின் நாட்டிற்குச் சென்று, ஆங்கு அவனால் ஒற்றனென்று ஐயுற்றுக் கொல்லப்பெற நின்றான் போலும்! அத்தயை அவனை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடி அவனுக்கு ஈகைக்குணமுண்டாகச் செய்துள்ளார். புலவரால் திருத்தப்பெற்ற சோழன் நலங்கிள்ளி பின்னர் கவிபாடும் இயல்புடையவனாகிப் புறநானூற்றில் "மெல்ல வந்தென்" (புறம் 73) என்ற பாட்டினைப் பாடியுள்ளான். இவனுக்குச் சேட்சென்னி என்றும், புட்பகை என்றும், தேர்வண்கிள்ளி என்றும் வேறு பெயர்களுண்டு.

## குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன்

இவன் சிறுகுடிகிழான் பண்ணன் மீது "யான்வாழு நாளும் பண்ணன் வாழிய" என்றதோர் அரிய பாட்டினைப் பாடியுள்ளான். இவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டவன். அதியமான் நெடுமானஞ்சியோடு சேர்ந்து மலையமான்

திருமுடிக்காரியைக் கொன்றவன். திருமுடிக்காரி மாய்ந்த பின்னும் அவன்பால் நின்ற பகைமை நீங்காணுய் அவன் மக்களை யானைக்கிடத்துணிந்தவன். இவன் படையாற்றல் மிக்கவன். இவன் ஆட்சியின்போது ஒருகால் நிலம் விளை வின்றிப் போக, மக்கள் இறைப்பொருள் தர இயலாப்போது அரசன் ஆணையாளர்கள் மக்கட்குக் கொடுமை செய்தனர். அதுகண்டு பொருது வெள்ளைக்குடி நாகனுர் இவனைப் பாடி மக்கட்குக் கேடு பயந்த வரிக்கொடுமையை நீக்கினுர் என்று தெரிகிறது. இவன் கருவூர்ச் சேரனைக் கொன்றிருக் கின்ருன்.

## குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன்

இவன் சேரன் ஒருவனேடு பகைகொண்டு அவனுடைய கருவூரை அழித்த செய்தி மட்டும் தெரிகிறது. கோவூர் கிழார் இவனை வாகைத் திணையில் மறக்களவழி, ஏர்க்கள உருவகம் என்ற துறையில் சார்த்திப் பாடியுள்ளார்.

## கோவூர்கிழார்

இவர் சோழ நாட்டிலுள்ள கோவூர் என்ற ஊரினர். இவர் சோழப் பேரரசுக்குரிய புலவர்களுள் ஒருவர். உறையூரோடு அதனைச் சார்ந்த ஆவூர் போன்ற இடங்களைத் தமக்குத் தலைநகரங்களாகக் கொண்டு ஆண்ட சோழர் களுக்கும், புகாரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சோழர்களுக்கும் பகை நிகழும்போதெல்லாம் அவர் களுடைய குடி கெடாதவாறு சந்து செய்வித்துக் காத்தவர். அக்குடிக்கு ஆள்வோரான் வரும் பழிகளை ஆண்டாண்டு நின்று தகைத்தவர்; சோழகுடி என்றும் நின்று நிலவ அரும்பாடுபட்டவர்.

நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் பகைத்து நின்ற காலை நெடுங்கிள்ளிக்குரிய ஆவூரை நலங்கிள்ளி முற்றுகை யிட்டான். நெடுங்கிள்ளியின் கதவடைப்பால் மக்கள் அலமந்தனர். அதன்வழிச் சோழகுடியுள் வந்த ஒருவனுய

நெடுங்கிள்ளிக்குச் சாரும் பழியினைத் துடைக்கவேண்டிக் கோவூர்கிழார் அவன்பாற் சென்று, அவன் செய்யும் செயலால் நிகழும் கேட்டினையும், வரும் பழியினையும் சுட்டிக் கண்ணின்று கண்ணறக் கூறிக் கழறியுள்ளார். இவற்றைப் பார்க்கும்போது இவர் சோழர்க்குப் பழி புகாது காத்து, சினந்திருப்பானை இடித்துரைப்பதால் தமக்கு வரும் கேட்டினையும் பொருட்படுத்தாது திருத்தும் பெற்றியர் என்பது தெளிவாகின்றது.

இதுபோல் சோழன் நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் பகைத்துப் பொர நின்றபோது, கோவூர்கிழார் அவர்கள் இருவரும் செய்கின்ற செயலால் சோழ குடிக்கு இல்லாப் பழி ஒன்றைச் சார்த்த இருப்பதைச் சுட்டிக்காட்டி அறிவு கொளுத்தித் தகைக்கின்றார். இவற்றையெல்லாம் காணும் போது அறிவு வேண்டுவழி அறிவு உதவும் அவர்தம் தன்மையும், சோழ குடிக்கு எவ்வாற்றானும் குறை நேராது தடுக்கும் பெற்றியும் புலனாகும்.

நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் நடந்த பகை காரணமாக இளந்தத்தன் என்ற புலவனை, நெடுங்கிள்ளி ஒற்றன் என்று கருதிக் கொல்ல நின்றான். ஆண்டும் கோவூர்கிழார் தம் நுண்மாண் நுழைபுலத்தால் அவனைக் கண்ணின்று கண்ணறக் கூறிக் கடிவது தவிர்ந்து, குறிப்புப் பொருளில் அவன் மேற்கொண்ட செயலின் தன்மையினையும், அதனால் வந்துறும் துடைக்கவொண்ணாப் பெரும் பழியினையும் சுட்டிக்காட்டி, இளந்தத்தன் விடுதலையால் அரசனுக்கும், தமக்கும், வீடுபெற்ற புலவனுக்கும், யாருக்கும் எப்பழியும் வாராதவாறு காத்த பேரறிவாளர். இவர் அறிவில் தெளிவு கொண்டு, வினைவில் நோக்கமாகிச் செயலில் திறம்படும் இயல்பு இங்குப் புலனாகின்றது.

இதுபோலவே சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்ற நலங்கிள்ளி, மலையமான் திருமுடிக் காரி இறந்தபின்னும் அவன்பால் நின்ற பகை நீங்கானாய் அவன் மக்களை யானைக்கு இட்டுக் கொல்ல நினைந்தான்.

அதுபோழ்து கோவூர்கிழார் நலங்கிள்ளி துணிந்த செய லால் அவனுக்குறும் பழியையும், அதன்வழி அவன் வழி வருவோர்க்கு வந்தடையும் கறையினையும் அவர் தம் சூழ்ச்சித்திறனால் "கேட்டனையாயின் வேட்டது செய்மே" என்று கூறி, அவன் போக்கிற்கு விட்டு அவனுக்கோர் அறிவுத் தெளிவினைப் பிறப்பித்து அம்மக்களை வீடுசெய்து துடைத்துப் பேரருளாளராக விளங்குதலைக் காணலாம்.

இவருக்கு இத்தகைய ஆற்றல்கள் இருப்பதோடு அரிய பல கோட்பாடுகளும் உண்டு. அரசர்கள் எப்படி இருக்க வேண்டும். ஒரு நாடு எப்படி இருக்கவேண்டும், வீரர்கள் எப்படி இருக்கவேண்டும், புலவர்கள், பாணர்கள், விறலி யர்கள், பொருநர்கள் முதலியோர் எத்தகைய கோட்பாட் டினராக இருத்தல்வேண்டும், அவர்களைப் பேணும் அரசர் கள் எப்படி இருக்கவேண்டும் என்பனபோன்ற செய்தி களில் இவர் தம் அரிய குறிக்கோள்களை வெளிப்படுத்து கின்றார்.

அரசன் என்போன் மேற்கொள்ளும் செயல் எதுவா யினும் அஃது அறந்தலைப்பட்டதாதல் வேண்டும் என்பது அவர்தம் அடிப்படைக் கொள்கை. அதனால், அரசன் ஈட்டும் பொருளும் அதன்வழி அவன் நுகரும் இன்பமும் அறத்தை உள்ளீடாகக்கொண்டே சிறக்க வேண்டும் என்பதைச்,

"சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல"

என்று கூறுவதுகொண்டு அறியலாம். அவர்தம் இத்தகைய கருத்திற்கு இடந்தந்து நின்றது சோழனின் வாழ்வு. அதனை அவர் பாடுவதினின்றும் அவருக்கிருக்கும் இக்கருத் தினை நாம் உய்த்துணரலாம். அரசனுடைய நகர் இப்படி இருக்கவேண்டும் என்று அவர் கொண்ட கருத்தினை ஏற்றுக் கிடந்தது சோழநாடு. அதன்வழித் தாம் கருதும் நாட்டிற்கு இலக்கணம் கூறவந்த கோவூர்கிழார், தள்ளா விளையுளும், தாழ்விலாச் செல்வமும், தளர்வறியாக் குடி

வாழ்வும் என்றும் அருது, பகையும் பிணியும் காணுது இருத்தல் வேண்டும் என்கின்ருர்.

"தைஇத் திங்கள் தண்கயம் போலக்
கொளக் கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்
அடுதீ அல்லது சுடுதீ அறியாது
இருமருந்து விளைக்கும் நன்ஞடு"

என்று கூறுவது கொண்டு அவர் கருத்தறிய வாய்ப்புண்டு. அன்றியும் அந்நாட்டிற்கு வயலும், காடும், கடலும் எங்ஙனம் வளம் சிறந்தனவாக இருக்கவேண்டும் என்பதனை,

"வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர் பூத்த தும்பின
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும் பின்று
கடலே, கால்தந்த கலனெண்ணுவோர்
கானற்புன்னைச் சினை நிலைக்குந்து
கழியே, சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கனன்ஞட் டுமணெலிக்குந்து
அன்ன நன்ஞடு"

என்று சோழநாட்டு இயல்புரைக்கும்முகத்தான் கூறுவதைக் காணலாம்.

இப்படியெல்லாம் விளையும் பொருள்கள் ஆண்டே நின்றுவிடாமல் யாண்டும் பரவி எல்லோர்க்கும் பயன்பட வேண்டுமென்ருல் அது வாணிபத்தான் ஆதல் வேண்டும். அவ்வாணிபமும் பண்டமாற்று முறையிலிருப்பின் எத்துணையோ நலம் பயப்பதாக இருக்கும். தம் பண்டத்தினைக் கொடுத்துப் பிறர் பண்டத்தினைப் பெறுவோர், கொடுத்த பொருளுக்கும் கொண்ட பொருளுக்கும் ஒப்புமை நோக்கி உளநிறைவு கொள்ளவேண்டும். இது செம்மையான வாணிபம் என்பது அவர் கருத்து. இச்சிறப்பினைப் பாண்டி நாட்டைக் கூறுமுகத்தான்,

"கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்தசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்
தயிர்கொடு வந்த தசும்பும் நிறைய
ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்"

என்று பேசுவது கொண்டு அறியலாம்.

அடுத்து, ஓர் அரசன் வாழும் வீர வாழ்வு, கலைவாழ்வு, கொடை வாழ்வு முதலியன எங்ஙனம் அமைதல் வேண்டும் என்பதைப்பற்றியும் அவர் கொண்ட கருத்துக்களைத் தெளிவு படுத்துகின்றார். அரசன் வினை மேற்கொண்டால் அவன் அவ்வினையையே இன்பமாகக் கோடல் வேண்டுமன்றி அதனினும் வேறொன்றினை இன்பமாகக் கொள்ளுதல் ஆகா தென்பது அவர் கொள்கை. இதனை,

"நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே"

என்பதால் தம் கருத்தறிவிக்கின்றார்.

அரசனுவான் ஒரு நாட்டினை வெல்லக் கருதினால் அவ் வெண்ணத்தினைக் கடைபோக நினைந்தவாறு கருதியது முடிப்பவனாக இருத்தல்வேண்டும்; அவனே காவலனுவான் என்பதை,

"வேட்கோச் சிறுஅர் தேர்க்கால் வைத்த
பசுமட் குரூஉத்திரள் போலவவன்
கொண்ட குடுமித்தித் தண்பணை நாடே"

என்று தம் கருத்தினை அவன் செயலில் தெளிவுபடுத்து கின்றார்.

அரசன் பகைத்துப் படைமேற்கொண்டு பொர முற்படும் போது அவனுக்கு அச்செயலால் வரும் தீங்கினைப் புள்ளும், உன்னமும், கனவும், உடுக்கண உதிர்வும், தீ வெள்ளித் தோற்றமும் எங்கணும் தோன்றிச் செவ்வனம் நேர் நின்று கூறுவனபோல் அறிவித்துத் தோன்றினும் அவற்றைப்

பொருட்படுத்தாது தன் வீரத்தினையே பெரிதாகப் பேணிப் பொருதல் வேண்டும் என்பது அவர்தம் கொள்கை. அதனை நலங்கிள்ளியின் துணையினுல் உணர்த்துகின்றூர். இதனை,

"காலனும் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே
திசையிரு நான்கும் உற்கம் உற்கவும்
பெருமரத் திலையில் நெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக்குரல் இயம்பவும்
எயிறுநிலத்து வீழவும் எண்ணெய் ஆடவும்
களிறுமேல் கொள்ளவும் காழகம் நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்
கனவின் அரியன காணு நனவிற்
செருச்செய் முன்ப"

என்று கூறுவதால் அறியலாம்.

வேந்தன் என்போன் எவ்வாற்றுனும் மானமழி செயற்கு இடந்தராது வாழ்தல்வேண்டும் என்பது அவர்தம் திண்ணிய கருத்து. அதனை அடைத்திருந்த நெடுங்கிள்ளியைக் கடிந்துரைக்கும் முகத்தான் புலப்படுத்துவதைக் காணலாம்.

"திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதில் ஒருசிறை ஒதுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே"

என்பது அவர் வாக்கு.

அரசன் வீரவளம் எத்துணைப் பெற்றிருக்கின்றூனே அத்துணை அன்பு வளமும், காதற் சிறப்பும் பெற்றிருத்தல் வேண்டும். இவையன்றியும் அவனுக்குத் தோற்றப் பொலிவும், அருளும் இன்றியமையாதன என்பது அவர்தம் கருத்து. இதனை,

"..................................பூண்சுமந்
தம்பகட் டெழிலிய செம்பொறி ஆகத்து
மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையின்
ஆடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை"

என்று கூறிக் காட்டுகின்றார்.

புலவர்களை எப்படி அரசன் மதிக்க வேண்டும் என்பதையும், அவர்கள் எப்படிப் பேணப்பட வேண்டுமென்பதையும், அவர்கள் தம்மைப் பேணுவோர்பால் எத்தகைய உணர்வுடையோர்களாக இருக்கவேண்டுமென்பதையும் இவர்,

"வேண்டியது உணர்ந்தோன் தாள் வாழியவே"

என்று பாடி வெளிப்படுத்துகின்றார்.

அரசன் தன்னை நோக்கி வருகின்ற பாணனோ, புலவனோ பொருநனோ, விறலியோ தம்மிடம் காட்டும் புலமையினை அறிந்து வரிசையறிந்து பொருள் அளிக்கவேண்டும். கலையை மதியாமலோ, கலைத்திறன் காணாமலோ, "காணாது ஈயும் பரிசில்களை" அவர்கள் வாணிபம்போலக் கொள்ளக் கூடாது. அவர்கள் பொருளினைப் பேணி நாளை வேண்டுமே என்று வைத்துப் பொருள் போற்றலால் கலை மறந்தவர்கள் ஆதலும் கூடாது. அரசன் அவர்தம் வாழ்க்கை இயல்பினை அறிந்து அதற்குத்தகப் பேணவேண்டும். அவர்கட்குப் புலமையை மதிப்போரும் அதன்வழித் தம்மைப் பேணுவோரும் யாண்டிருப்பினும் ஆண்டுப் புகுந்து வாழும் உரிமை வேண்டும். அது அரசப் பகையால் தடைப்படல் ஆகாது என்பனபோன்ற கருத்துக்களை,

'வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை' என்றும்,

'பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பாது உண்டு கூம்பாது வீசி' என்றும்,

'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய என்னாது சுரம்பல கடந்து'

என்றுங் கூறலால் அறியலாம்.

அடுத்து, இவர்களைப் பேணும் அரசன் கொடுக்கும் கொடை, அவர்கள் கலைக்கு ஏற்றதாக அமைந்திருக்க வேண்டுமேயொழிய ஏதோ வினைவயத்தால் வாய்த்ததாக இருத்தல் கூடாது என்பது இவர் கருத்து. இதனை.

"விறகொய் மாக்கள் பொன்பெற் றன்னதோர்
தலைப்பா டன்றவன் ஈகை"

என்பதால் அவர் புலமைக்கு அளிக்கும் பெருமை புலனாகும்.

ஓர் அரசனால் பேணப்படுகின்ற புலவர் பெருமக்கள் உலகத்தில் எத்தகைய தீங்கு நிகழ்ந்து எதுவந்துறினும் அதனை அவர் அறியாதவாறும், அதனால் அவர்கள் கலை தடைப்படாதவாறும் காத்து அவர்கள் கலையே கவலையாகப், புலமையே நாட்டமாகத், திறங்காட்டலே செயலாக, இன்புறுத்தலே தொழிலாக வாழவேண்டுமென்பது அவர் தம் கோட்பாடு. அதனை,

"குணதிசை நின்று குடமுதற் செலினும்
குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினும்
தென்திசை நின்று குறுகாது நீடினும்
யாண்டும் நிற்க வெள்ளியாம்
வேண்டிய துணர்ந்தோன் தாள்வா ழியவே"

என்று கூறுவது கொண்டு தெளியலாம்.

இப்படியெல்லாம், உலகத்து நிகழ்கின்ற எந்தக் கேடு குறித்தும் கலைஞர்கள் கவலாது இருக்கவேண்டின் இங்ஙனம் பேணப்பெறவேண்டுமென்பதனை,

"நெடுநீர நிறைகயத்துப்
பனிமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவும்
சூடுகிழித்து வாடுன் மிசையவும்
ஊன்கொண்ட வெண்மண்டை
ஆன்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
ஈத்தோன் எந்தை"

என்று பாடி அறிவிக்கின்றார்.

கொடை கொடுக்கும் அரசன் அவர்களைச் செல்வராக்க வேண்டும் என்பது அவர்தம் வேட்கை. ஆகவே,

'செல்வை யாயின் செல்வை ஆகுவை'

என்று குறிக்கின்றார். அவர்கள் அத்தகைய செல்வர் ஆகுவதற்குக் கொடுக்கும் கொடை இவ்வளவு பெரியதாக இருக்கவேண்டும் என்பதனை,

"கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடிப்
பூவா வஞ்சியும் தருகுவன் ஒன்றோ
வண்ணம் நீவிய வணங்கிறைப் பணைத்தோள்
ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
மாட மதுரையும் தருகுவன்" என்கின்றார்.

அன்றியும், இப்புலவர்களுக்கு அரசன் தருகின்ற கொடை பெரும் நாடுகளாக இருப்பினும், அப்புலவர்கள் விரும்பினால் அவற்றைப் பிறர்க்கு வழங்கிவிடுமளவிற்குச் செல்வ வளம் உடையவர்களாக ஆக்கவேண்டும் என்பது அவர்தம் கொள்கை.

"வறனொரீஇ வழங்கு வாய்ப்ப
விடுமதி அத்தை கடுமான் தோன்றல்
நினதே, முந்நீர் உடுத்தவிவ் வியனுலகறிய
எனதே"

என்று பாடி அரசனுடையவெல்லாம் புலவருடையவாக இருக்கவேண்டுமென்று அவர் கொண்ட கருத்தினைப் புலப்படுத்துகின்றார்.

புலவர்களை அரசன் பேணினால் அக்கொடை பெற்ற புலவன் பொருள் நினைப்பு அற்றவனாகிவிடல் வேண்டும் என்ற அவர் கருத்தை,

"பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே"

என்பதாலறியலாம்.

இப்படியெல்லாம் அரசனுடைய வளம் துய்த்த புலவர் பெருமக்கள் எத்தகைய நன்றியறிதலும் கோட்பாடும் உடையவராக இருத்தல் வேண்டும் என்பதனை,

"நலங்கிள்ளி நசைப் பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல் வேண்டேம்.
அவற்பாடுதும் அவன்தாள் வாழியவென"

என வாழ்த்தெடுத்துப் புகழ் பரப்பும் இயல்புடையவராக வேண்டும் என்பதனைத் தெளிவுறுத்தல் காணலாம்.

கோவூர்கிழார் ஒரு நுண்கலை வல்லுநர். கலை பயிலப் பயிலப் பண்படுவது. மணற்கேணியைப்போல் ஊறும் கலைவளம் அறிதோறும் அறியாமை காட்டவல்லது. யாவர்க்கும் ஒவ்வொன்று எளிதாதலின் கலைகளில் தனித்த தேர்ச்சி பெற்றோர் வளர்த்திருக்கும் கலை நுட்பத்தினைச் சுவைப்போரும் மதிப்போரும் அருகிப்போதல் இயல்பு. நுண்மாண் நுழைபுலம் மிக்கவர்களுடைய புலமையை அறிவோரும் அத்தகைய புலமை மிக்கோராய் இருத்தல் வேண்டும். அதற்கு முயற்சியும் ஆர்வமும் பெரிதும் வேண்டப்படுவன. அவை நாட்டில் குறைந்து நுண்மாண் நுழைபுலம் அஃகுதல் கண்டு நொந்த கோவூர்கிழார் ஒரு பாணனாக இருந்து,

"உடும்புரித் தன்ன என்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணது
சில்செவித் தாகிய கேள்வி நொந்து நொந்து
ஈங்கெவன் செய்தியோ பாண!"

என்றழைக்கின்றார். இங்குப் பாணனிடம் இங்ஙனம் விளக்கிக் கூறுவது கொண்டு பார்த்தால் கலைபற்றியும் கலைஞர்பற்றியும் அவர்கொண்ட கருத்து விளங்கும்.

இவைபோன்ற அரிய பல கருத்துக்களை உளங்கொள உணர்த்துவதில் திறம்பட்டவர் கோவூர்கிழார். இவர் திறமையெல்லாம் இவர் கையாளும் உவமையின் தன்மையாலாகும். விளக்கி விளக்கிப் பலகால் சொல்ல வேண்டிய செய்திகளை உவமைமுகத்தான் தெளிவாக்கல் எளியதொரு செயலாகும். ஆனால், அதற்கு உலகியலறிவோடு பல திறப்பட்ட கலையறிவும், அவற்றின் நுட்பங்களும் தெரிய வேண்டும். இவையெல்லாம் ஒருங்கு வாயப்பெற்றவர் கோவூர்கிழார்.

புலமை மிக்கவர்கள் ஊன் உருகி உள்ளொளி பெருகி என்பெழுந்து விளங்கும் யாக்கையராய் மெலிந்திருப்பர் என்பதனை அறிந்து, "உடும்புரித்தன்ன என்பெழு மருங்கில்" என்று கூறுகின்றார்.

வறுமைத் துன்பம் நல்லராவின் தீண்டுதலுக்கு ஒப்பாகி இறப்பினைத் தருவது என்பதனை,

"நிறனுற்ற வராஅப்போலும் வறன்"

என்று உவமை கூறுகின்றார்.

தடாரிப்பறையைச் சுட்டவந்தவர்

"கயத்துவாழ் யாமை காழ்கோத் தன்ன"

என்கின்றார். இவைபோன்ற பல அரிய கருத்துக்களை உவமை வாயிலாக எடுத்துக்கூறும் இவர் திறம் எண்ணி மகிழற்பாலது.

இதுகாறும் கூறியவாற்றால் கோவூர்கிழார் நிகழ்ச்சிகளை நடந்தவைகளாகவும், நிகழும் செயல்களாகவும் கூறிய போதிலும் ஆண்டாண்டு அவர்கொண்ட பலதிறப்பட்ட இத்தகைய கருத்துக்கள் பொதிந்து கிடப்பதைக் காணலாம். அவர்தம் பாடல்கள் அவருடைய பண்பாட்டினையும், கோட்பாட்டினையும், வேட்கையினையும் புலப்படுத்தலைக் காணலாம்.

இவையெல்லாம் புறத்துறைப் பகுதி. இவர் அகத்துறையில் வல்லுநர்; தலைவி, தோழி, தலைவன் இவர்கள் மனநிலைகளைத் தெளிந்து உள்ளத்துணர்வுகளைப் புலப்படுத்துவதிலும் வல்லவர். களவொழுக்கமுடைய தலைவனும் தலைவியும் மணம் நிகழ்பொழுது தாம் ஒருவரை ஒருவர் அப்பொழுதுதான் காண்பதுபோலப் புதுநாண் கொண்டு நிற்கும் நிலையை,

"...................... நம் காதலர்
புதுவர் ஆகிய வரவுநின்
வதுவைநாண் ஒடுக்கமும் காணுங் காலே"

என்று பாடுகின்றார்.

இவர் விலங்கினங்களின் இயல்பினைத் தெளிவாக உணர்ந்திருக்கின்றார். யானை கன்றீனுவதும், அதன் வயவுநோய்க்குக் களிறு தினைக்கதிர் கொணர்ந்து ஊட்டுவதும் போன்ற செய்திகளை,

"கடுஞ்சூல் வயப்பிடி கன்றீன்று உயங்கப்
பாலார் பசும்புனிறு தீரிய களிசிறந்து
வாலா வேழம் வணர்குரல் கவர்தலின்"

என்று பாடுவதால் இவர் இச்செய்திகளையெல்லாம் நன்கு அறிந்திருக்கின்றார் என்பது தெளிவு.

இப்படியெல்லாம் பார்த்தால், கோவூர்கிழார் கூலம் பற்றிய அறிவோடு பாம்பு, பறவை, விலங்கு முதலிய உயிரினங்கள் பற்றிய அறிவினையும் பெற்றிருக்கின்றார். என்பதும், அரசியற்கலை, போர்க்கலை, இசைக்கலை, நிமித்தக்கலை போன்ற கலைத்திறன்களும் வாயப்பெற்றவர் என்பதும் புலனாகும்.

இவைபோன்ற பலதிறப்பட்ட கருத்துக்களையும், கலைக் கூறுபாடுகளையும், பொருட்பாகுபாடுகளையும் கோவூர் கிழார் தம் பாக்கள்தோறும் அமைத்திருப்பதை ஊன்றிப் பார்த்து மகிழ்வோம்.

## புறநானூற்றுப் பாடல்கள்

| எண். | புறம் எண். | திணை. | துறை. | பாட்டு முதற் குறிப்பு | பாடப்பெற்றோர். |
|---|---|---|---|---|---|
| 1 | 31 | வாகை | அரசவாகை மழபுல வஞ்சியுமாம் | சிறப்புடை மரபில் | சோழன் நலங்கிள்ளியைப் பாடியது. |
| 2 | 32 | பாடாண் | இயன்மொழி | கடும்பின் | சோழன் நலங்கிள்ளியைப் பாடியது. |
| 3 | 33 | வாகை | அரசவாகை | கானுறை வாழ்க்கை | சோழன் நலங்கிள்ளியைப் பாடியது. |
| 4 | 41 | வஞ்சி | கொற்றவள்ளை | காலனும்காலம் | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது. |
| 5 | 44 | வாகை | அரசவாகை | இரும்பிடி | சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தான் ஆவூர் முற்றியிருந்த காலத்து அடைத்திருந்த நெடுங்கிள்ளியைப் பாடியது |
| 6 | 45 | வஞ்சி | துணைவஞ்சி | இரும்பனை | சோழன் நலங்கிள்ளி உறையூர் முற்றியிருந்தானையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் பாடியது. |

| எண். | புறம் எண். | திணை. | துறை. | பாட்டு முதற் குறிப்பு | பாடப்பெற்ருேர் |
|---|---|---|---|---|---|
| 7 | 46 | வஞ்சி | துணைவஞ்சி | நீயேபுறவின் | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானைக்கிடுவுழிப் பாடி உய்யக் கொண்டது. |
| 8 | 47 | வஞ்சி | துணைவஞ்சி | வள்ளியோர்ப் படர்ந்து | சோழன் நலங்கிள்ளியுழை நின்று உறையூர் புகுந்த இளந்தத்தன் என்னும் புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்று வந்தான் என்று கொல்லப்புக்குழி பாடி உய்யக்கொண்டது. |
| 9 | 68 | பாடாண் | பாணற்றுப்படை | உடும்புரித் தன்ன | சோழன் நலங்கிள்ளியைப் பாடியது. |
| 10 | 70 | பாடாண் | பாணற்றுப்படை | தேஎந்தீந் தொடை | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது. |
| 11 | 308 | வாகை | மூதின்முல்லை | பொன்வார்ந் தன்ன | சோழன் நலங்கிள்ளியைப் பாடியது. |

| எண். | புறம் எண். | திணை. | துறை. | பாட்டு முதற் குறிப்பு | பாடப்பெற்றோர். |
|---|---|---|---|---|---|
| 12 | 373 | வாகை | மறக்களவழி, ஏர்க்கள உருவகமுமாம் | உருமிசை | சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் கருவூர் எறிந்தானைப் பாடியது. |
| 13 | 382 | பாடாண் | கடைநிலை | கடற்படை | சோழன் நலங்கிள்ளியைப் பாடியது. |
| 14 | 386 | பாடாண் | வாழ்த்தியல் | நெடுநீர | சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது. |
| 15 | 400 | பாடாண் | இயன்மொழி | மாகவிசும்பின் | சோழன் நலங்கிள்ளியைப் பாடியது |

அகத்துறைப் பாடல்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 16 | குறுந். 65 | முல்லை | பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குக் கூறியது | வன்பரல் | |
| 17 | நற். 393 | குறிஞ்சி | வரைவுமலிந்தது | நெடுங்கழை | |
| 18 | 38 | திருவள்ளுவமாலை | சிறப்புப்பாயிரம் | அறமுதல் | |

## 1. நல்லிசை வேட்டம்

சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல
இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை
உருகெழு மதியின் நிவந்துசேண் விளங்க
நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை அல்லது நீயொல் லாயே
நுதிமுகம் மழுங்க மண்டி ஒன்னார்
கடிமதில் பாயுநின் களிறடங் கலவே
போரெனில் புகலும் புனைகழல் மறவர்
காடிடைக் கிடந்த நாடுநனி சேய
செல்வே மல்லேம் என்னார் கல்லென்
விழவுடை யாங்கண் வேற்றுப்புலத் திறுத்துக்
குணகடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலும் உண்டென் றலமந்து
நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே. (புறம்: 31)

திணை : வாகை. துறை : அரசவாகை, மழபுல வஞ்சியுமாம்.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடியது.

பொழிப்புரை :

சிறப்புடை முறைமையால் பொருளும் இன்பமும், அறத்தின் பின்னே தோன்றும் காட்சிபோல, சேர பாண்டியருடைய இரண்டு குடைகளும், ஓங்கிய நினது ஒன்றாகிய வெண்கொற்றக் குடையின் பின்னாக நிற்கின்றன. நினது குடை மேம்பட்டிருத்தலோடு விளக்கமுடையதாக மதிபோல் ஓங்கிச் சேய்மைக்கண்ணே விளங்குகின்றது. புகழ் வேட்கையை விரும்பி, வெல்லும் போரினைச் செய்யும் பாசறைக்கண்ணே இருத்தலல்லது, நின் நகரின்கண் இருத்தலை உடன்படாய் நீ.

கோட்டினது நுனைமுகம் தேய்ந்தும் ஒடிந்தும் போவது குறித்து வருந்தாது, பகைவரது காவலையுடைய மதிலைக் குத்தும் நின்னுடைய யானைகள் அடங்கா.

பூசலென்று கேட்பின் விரும்பி அணியும் வீரக்கழலை யுடைய மறவர், காடு நடுவே கிடந்த நாடு சேய்த்தாதலால் யாம் போவேம் அல்லேமென்று கருதார்.

ஆதலான் ஓசை உண்டான விழவினையுடைய அவ் விடத்துப் பகைப்புலத்தின்கண்ணே தங்கிவிட்டு, நீ உன் பரி இவர்ந்து, கீழ்கடல் பின் ஒழிய, மேற்கடலினது வெள்ளிய தலையையுடைய திரை அதன் குளம்பை அலைக்கு மாறு வலமாக முறையே வருதலுமுண்டென்று நெஞ்சம் நடுங்க, அவலம் பரப்ப வடபுலத்தரசெல்லாம் துஞ்சாக் கண்ணர் ஆயினர்.

திணை, துறை விளக்கம்:

" வாகைதானே பாலையது புறனே "

(தொல். புறத். 18) என்பதும்

" தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப "

(தொல். புறத்: 19) என்பதும்

வாகைத் திணைக்குரிய சூத்திரங்கள். தொல்காப்பியத்தில் அரசவாகை என்றதோர் துறையில்லை. புறப்பொருள் வெண்பாமாலையில் அரசவாகை என்றதோர் துறையுண்டு. அதற்கு அரசனது இயல்பைக் கூறுதல் என்ற பொருளில்

" பகலன்ன வாய்மொழி
இகல்வேந்தன் இயல்புரைத் தன்று "

(புறப்பொருள் 157.)

என்று சூத்திரம் காட்டப்பெற்றுள்ளது. இச் சூத்திரப் பொருள் இப் புறப்பாட்டிற்கு ஏலாது. ஆதலால், வஞ்சித் திணையிலுள்ள 'இயங்குபடையரவம்" என்ற தொல்காப் பியர் கூறும் திணையிலும் துறையிலும் அடக்குதலே சாலச் சிறந்தது.

பாட்டின் அடிக்குறிப்பில் 'மழபுலவஞ்சியுமாம்' என்பது புறப்பொருள்வெண்பாமாலையில்,

"கூடார்முனை கொள்ளை சாற்றி
வீடறக்கவர்ந்த வினைமொழிந் தன்று"

என்று பகைவர் நாட்டைக் கொள்ளையிட்டு அவர்தம் இல்லங்கள் பாழ்படுமாறு அழித்த தொழிலைச் சொல்வது என்று இலக்கணம் கூறப்பெற்றுள்ளது. இவ்விலக்கணத் திற்கு இலக்கியமான இப்பாட்டில் இனி பகைவர் நாட்டை அழிக்கப்போகும் செய்தி குறிக்கப்பெற்றிருக்கிறதேயன்றி அழித்த செய்தி இல்லாமையாலும், தொல்காப்பியத்தில் வஞ்சித்திணையில் மழபுலவஞ்சி என்றதொரு துறை இல்லா மையாலும் பொருந்தாது.

விளக்கவுரை :

இப்பாட்டில் கோவூர்கிழார் நலங்கிள்ளியின் இயல்பு களையும் செயல்களையும் சுட்டி, அவனுக்கு வாய்த்த படைத் தன்மையையும் அவற்றின் செயலையும் குறிப்பதோடு, அவன் மரபினர் இயல்பையும், அவன் ஆற்ற இருக்கும் வினையை யும் குறித்து, அதன்வழி பிறநாட்டவர்க்கு நிகழும் மனமாறு பாட்டினையும் அதன்வழி நிகழும் செயல்களையும் குறிப்பிடு கின்றார்.

சோழன் நலங்கிள்ளி என்பான் வேந்தர் மூவரென்று சிறப்பிக்கப்பெறுவோருள் சேரனையும் பாண்டியனையும் வென்று அவ்வெற்றியால் மேம்பட்டிருக்கின்றான். சோழன் நலங்கிள்ளிகொண்ட வெற்றி, சேரபாண்டியரோடுகொண்ட வெற்றிமட்டுமின்றி அஃது அவ்விருவர்தம்மாலும் வென்று கொண்ட கடல்சூழ்மண்டிலம் அனைத்தையும் வென்றதாகும். இவ்வாறு ஒத்த பெருமையுடைய இருவரை வென்றதே தனக்கு மேம்பட்ட சிறப்பினை நல்குவதாதலால், அவன் அவ்விருவர்க்கும் தன்னிகரில் பெருமைதந்து, தன் வெற்றி யைச் சுட்டத் தன் குடையினை அவ்விருவர் குடைக்கும் மேம்பட நிறுத்தி வாழுகின்றான். இவ்வியல்பினைக் கூறவந்த கோவூர்கிழார் சோழனுக்குப் பெருமையும், சேரபாண்டி யர்க்குச் சோழனில் தாழ்ச்சியும், அதேபோது பண்பில் ஒப்பும் அமையுமாறு புகழக் கருதி அரியதொரு உவமையினைக் கையாளுகின்றார்.

" சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல
இரு குடை பின்பட ஓங்கிய ஒருகுடை
உருகெழு மதியின் நிவந்துசேண் விளங்க "

என்கின்றார்.

சோழன்குடை சேரபாண்டியர் குடைக்கு மேம்பட்டிருத்தற்கு, எல்லாவற்றிலும் மேம்பட்ட அறத்தினையும், அதன் வழிப்பட்டுச் சிறக்கும் பொருளினையும் இன்பத்தினையும் உவமையாகக் கூறுகின்றார்.

அறம் நிலைபேறுடையதும், அழியாததும், அழிக்க ஒண்ணாததும் ஆகும். அதனால் அதனைச் சார்ந்த பொருளும் இன்பமும் அப்பெற்றியினைப் பெறும். பொருட்சிறப்போ, அன்றி இன்பச்சிறப்போ அறந்தலைப்படாதபோது இருத்தலில்லை. அறவழிப்படாத பொருள் ஒருவனுக்குப் பொருளால் பெறும் அறத்தினையும் இன்பத்தினையும் நல்குவதில்லை. அஃதாவது களவில் பெற்ற பொருள் பெறும்போதோ, பெற்றுத் துய்க்கும்போதோ, துய்த்த பின்னோ இன்பம் நல்குவதில்லை. இன்பம்போல் துன்பம் தருவது அது. இதுபோலவே பிறர்மனை நயத்தல் போன்ற செயலும் பெறுமுன்னோ, துய்க்கும்போதோ, துய்த்த பின்னோ அச்சமும் அறக்கேடும் பழியும் பயப்பதன்றி, ஆண்மையும் இன்பமும் பீடும் பயப்பதன்று. இதனால், அறவழிப்பட்ட பொருளும் இன்பமும் ஒருவனுக்கு இம்மை இன்பத்தோடு மறுமையின்பத்தைப் பயத்தலையும், அறவழிப் படாப்பொருளும் இன்பமும் மறவழிப்பட்டவாகி இம்மைக் கேடும் பழியும் பயந்து மறுமையில் நிரயமும் பயந்து விடுதலையும்கண்டோம் அறமின்றிப் பொருளோ இன்பமோ சிறவாது என்பது ஒருதலை. இதனால்தான்,

" சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல " என்றார்.

இதுபற்றியன்றே திருவள்ளுவரும், தொல்காப்பியரும் தம் நூலுள் அறத்திற்குத் தலைமை தந்தனர்!

தனித்த முறையில் பாண்டியரும் சேரரும், பொருளையும் இன்பத்தையும் போல், தனித்த பெருமையுடையவரேனும், அறத்தால் இன்பத்திற்கும் பொருளுக்கும் பெருமை வருவது போல, சோழனுல் அவர்க்குப் பீடும் பெருமையும் உண்டு என்கின்ருர்.

வெற்றி தோல்வி என்று பார்க்கின்றபோது சோழனுக்கும் மற்றையோருக்கும் ஏற்றத்தாழ்வு இருப்பது வெளிப்படை. இவ் ஏற்றத்தாழ்வு இருந்தாலன்றி அவர்க்குப் பெருமையில்லை. அறவழிப்படாத பொருளும் இன்பமும் எங்ஙனம் நிலைதோறும் கேடு பயப்பனவோ, அங்ஙனமே சேரரும் பாண்டியரும், சோழனிடம் பணிந்து வாழாவிடில் அவர்களுக்குக் கேடுண்டு. அவர்தம்மால் பணியப்பெறும் சோழன், மரபுவழியாலும் பண்பு வழியாலும் என்றும் நின்று நிலவும் அறத்தின் இயல்புடையவன். அவ்அறந் தலைப்பட்டோனை வழிபட்டோர்க்குப் பீடும் பெருமையும் உண்டன்றி வழிபாடு காரணமாகத் தாழ்ச்சியில்லை. இதனுல்தான்,

"இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை
உருகெழு மதியின் நிவந்துசேண் விளங்க"

என்கின்ருர்.

சோழனுடைய குடை மேம்பட்டிருத்தலோடு விளக்க முடையதாகவும், மதிபோன்ற பண்புடையதாகவும் இருக்கின்றது. அரசர்கள் பொதுவாக வெண்கொற்றக் குடையினைப் பிடிப்பதென்பது வெயிலினையும் மழையினையும் மறைப்பதற்கன்று, அவர்களால் புரக்கப்பெறுவோரின் துன்ப வெம்மையை மறைப்பதற்கே ஆகும். அத்தகைய குடை உயரத்தால் உயர்ந்து காட்சியளிக்கவேண்டியது அன்று. அது பண்பால் எல்லோராலும் அறியப்பெறும் விளக்கமுடையதாகும், இளங்கோவடிகளும்,

"திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்த லான்"

என்று சோழருடைய குடைக்கு வாழ்த்தெடுக்கின்றார். மதியொடு பொருஉம் வெண்கொற்றக் குடையின் சிறப்பினை மற்றப் புலவர்களும்,

"ஈண்டுநீர் மிசைத்தோன்றி இருள்சீக்கும் சுடரேபோல்
வேண்டாதார் நெஞ்சுஉட்க வெருவந்த கொடுமையும்
நீண்டுதோன் றுயர்குடை நிழலெனச் சேர்ந்தார்க்குக்
காண்டகு மதியெனக் கதிர்விடு தன்மையும்
மாண்டநின் ஒழுகத்தான் மறுவின்றி வியன்ஞாலத்து
யாண்டோரும் தொழுதேத்தும் இரங்கிசை முரசினாய்!"

என்று பாராட்டுவதைப் பார்க்கும்போது, அரசன் வெண் கொற்றக் குடையைப் பிடித்திருக்கின்றான் என்றால் அவன் ஆளுகையிற் பட்டோருக்குத் தன்னாலும், தன் பகைவராலும், தன் பரிசனத்தாலும், கள்வராலும், நோயாலும் வரும் பகைகள் ஐந்தையும் தீர்த்து அறங்காக்கின்றான் என்று பொருள். இதனால்தான் அவன் பிடித்த குடையினை,

"ஓங்கிய ஒருகுடை
உருகெழு மதியின் நிவந்துசேண் விளங்க"

என்று பாராட்டுகின்றார்.

சோழன் தன் முன்னையோர்போலத், தனக்குரிய அரசியலைப் பெற்றதும், தன் முன்னையோர் பொருளைத் தன் பொருளாக வைத்து வாழும் இயல்பினை மதியாது, தானும் தன் ஆற்றலால் வெற்றி விளைத்துத் தன் பொருளாக்கி அறம் செய்ய வேண்டுமென்ற கோட்பாட்டினன் ஆகின்றான். அவன்,

"அரிதாய அறனெய்தி அருளியோர்க்கு அளித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலில் புணர்ச்சியும் தருமென"

கருதி அறம் தலைப்பட்ட போர் மேற்கொண்டு, அதன் வழிப் பட்ட பொருளினைப் பெற்று, அதனால் பெறும் இன்பத்தினை நுகர்ந்து, அவற்றால் வரும் மறுமைப்பயனை நுகர்வதற்கு அமைந்து சேரபாண்டியரை வென்றதோடு அமையாது, வேந்தர் எனப்படுவார் யாண்டிருப்பினும் ஆண்டாண்டு புகுந்து அவர்தம்மை வென்று வெற்றிவிளைக்கப் பாசறை

தோறும் வாழ்கின்றனேயன்றி, வென்ற வெற்றியில் நிறைவு கொண்டு தன்னகம் புகுந்து அமைந்துவாழும் வாழ்வுடையனும் இருக்கின்றனல்லன். இந்நிலையினை,

"நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை அல்லது நீஒல் லாயே"

என்று பரிவதுபோல் பெருமைகூறுகின்றார். அரசனுவான் பொதுவாகப் பெற்றதுகொண்டு அமைதிகொண்டு அரசியல்இன்பங்களை அரண்மனையினின்றும் நுகரவேண்டி இருப்பவும், அச்செல்வ இன்பவளம் தவிர்ந்து துன்பமே சூழ்ந்துகிடக்கும் பாசறையினை இன்பத்திற்கே கொள்கலம் எனக்கருதி வாழ்கின்றான் என்றால் "அரிதாய அறம் எய்தி அருளியோர்க்கு அளித்தலுக்கும், பெரிதாய பகைவென்று பேணுரைத் தெறுதலுக்கும்" நலங்கிள்ளி படும் பாட்டினைக் கோவூர்கிழார் தெளிவுறுத்தலைக் காணலாம்.

இத்தகைய மனநிலையுடையவனுக்குப் படையாக அமைந்த களிறுகளோ, அவனைப்போலவே போர்வெறி கொண்டு அமைதியற்றனவாயுள்ளன. அவை பகைவர் கடிமதிலினைப் பாய்வதாலும், 'மறங்கனல்வேல் மன்னர் மார்பு உழுவ' தாலும் தம் கோடுகள் தேய்ந்தும் ஒடிந்தும் போவது குறித்துக் கவலாவாய், இயற்கைப் போர்வெறியோடு குளகு ஊட்டப்படுவதால் மேலும் மதம்சிறந்து தோட்டிநீவித் தாங்கலாகா ஆகின்றன. அத்தகைய 'நில்லாத் தானை' அவனுடையது. இவையெல்லாம் நலங்கிள்ளியின் இயல்பும், அவனுடைய யானைப்படையின் பண்பும் என்றால் அவனுக்கு அமைந்த வீரர்தம் பெற்றி எத்தகையது என்பதை அடுத்துக் கூறுகின்றார்.

எப்பொழுதும் செருவேட்டுச் சிலைக்கும் செங்கண் ஆடவர்கள் அவராதலின்,

"பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அது போர்"

என்று போர் வருகைக்கு ஏக்கற்றிருந்து, அது வாய்த்துழி உளங்களிகூர்ந்து, 'காலார் கழலராய்' வீர உணர்வோடு பொருவோராய் அமைந்துள்ளனர். இவ்வீரர்களும் பகைப் புலத்தை வென்று ஆண்டுக் கொற்றவைக்கு முரசுமுழங்க, ஆர்ப்போடு களவேள்வி செய்து கிடக்கின்றனர். அவர்கள் விழவு அயர்ந்து வேற்றவர்புலத்தைத் தம் இருக்கையாகக் கொண்டு, மண்டு அமர்நசையொடு கண்படை பெருது போர்வேட்டுப் பாசறையினின்றும் வென்ற வெற்றியில் அமைதிகொண்டு தன்னகம் புகாது, மேலும் வெற்றி கொள்ளக் கருதும் அரசனைப்போலவே இவ்வீரர்களும் அவன் கண்டனையராய் உள்ளனர். குறித்த ஒரு போரைச் செய்து வென்றிகண்டு அதன்பின் தம்மகம் புகுந்து வாழ்வது போர்மேற் செல்லும் வீரர்கட்கு இயல் பேனும். நலங்கிள்ளிக்கு அமைந்த இம்மறவர்கள் தாம் ஒருகால் வென்ற நாட்டிற்கு மேலும் வெல்லக்கருதும் பகைவர்நாடு, சேய்த்தாய் காடிடையிட்டுக் கடத்தற்கு அருமையுடையதேனும் அதனைக் கருதார். அவர்கள்போர், வேட்கையானும் வெற்றிக்களிப்பானும் மேன்மேலும் படை யெடுத்துச் சேரலையே நினைப்பார்கள். போர்செய்த களைப் பகல ஓரிடத்திருத்தலையோ, அன்றித் தம் அகம்புகுதலையோ அவர்கள் செய்வதில்லை. தொலைவுகண்டு மலைத்தலும் பருவங்கண்டு மனைபுகநினைத்தலும் செய்யாது வெற்றியே கருதி மேன்மேற் செல்லுதலையே கொள்கையாகக் கொண் டனராய் இருக்கின்றனர். இதனை,

> "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்
> காடிடைக் கிடந்த நாடுநனி சேஎய
> செல்வேம் அல்லேம்"

என்பர் என்கின்றார்.

இங்ஙனம் மனஎழுச்சியுடைய மறவர்களோடு, வேற்றுப் புலத்து விழவயர்ந்த நலங்கிள்ளி, தன் வாம்பரி இவர்ந்து கீழ்கடல் பின்ஒழிய மேல்கடல் அலைநீர் அதன் காலில் அலைக்குமாறு, பரந்த பெருஞ்சேனையோடு தன் மரபினர் போலத் தன்முறை வெற்றியைப் பெறுதற்குச் செல்லும்

போது தம்மிடம் வருதலும் உண்டென்று தெருமந்து நெஞ்சகம் நடுங்கி அதன்வழிப் பேரிடருற்றுத் துளங்கிடும் வடபுலத் தரசரெல்லாம் துஞ்சாக்கண்ணர் ஆயினர் என்பதை,

"......................வேற்றுப்புலத் திறுத்துக்
குணகுடல் பின்ன தாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம் பலைப்ப
வலமுறை வருதலும் உண்டென்று அலமந்து
நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே"

என்கின்றார்.

சோழன் நலங்கிள்ளியைப் பாடிய ஆலத்தூர் கிழார் புறப்பாட்டில் இவனுடைய படைப்பரப்பினைக் கூறித் தெளிவாக்குகின்றார். சோழனுடைய படை மிகப்பரந்துபட்டது. அப்படை புறப்பட்டுச்செல்லுமேல் அதன் தூசிப்படை மேற்குக் கடற்கரையிலும் மற்ற யானை, தேர்ப் படைகள் இடை நிலத்திலும் காலாள் படை புகாரிலுமாக இருக்குமாம். முதலில் சென்ற தூசிப்படையிலுள்ள குதிரைகளின் காலில் மேலைக்கடலின் அலை அலைக்கும்போது மற்ற படைகள் புகாரினின்றும் தொடர்ந்துவருமாறு படைமேற்கொள்வானும் நலங்கிள்ளி.

இப்படைகளை முதலிடைகடை என மூன்றாகப் பகுத்து அவை செல்லும் காலஎல்லையைக் கூறவேண்டுமானால் முதலில்செல்லும் படை ஓரிடத்துப் பனைநுங்குகளைத் தின்று சென்றால், அதனைத் தொடர்ந்துவரும் படை அவ்விடத்திற்குச் செல்லும்போது பனைநுங்குமாறி காய்முதிர்ந்து பழமாவதால் பனம்பழம் தின்னுமாம். அப்படையைத் தொடர்ந்து வரும் இறுதிப்படை அவ்விடத்திற்கு வரும்போது தின்று கழித்த பனம்பழத்தின் கொட்டைகள் வேர்வீழ்த்துக் கிழங்காகிப்போவதால் ஆண்டுப் பனங்கிழங்கைத் தின்னுமாம். இப்படிப்படையெடுத்து வலமாக எழுந்து வலம்பெறச் செல்வானும்,

"தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ
வேந்துபீ டழித்த எந்துவேல் தானையொடு"

(புறம்: 225.)

என்று பேசுவதுகொண்டு அவன் சேனையின் பரப்பினையும், அவன் வலனேர்பு எழுந்து படையெடுப்பை மேற்கொள் வதையும் காணலாம்.

சோழன் நலங்கிள்ளி "வங்க மறிகடல்சூழ் ஏழுபார் வலம்வந்த மனுகுலச் சோழனைப்போலத்" தானும் பாரினை வீரங்கருதியும், புண்ணியங்கருதியும் வலம்வருதலை மேற் கொண்டு தம்மிடமும் வந்து அலைக்கநேரின் அது தாங்கொணுத் துயருடையது ஆயிற்றே என்று,

"நெஞ்சுநடுங்கு அவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே"

என்றும் உரை கொள்ளலாம்.

மேலும், சேர பாண்டியரை வென்றதோடு அமைதி கொள்ளாது பாசறை வாழ்வே பேரின்ப வாழ்வென்று கொண்ட நலங்கிள்ளி தன் இயல்பாலும், தன் படை இயல் பாலும் தம் அகம் புகுந்து அலைத்தலும் கூடுமென்று துஞ்சாக் கண்ணர் ஆயினர் வடபுலத்தரசர் என்று வெற்றிப் பொருள் தோன்றக் கூறினர் என்றலும் அமையும்.

அடுத்து, குணகடல் முதல் குடகடல்காறும் பரவி நிற்கும் படையை உடையவன் வலனேர்பு எழுந்து வடபுலம் வருதலும் கூடுமென்று அஞ்சித் துஞ்சாக் கண்ணராயினர் வடபுலத்தரசர்கள் என்றதொரு பொருள் கொள்ளப் பாடினரென்றலும் அமையும்.

"கச்சி யொருகால் மிதியா ஒருகாலால்
தத்துநீர் தண்உஞ்சை தான்மிதியா -பிற்றையும்
ஈழம் ஒருகால் மிதியா வருமேநம்
கோழியார் கோக்கிள்ளி களிறு" என்பதுபோல்

சோழன் நலங்கிள்ளியின் குதிரை குணகடல் பின்னெழிய குடகடலில் கால்லேக்குமாறு தாவவல்லது ஆதலின், குண புலனிருந்து குடபுலம் பாயும் மா, குடபுலமிருந்து வடபுலம் பாய்ந்துவரின் தங்கட்கு ஏதம் நிகழுமென்று துஞ்சாக் கண்ணராயினர் வடபுலத்தரசர் என்றும் கூறலாம்.

இங்ஙனமெல்லாம் கோவூர்கிழார் நலங்கிள்ளியின் பேராற்றலேயும், போர் வேட்கையையும், அறந்தலேப்பிரியா பண்பொடு சார்த்திக் கூறியதோடு அவனுடைய மறஞ் செறிந்த யானேப் படையின் இயல்பினேக்கூறி, அடுத்து அவனன்ன பண்பினராய் அமைந்த அவன் படைவீரர் இயல்பினே மொழிந்து, அவர்தம் அமையா மனநிலேக்கு ஒத்த அரசனின் படைப் பரப்பினேச் சுட்டி, இப்பெருமைகளால் அவன் யாண்டும் எங்கும் எண்ணியவண்ணம் போரிடும் பண்பினே உன்னி, நேர்ந்தாரன்றி நேராத வடவரும் உட்கி, அவலித்து உறங்காது கிடக்கும் பெற்றியினேக் காட்டி அவன் பீடெல்லாம் புலப்படுத்துகின்ருர்.

இப்பாட்டினே "இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை" என்ற ஓர் அடியினேத் துணேயாகக் கொண்டு வாகைத் திணேக்குரிய அரசவாகைத் துறையின்பாற்படுத்திக் கூற லாம். வாகை என்பது வெற்றி கண்டபின் கூறப்பெறுவது. சேரனேயும் பாண்டியனேயும் வெற்றிகண்ட சோழன் தன் குடையினே அவர்தம் குடையின் மேம்படுத்தி வெற்றிக்கு அறிகுறியாகப் பிடித்திருக்கின்ருன். இங்ஙனம் குடை உயர்த்திய நிலே அவன் அவரிடம் கொண்ட வாகையினேக் குறிப்பதாகும். நலங்கிள்ளி பெற்ற வாகையைச் சுட்டியதால் இப்பாட்டு அரசவாகை என்ற துறையின்பாற்பட்டதாயிற்று.

இப்பாட்டினே வஞ்சித்திணேக்குரிய மழபுலவஞ்சியின் துறையின்பாற்படுத்திக் கூறுவதற்கே இடமுண்டு.

"எஞ்சா மண்ணசைஇ வேந்தனை வேந்தன்
அஞ்சுதகச் சென்று அடல் குறித்தன்றே" என்பது விதி.

"நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீஒல்லாயே....................
...................களிறடங் கலவே
செல்வேம் அல்லேம்"

என்பன நல்ல சான்றுகளாகும்.

"துஞ்சாக்கண்ண வடபுலத்தரசே" என்று படைத்திறத்தையும் அரசன் பெற்றியையும் கண்டு பகைவர் நாடு அழிவது குறித்துப் புலவர் கவன்று பேசுவதாக வரும் இவ்வடிகளைக் கொண்டு இப்பாட்டு வஞ்சித்திணைக்குரிய மழபுலவஞ்சியாகக் கொள்ளக்கூடும். பகைப் புலத்திற்குப் படையெடுத்துச் செல்வது வஞ்சித்திணையாகும். படை திரட்டிச் செல்லும் அரசனையும், அவன் படைகளையும் கண்டு அவற்றால் அலைப்புண்ண இருக்கும் பகைவேந்தரையும், அவர்தம் படையையும், நாட்டு அழிவையும் குறித்துப் பரிந்து பேசுவதாகவோ, அல்லது பகைவர்கள், இது போன்று படையெடுத்துச் செல்லும் அரசன் பீடுகண்டு உடைந்து நடுங்கிக் கிடப்பதாகவோ கூறுவது மழபுல வஞ்சியாகும். இவ்வாறு கோவூர்கிழார் நலங்கிள்ளியைப்பற்றிப் பாடிய பாட்டு பல பொருளுடையதாகவும், நுண்ணிய உவமையுடையதாகவும் இருதிணையிலும் இடம் பெறுவதாகவும் அமைந்துகிடக்கின்றது. எனினும், ஒருதிணை கோடலே நன்று.

## 2. கொண்ட குடுமி

"கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடிப்
பூவா வஞ்சியும் தருகுவன் ஒன்றோ
வண்ணம நீவிய வணங்குஇறைப் பணைத்தோள்
ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
மாட மதுரையும் தருகுவன் எல்லாம்
பாடுகம் வம்மினோ பரிசில் மாக்கள்
தொன்னிலக் கிழமை சுட்டின் நன்மதி
வேட்கோச் சிறுஅர் தேர்க்கால் வைத்த
பசுமண் குருஉத்திரள் போலஅவன்
கொண்ட குடுமித்துஇத் தண்பணை நாடே" (புறம்: 32)

திணை : பாடாண் துறை : இயன்மொழி

அவன் கொண்ட குடுமித்து இந்நாடு ஆதலால் வஞ்சியையும் தருகுவன், மதுரையையும் தருகுவன். ஆதலால் பரிசின் மாக்கள் நாமெல்லாம் அவனைப் பாடுகம் வம்மினோ என்று முடிபுகொள்க.

பொழிப்புரை :—

இக்குளிர்ந்த மருத நிலத்தையுடைய நாடு நல்ல அறிவையுடைய குயக்குலத்து இளையோர் கலம் வனைதற்குத் திகிரிக்கண்ணே வைத்த பச்சை மண்ணாகிய கனத்த திரள் போல நலங்கிள்ளி கருத்திற்கொண்ட முடிவையுடைத்து. ஆதலால் நமது சுற்றத்தினது அடுகலத்தை நிறைக்கும் பொருட்டு விலையாக நெடிய துகிற்கொடியினையுடைய பூவாத வஞ்சியையும் தருகுவன். நிலமுடைய, கலவை பூசப்பட்ட வளைந்த சந்தினையுடைய முன் கையினையும் வேய் போன்ற தோளினையும் ஒள்ளிய நுதலினையுமுடைய விறலியர்க்கு மாடத்தையுடைய மதுரையை, "பூவிற்கு விலையாகப் பெறுக!" என்று தருகுவன். ஆதலால் பரிசின் மாக்களே ! நாமெல்லாம் அவனைப் பாடுவம் வம்மின்.

திணை, துறை விளக்கம் :—

தொல்காப்பியர் கருத்துப்படி பாடாண்திணை என்பது,

"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே" (தொல். புறத். 25)

என்று திணையின் பொது இயல்பு கூறி அதற்குரிய துறையாக, "அடுத்தூர்ந்து ஏத்திய இயன்மொழி வாழ்த்தும்" என்று பேசுகிறார். இதற்கு உரைகண்ட நச்சினார்க்கினியர் "தலைவன் எதிர்சென்று ஏறி அவன் செய்தியையும் அவன் குலத்தோர் செய்தியையும் அவன் மேலே ஏற்றிப் புகழ்ந்த இயன்மொழி வாழ்த்தும்" என்று கூறி அதனை மேலும் விளக்கி, "இக்குடிப் பிறந்தோர்க் கெல்லாம் இக்குணங்கள் இயல்பென்றும் அவற்றை நீயும் இயல்பாக உடையை என்றும் அன்னோர்போல நீயும் எமக்கு இயல்பாக ஈவாய் என்றும் உயர்ந்தோர் கூறி

அவனை வாழ்த்துதலின் இயன்மொழி வாழ்த்தாயிற்று. இதனை உம்மைத்தொகையாக்கி இயன்மொழியும் வாழ்த்தும் என இரண்டாகக் கொள்க" என்று எழுதியுள்ளார். இதற்குப் புறப்பொருள்வெண்பாமாலை ஆசிரியர்,

"ஒளியும் ஆற்றலும் ஓம்பா ஈகையும்
அளியும் என்றிவை ஆய்ந்துரைத் தன்று"

என்று சூத்திரம் செய்துள்ளார். அதாவது ஒருவனுடைய புகழ், ஒளி, கொடை, தண்ணளி முதலியவற்றை ஆராய்ந்து சொல்லுதலாம்.

இத்திணை, துறை விளக்கங்களை வைத்து நோக்குங்கால் இப்பாட்டு, தொல்காப்பியர் கருத்துப்படி சோழன் நலங்கிள்ளியின் முன்னையோர் இயல்போடு சார்த்தியே பேசப்பெற்றுள்ளது. இவனுடைய புகழ்

"தொன்னிலைக் கிழமை சுட்டின் நன்மதி
வேட்கோச் சிறுஅர் தேர்க்கால் வைத்த
பசுமண் குருஉத்திரள் போலஅவன்
கொண்ட குடுமித்து இத்தண்பணை நாடே"

எனப் பேசப்பட்டிருப்பதால் இஃது இயன்மொழி வாழ்த்தின் பாற்படும். இதனைப் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர், "இன்னோர் இன்னவை கொடுத்தார். நீயும், அன்னோர்போல அவை எமக்கு ஈக என என்னோரும் அறிய எடுத்துரைத்தன்று" என்று ஒத்தே கூறுகின்றார்.

விளக்கவுரை :—

சோழன் நலங்கிள்ளியின் இயல்பையும் அவன் முன்னையோர் இயல்பையும் தெளிவாகத் தெரிந்தவர் கோவூர்கிழார். அவர் அவன் இயல்பினைப் பாடக்கருதிப் பரிசில் மக்கட்கு அவன் பண்பினை அறிவுறுத்தி அவர்கட்குத் தலைமைதாங்கிப் "பாடுகம் வம்மினோ பரிசில் மாக்கள்" என்று தம்மையும் உளப்படுத்தி அவனைப் பாட அழைக்கின்றார். ஆண்டு, அவன் தரும் பெருங்கொடையினைச் சுட்டி அத்தகைய பெருங்கொடையினை வழங்கல் அவனால்

எங்ஙனம் கூடும் என்று ஐயுறும் அவனுடைய சுற்றத்தார்க்கு நலங்கிள்ளியின் முன்னேயோர் பெருமையினைக் கூறி, அம்மரபு வழி வந்த இவனது வீர வளத்தையும் சுட்டி இத்தகையோனுக்கு அத்தகைய கொடைப் பண்பு உண்டு என்பதைச் சொல்லி, சோழ பாண்டிய நாடுகளை அவன் வெல்லுதற்கும் உரியான் என்று அவன் இயல்பினைக் கூறுகின்றார்.

விளக்கவுரை :—

நலங்கிள்ளியைப் பாட அழைத்த கோவூர்கிழார் தம் சுற்றத்தாரிடம் அவன் தங்கட்குத் தரும் பரிசினை இரு கூருக்கிக் கூறுகின்றார். ஒன்று தமது சுற்றத்தின் அடுகலன்களை நிறைக்கும் பொருளுக்கு விலையாக வெற்றிக் கொடி சூழ் வஞ்சிமா நகரையே தருவான் என்பது அது இரக்கும் பரிசில் மாக்களையும், அவர்க்குத் தலைவராய் நின்று அவர்களை அறிமுகப்படுத்திப் பரிசில் கேட்கும் அவர் தம்மையும் நோக்கி இத்தகையோர்க்குப் பரிசில் தர இருக்கும் அரசன் கடும்பின் அடுகலம் நிறையாக உண்பொருள் கேட்பினும் இருவர் தகுதிக்கும் ஏற்ப நலங்கிள்ளி பூவா வஞ்சியும் தருகுவன் என்பதாகும். இங்ஙனம். இரவலராய் வந்தாரை நோக்கி நலங்கிள்ளியின் கொடை குறித்த அவர் தம்மோடு மற்றொரு கூருய் நின்ற விறலியரைப் பார்த்து அவர்களால் விழைந்து கேட்கப்பெறும் பூப்பெறும் பொருளைத் தாராது அவர்தம் கலைத்தகுதியும், தன்

---

இப்பாட்டு 'சிறப்புடை மரபில்' என்று பாட்டிற்கு அமைப்பு முறையில் முன் இருக்க வேண்டும். இல்லையென்றால் முன் பாட்டில் இருகுடை...... ஒரு குடை என்று வென்றதாக இறந்த காலத்தில் குறித்தது பொருளற்றுப் போகும். இப்பாட்டில் "வஞ்சியும் தருகுவன் மாட மதுரையும் தருகுவன்" என்று எதிர்காலத்திலிருப்பதைப் பார்க்கும்போது இனி வெல்லப் போகின்றன் என்று கொள்ளல் பொருத்தமேயன்றி முன்னைய பாட்டைக்கொண்டு இப்பாட்டிற்கு எதிர்காலத்தை இறந்த காலமாகக் கூறல் பொருத்தமில் உரையாகும். இல்லையேல் இப்பாட்டில் அவன் தன் "கொள்ளார் தேயங் குறித்த கொற்றம்" கூறியதாகக் கோடல் வேண்டும்.

கொடைத் தகுதியும் சீர்தூக்கி மாடமதுரையையே தந்து விடுவான் என்கின்றார். இதனை,

> ''கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடிப்
> பூவா வஞ்சியும் தருகுவன் ஒன்றோ
> வண்ணம் நீவிய வணங்கிறைப் பணைத்தோள்
> ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
> மாட மதுரையும் தருகுவன் எல்லாம்
> பாடுகம் வம்மினோ பரிசில் மாக்கள்''

என்கின்றார்.

இங்ஙனம் இருபெரு வேந்தர்கட்குரிய தலைநகரங்களை இரவலர்க்கும், விறலியர்க்கும் தந்துவிடுவான்; ஆதலின் பாடுவோம் என்று கோவூர்கிழார் அழைக்கக்கண்ட விறலி யரும் இரவலரும், சோழன் நலங்கிள்ளி இத்தகைய கொடை தருமாறு எங்ஙனம் என்று ஐயுற்று மருண்டுநோக்க, அது கண்ட புலவர் அவர்தம் ஐயமகலக் காரணம் காட்டுகின்றார். இதுகாறும் சோழ பரம்பரையினர்க்கு உரிய நிலம் எது என்று குறித்துக்கூற முடிந்ததில்லை. அவர்கள் மண்ணகம் விண்ணகம் என்பன அனைத்தையுமோ அன்றிப் பகுதி யாகவோ ஆளும் தகுதியுடையவர்கள். அவர்கள் என்று எப்பொழுது எதனை வெல்ல நினைக்கின்றார்களோ அன்று அதனை அப்பொழுதே தமதாக்கி வாழ்வர். வானவர் தலைவனுக்கு வாழ்வளித்தவர் இவன் முன்னோர். அதனால் இவனுடைய முன்னோர் இங்ஙனமாகவும் இவன் நிலையும் இத்தகையதே. இக்கடல்சூழ்மண்டிலம் அனைத்தும் இவன் வெல்லக்கருதினும் வெல்லவல்லவன். வென்றதை வேண்டி யோருக்கு வேண்டியவண்ணம் கொடுக்கவும் வல்லவன். குயச்சிறார்கள் தம் குலத்தொழிலைத் தம் மதிநுட்பத்தினால் செய்யத்தலைப்படும்போது திகிரியில் வைத்துள்ள மண்ணை அவர் எப்பாண்டம் ஆக்கப்போகின்றார் என்பதனை யாரும் கணித்துக்கூறமுடியாது. அவர்கள் நினைப்பின் வண்ணம் பாண்டங்கள் உருவாகும். மதிவல்ல குயச்சிறாரே தம் முடைய திகிரியின் துணையினால் நினைத்த பாண்டங்களைச்

செய்யக்கூடுமன்றி, செய்திறமாகிய அறிவற்ற சிறுர்கள் செய்யமுற்படின் நினைத்துச்செய்ததொன்று, செய்துமுடித்த தொன்று என்ருகும். சோழன் நலங்கிள்ளியோ மதிவல்ல குயவன்போன்றவன். அவன் ஆணைத்திகிரியினுல் இந்நில வுலகமாகிய மண்ணை உரிமையாக்கவும் செய்யலாம்; கொடையாக்கவும் செய்யலாம்; எது வேண்டுமானுலும் ஆக்கலாம். ஆதலால் சோழநாட்டிலிருக்கின்ற வேந்தன், பாண்டியர்க்குரிய மதுரையையும், சேரர்க்குரிய வஞ்சியையும் நாம் பாடினுல், உண்கலம் நிறைக்க ஒன்றும், பூவிலைக்கு மற்ருென்றுமாகக்கொடுப்பது உறுதி. ஆதலால் அவனைப் பாடுவோம் என்றழைப்பதனைத்

"தொன்னிலக் கிழமை சுட்டின் நன்மதி
வேட்கோச் சிறுஅர் தேர்க்கால் வைத்த
பசுமண் குருஉத்திரள் போலஅவன்
கொண்ட குடுமித்துஇத் தண்பணை நாடே"

என்று பாடிமுடிக்கிருர்.

இப்பாட்டில் கோவூர்கிழார், இரவலர்தம் உண்கலம் நிறையக் கொடுப்பதற்குச் சேரர்நாட்டைக் கூறுவானேன், விறலியர்தம் பூவிலைக்கு மாடமதுரையைத் தருவானேன் என்று பார்த்தால் சோழநாடு சோறுடைத்தேனும், பெருஞ் சோற்றினைப் பிறர்க்குவழங்க வாய்ப்பளித்தது சேரநாடே ஆகும். இவ்வுலகத்தில் தேவாசுர இராமாயணப் போர் களுக்குப் பிறகு மிக்க படைகளோடு பொருத ஒருபோர் பாரதப்போரே. அப்பெரும் படைகளுக்குப் பெருஞ்சோறு வழங்கியவன் சேரன். அதனுல்தான் சோற்றுக்குக் கொடை யாகச் சேரநாட்டைத் தருவான் என்கின்ருர்.

"அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருது களத்தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்"

என்று சேரன் சோற்றுச்சிறப்பால் சிறப்பெய்தியதைக் காணும்போது அச்சேரனுடைய நாட்டைப் பரிசிலர்க்கு ஈவான் சோழன் என்று பாடியதில் பொருள்இல்லாமலில்லை.

விறலியர்க்குப் பூவிலையாக மதுரையைத் தருவான் என்று புலவர் பாடியதற்குக் காரணம், மதுரையிலுள்ள பூவின் சிறப்பும் அதனுல் பொலியும் மலையின் இயல்பும் நப்பண்ணனுர் பாடிய பரிபாடல் கொண்டு தெளியலாம்.

" நனிநுனி நயவரு சாய்ப்பி ஞறிணர்ச்
சினைபோழ் பல்லவந் தீஞ்சுனை யுதிர்ப்ப
உதிர்த்த் சுனையி னெடுத்த தலைய
அலர்மு கிழுற வவை கிடப்பத்
தெரிமலர் நனையுறுவ
ஐந்தலை யவிர்பொறி யரவ மூத்த
மைந்த னருகொன்று மற்றிளம் பார்ப்பென
வாங்கிள மகளிர் மருளப் பாங்கர்
பசும்பிடி யிளமுகிழ் நெகிழ்ந்தவா யாம்பல்
கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்
எருவை நறுந்தோ டெரியிணர் வேங்கை
உருவமிகு தோன்றி யூழிணர் நறவம்
பருவமில் கோங்கம் பகைமல ரிலவம்
நிணந்தவை கோத்தவை நெய்தவை தூக்க
மணந்தவை போல வரைமலை யெல்லாம்
நிறைந்து முறழ்ந்து நிமிர்ந்துந் தொடர்ந்தும்
விடியல் வியல்வானம் போலப் பொலியும்
நெடியாய்நின் குன்றின் மிசை "

(பரிபாடல்: 19.)

இங்ஙனம் மீன்பூத்த வானம்போல, பூப்பூத்து மலை கிடப்பதாகக் குறிப்பிடுகின்ருர் என்ருல் மலர்பொலிந்த மதுரையைச் சோழன், விறலியர் பூவிலைக்குத் தருவதாகக் கூறியதில் மிக்க பொருளுண்டு. மதுரைக்கு இத்தகைய மலர்ச்சிறப்பு உண்மையை இளங்கோவடிகள் வையையைப்

'புனல் யாறு அன்றிது பூம்புனல் யாறென "
என்று குறிப்பதுகொண்டும் தெளியலாம்.

இங்ஙனமெல்லாம் கோவூர்கிழார் தன் நுண்மாண் நுழைபுலம்தோன்ற அரசன் இயல்பினை உள்ளவாறு கூறி உன்னுதற்கரிய அவன் கொடைச்சிறப்பினை மருண்டு ஐயுற் ரூர்க்குக் காரணகாரியத்தோடு கூறி இந்தநாடு இதற்குரிய தென்று தெளிந்து அவற்றைத் தரமறிந்து தருவன் நலங்கிள்ளி என்று அழகொழுகக் கூறுகின்ருர்.

## 3. அல்லிப்பாவை

" கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த வட்டியும் ஆய்மகள்
தயிர்கொடு வந்த தசும்பு நிறைய
ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப உவந்தனர் பெயரும்
தென்னம் பொருப்பன் நன்ஞட் டுள்ளும்
ஏழெயிற் கதவம் எறிந்துகைக் கொண்டுநின்
பேழ்வாய் உழுவை பொறிக்கு மாற்றலை
பாடுநர் வஞ்சி பாடப் படையோர்
தாதெரு மறுகிற் பாசறை பொலியப்
புலராப் பச்சிலை இடையிடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
ஊன்சோற்று அமலை பாண்கடும் பருத்தும்
செம்மற் றம்மநின் வெம்முனை இருக்கை
வல்லோன் தைஇய வரிவனப் புற்ற
அல்லிப் பாவை ஆடுவனப் பேய்ப்பக்
காம இருவ ரல்லது யாமத்துத்
தனிமகன் வழங்காப் பனிமலர்க் காவின்
ஒதுக்கின் திணிமணற் புதுப்பூம் பள்ளி
வாயின் மாடந்தொறும் மைவிடை வீழ்ப்ப
நீயாங்குக் கொண்ட விழவினும் பலவே "   (புறம் : 33)

திணை: வாகை.   துறை: அரசவாகை.

பொழிப்புரை :—

காட்டின்கண்ணே தங்கும் வாழ்க்கையினையுடைய சினம் பொருந்திய நாயைக் கொண்ட வேட்டுவன் மான் கணத்தின் தசை நிறைந்த வட்டிலும், முல்லை நிலத்து வாழும் ஆய்மகள் தயிர் கொண்டுவந்த மிடாவும் நிறையும்படி, ஏரான் உழுதுஉண்டு வாழ்வாரது பெரிய மனையின்கண் கொள்ளப்பட்ட வெண்ணெல்லை முகந்து கொடுப்ப, உவந்து மீளும் தென்திசை பொதியின் மலையை யுடைய பாண்டியனது நல்ல நாட்டுள்ளும் ஏழாகிய அரணின்கண் கதவத்தை அழித்துக் கைக்கொண்டு நினது பெரிய வாயையுடைய புலியைப் பொறிக்கும் வலியை. ஆதலால் நின்னைப் பாடும் புலவர் நினது மேற்செலவினைப் பாடுகின்றனர். அதனால் ஊக்கம் சிறந்த படைக்கலத்தினை யுடைய வீரர்கள் தேர்த்துகளும், பூந்துகளும் போன்ற தாதுக்கள் நிறைந்த பாசறைக்கண்ணே பொலிவுபெற மகிழ்ந்து கிடக்கின்றனர். அங்கு அரசன், பாடிப்பரிசில் பெற வந்த பாணர்கட்கும், அவர்தம் சுற்றத்தார்க்கும் ஊன் சோறு வழங்குகின்றான். அக்கலவைச் சோற்றின் தோற்றம், பச்சிலையும் பன்னிற மலர் மொகைகளும் இடையிடைப் பெய்து தொடுத்த தொடையலின் பந்துபோலக் காட்சியளிக்கிறது. இவ்வாறு பாணர்க்கு ஊன் சோறு அருத்துகின்ற நின் வெம்முனை இருப்பிடம், கைவல்லோனால் புனைந்து செய்யப் பட்ட எழுதிய அழகு பொருந்திய அல்லிப்பாவை அழகை யொப்பத் துணைவனும் துணைவியுமாகிய இருவரல்லது இடையாமத்தின்கண் தனிமகன் வழங்ககில்லா குளிர்ந்த மலரையுடைய சோலையினது வாயிலின்கண் மாடந்தோறும் செம்மறிக்கிடாய் அறுத்து ஊன் உணவைப் பாணர்க்குக் கொடுத்த அவ்விழவினும் பல தலைமையுடைத்து.

திணை, துறை விளக்கம் :—

பாண்டிநாட்டை வென்று, பின்னர்ப் பகைப் புலத்தையும் வென்று ஆண்டுப் பாசறை பொலிய வீற்றிருந்து விழவயர்ந்து, பாண்கடும்பருத்தும் பெருமைகண்டு

பேசுவதால், வாகைத் திணையுள், இஃது அரசவாகை யாயிற்று. புறப்பொருள் வெண்பாமாலையில் "பகலன்ன வாய்மொழி இகல்வேந்தன் இயல்புரைத்தன்று" என்று ஞாயிறன்ன வாய்மையுடையனும், ஆற்றல் மிக்கவனும் உள்ள அரசனின் இயல்பினைச் சொல்லுவது என்ற பொருளில் அரசவாகை என்ற துறைக்கு வாகைத்திணையில் இலக்கணம் கூறப்பெற்றுள்ளது. இப்பெயருடைய துறை வாகைத்திணையில் தொல்காப்பியத்துள் துறையாகக் கூறப் படவில்லை. ஆனால் "ஐவகை மரபில் அரசர் பக்கமும்" என்ற துறையில் மறம் பொருளாகப் பகைவர் காடு கோடலும், அரசனுக்குரிய இலக்கணங்களுள் ஒன்றாதலால் அதனைச் செய்து மேம்பட்டிருக்கும் அரசன் இயல்பைக் கூறியது என்று தொல்காப்பிய இலக்கணப்படி துறை கூறலாம். இப்பாட்டின் பொருள் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் கூற்றுப்படி பாடாண் பகுதியுள் அடங்கும்.

விளக்கவுரை :

ஏழெயிற்கதவம் என்ற பெயருடைய அரணுடைமையால் ஒருவராலும் வெல்லப்படாத ஆற்றல்மிக்க பாண்டியனைச் சோழன் நலங்கிள்ளி தன் பேராற்றலால் வென்றுவிட்டான். அவ்வெற்றியோடு அமையாது மேலும் பலர்பால் அத்தகைய வெற்றியினைப் பெறுதற்குப் படையெடுத்துச் செல்கின்றான். அவன் ஆற்றலைக்கண்ட புலவர்பெருமக்கள் அவன் மேற் கொண்டிருக்கும் வஞ்சியொழுக்கத்தினைக் கொற்றவள்ளை யாலும், மழபுலவஞ்சியாலும் துறைப்படுத்திப் புகழ்மணக்கப் பாடுகின்றனர். அங்ஙனம் புலவர்பெருமக்களால் பாடப் பெற்ற பெருமை நினைந்து ஊக்கமிக்க மறவர்கள் பகைப் புலத்தினை வெல்லுகின்றனர். வென்றவர் அப்பகைவர் நாட்டிடையமைந்த பாசறைவீதிகளில் வெற்றிக்களிப்போடு பொலிந்துகிடக்கின்றனர். அப்போது அப்பெருமைக்குரிய தன்னைப் பாடிய பாணர்கட்கும் அவர்தம் சுற்றத்தார்க்கும் நலங்கிள்ளி வெற்றிவிழாவெடுத்து உணவருத்துகின்றான். இவ்வாறு பாணர்தம் சுற்றமருத்தி மகிழும் நலங்கிள்ளி அமைதியானகாலத்துத் தன் ஊரின் வாயில்மாடந்தொறும்

ஆட்டுக்கிடாய்களை வெட்டி வேண்டியோர்க்கு அவ்வூன் உணு அருத்தி விழாக்கொண்டாடுகின்முன். அவ்விழாக் களைக்காட்டினும் பகைப்புலத்துக் கொண்டாடிய விழா எத் தனையோ சிறந்ததாக இருப்பதைக் காணுகின்முர் புலவர். அச்சிறப்பினைக் குறிக்கும் முறையில் பகைவர் நாட்டிடத்துங் கூட அமைதியும் மகிழ்ச்சியும் விளைத்தற்கு அவன் காட்டும் பேராற்றலை வியந்து பேசுகின்முர்.

இப்பாட்டில் நலங்கிள்ளியால் வெல்லப்பெற்ற பாண்டி நாடு எத்தகைய வளமுடையதென்றும், எத்தகைய காப் புடையதென்றும் கூறுகின்முர். அத்தகைய நாட்டினை வெல்லுதற்கமைந்த இவனுடைய ஆற்றல் எத்தகையதென் றும் பாராட்டி, அவன் பகைப்புலத்துப் பாசறையில் தன் படைவீரர்களோடிருந்து பாண்கடும்பு அருத்திய ஊன் உணவு எத்தகையதென்று புலனுக்குகின்முர். பின்னர் அவனுக்கேயுரிய சோழநாட்டு வாயின்மாடங்கள் எங்கு எவ்வாறு அமைந்துள்ளன என்றும் அங்கு அவன் ஆற்றிய பெருஞ்சோற்றுநிலை எத்தகையது என்றுங் குறித்து அவன் விளைத்த பகைப்புலத்துவிழவின் மேம்பாட்டினை அதனோடு உறழ்ந்துபேசி சிறப்பு மொழிகின்முர். நாநிலவளமிக்க பாண்டிநாட்டு ஏழெயிற்கதவம் என்ற நாடு குறிஞ்சிவளமும் முல்லைவளமும் மருதவளமும் மிக்கது. ஏழு மதில்களால் சூழப்பெற்ற அரண் உடைமையால் பாண்டிநாட்டின் எப்பகுதியினைப் பகைவர் கைக்கொள்ளினும் இந்நாடு கொள்ளுதற்கு அருமையுடைத்தாயிருந்தது. இதனை வெல்லுதலே தனக்கு வெற்றியென்று குறிக்கொண்டு வென்முன் நலங்கிள்ளி. அவன் வென்ற இந்நாடு மலையும் காடும் சூழப்பெற்றமையால் ஆண்டு வாழும் வேடுவர்கள் மான்கணத்தினை அலைத்துப் பற்றித் தசையாக்கி வட்டில் நிறையச் சுமந்து தாம் உண்ணும் வேறு பொருள்களைப் பண்டமாற்முகப் பெற வருகின்றனர். அங்ஙனமே முல்லை நிலத்துவாழும் ஆய்மகள் தன்னிடமுள்ளதயிரினை மிடாவில் நிறைத்துக்கொண்டு தனக்குவேண்டும் வேறு உண் பொருளைப் பண்டமாற்முகப் பெற வருகின்முள். இவர்

களைப்போலவே மருதநிலத்து விளைந்த குள்நெல்லை அறுத்துக் களத்துப்பொலியாக்கி வைத்துக்கொண்டிருக்கும் உழுதூண் வாழ்வுடைய உழவர்தம் பேரில்லக்கிழத்தியர் தமக்கு வேண்டிய உணவுப்பொருட்களைப் பெறக் காத்திருக்கின்றனர். அந்நெற்பொலிகளத்து வந்த வேட்டுவனும் ஆய்மகளும் ஊனையும், தயிரையும் உழத்தியர்கட்குத் தந்து தாம் கொணர்ந்த வட்டியிலும், தசும்பிலும் வேண்டிய நெல்லினை உவப்போடு முகந்துகொண்டு செல்கின்றனர். இவ்வாறு கொடுப்பதிலும் கொள்வதிலும் இருதலையும் குறைவின்றிப் பெயருமாறு மக்கட்கு மகிழ்ச்சியளிக்கும் வளமுடையது அந்நாடு.

இத்தகைய வளம் பெற்றதோடன்றிப் பகைவரால் படையெடுத்து அலைத்துச் சிதைக்கவொண்ணுதவாறு ஏழு எயிலும் அவற்றில் காப்புடை ஏழு கதவுகளும் அமையப் பெற்றுள்ளது, அந்நாடு. அதனல் அது ஏழெயிற்கதவமென்ற பெயர்பெற்றுச் சிறந்திருந்தது. இதனை,

"கானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த வட்டியு மாய்மகள்
தயிர்கொடு வந்த தசும்பு நிறைய
ஏரின் வாழ்நர் பேரி லரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப வுகந்தனர் பெயரும்
தென்னம் பொருப்ப னன்னுட் டுள்ளும்
ஏழெயிற் கதவம்"

என்று குறிப்பிடுகின்றுர்.

இத்தகைய வளமும் காப்பும் மிக்கதாய் பாண்டியர் நாட்டுள்ளும் சிறந்ததாய் உள்ள ஏழெயிற்கதவத்தினைச் சிதைத்து உட்புகுந்து பாண்டியரை வென்றதோடு, ஆண்டு அம்மதில்தோறும் தன் இலச்சினையாக விளங்கும் அச்சம் தருமாறு பிளந்த வாயுடைய புலியினைப் பொறிக்கின்றுன். இவ்வாற்றலை வியந்த புலவர்,

"ஏழெயிற் கதவம் எறிந்துகைக் கொண்டுநின்
பேழ்வா யுழுவை பொறிக்கும் ஆற்றலை"

என்றுகூறி அவனிடம் அவன் இயற்றிய மற்ற நிகழ்ச்சிகளைக் குறித்துப் பெருமைபேசுகின்றார்.

சோழன் நலங்கிள்ளி பாண்டியனை வென்றபின் மேலும் பகைவெல்லப் படையெடுத்துச்செல்கின்றான். அதனைக் கண்ட புலவர்பெருமக்கள் அவன் புகழையும், அவன் படையெடுத்துச்செல்வதால் பகைவர் படும் பாட்டையும், பணியாதார் நாட்டினை அவன் சிதைத்துவிளைக்கும் கேட்டையும் புகழ்பூப்பப் பாடுகின்றனர். இவ்வாறு புலவர்களால் பாடப்பெற்று அதனாலும் ஊக்கம்சிறந்த வீரர்கள் பகைப் புலத்தினை வென்று அவ்வெற்றிக்களிப்பால் பாசறைபொலிய மகிழ்ந்துகிடக்கின்றனர். அப்பாசறை தேர்த்துகள், பூத்துகள் போன்ற தாதுகளால் நிறைந்து கிடக்கின்றது. வெற்றியால் மகிழ்ந்திருக்கும் நலங்கிள்ளியைப் பாடிப் பரிசில் பெறவந்த பாணர்கட்கும் அவர்தம் சுற்றத்தார்க்கும் ஊன் சோறு வழங்குகின்றான். அவ்வூன்சோறு நிணமும் தசையும் மணமூட்டும் தழையும் கலவைகளும் விரவிக் கட்டியாக்கப் பெற்றுள்ளது. அக்கலவைச்சோற்றின்தோற்றம், பச்சிலையும் பன்னிற மலர்முகைகளும் இடைஇடைப்பெய்து தொடுத்த தொடையலின் பந்துபோலக் காட்சியளிக்கின்றது. இப்படிப் பாணர்கட்கு நலங்கிள்ளி அளிக்கின்ற கொடையும், பெருஞ் சோற்று நிலையும் சோழன் தன்நாட்டில் தன்னகத்து ஆற்றிய எத்தனையோ பெருவிழாக்களினும் மேம்பட்டிருக்கின்றது என்கின்றார். இதனை,

"பாடுநர் வஞ்சி பாடப் படையோர்
தாதெரு மறுகிற் பாசறை பொலியப்
புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
ஊன்சோற் றமலைப் பாண்கடும் பருத்தும்
நின் வெம்முனை இருக்கை, நீ ஆங்குக் கொண்ட
விழவினும் பல செம்மற்று"

என்கின்றார்.

இனி நலங்கிள்ளி தனக்கேயுரிய சோழநாட்டு வாயில் மாடந்தொறும் அயர்ந்த விழவினைப்பற்றிக் கூறுகின்றார். சோழனுக்கு உரியவாய்ப் பல மாடங்கள் பலவிடத்தும் இருந்தன. அம்மாடங்கள் ஒவ்வொன்றும் அச்சம் தரத்தக்க மலர்நிறைப் பூங்காக்களைக் கொண்டனவாக இருந்தன. அக்காடுகள் ஒதுக்கிடங்களையும் திணிந்த மணலினையும் நாண்மலர் உதிர்ந்த பூம்பள்ளிகள் பலவற்றையும் பல இடத்தும் கொண்டனவாயிருந்தன. இவற்றையெல்லாம் கடந்து சென்றால் வாயில்களும் மாடங்களும் உண்டு. இத்தகைய காட்டினையும் ஒதுக்கிடங்களையும் புதுப்பூம் பள்ளிகளையும் கடப்பதென்பது பொதுவாக அரிய செயல். அதனைக் கடக்கவேண்டுமானால் தனிமகனால் அரிதினும் அரியதாகும். அங்ஙனம் கடந்தேயாக வேண்டுமானால் புனைதலில் கைவல்லவன் ஒருவன் தன் ஆற்றல் தோன்ற புனைந்து அழகூட்டப்பட்ட, இலக்குமியால் அன்று பூணப் பெற்று அவுணர்பால் வெற்றி விளைத்த அத்தகைய மோகினி போன்ற அழகினைக்கொண்டு இருவயின் ஒத்த காமத்தராய் உள்ள ஆணும் பெண்ணுமல்லது தனிமகனால் என்றும் வழங்ககில்லா நடுக்கம் தரும் பூங்கா அது. காரணம், பொழிலிலுள்ள ஒதுக்கிடங்களும் திணிமணலும், புதுப்பூம் பள்ளியும் அறிவினைத் திரித்து காமம்விளைத்து ஆண்டே நிறுத்திச், செல்லிடம் சேரவொட்டாது தகைக்கவல்லன வாம்! இதனை,

"இதுபள் ளியிடம் பனிமால் வரைதான்
அதுதெள் ளறல்யா றுவைதே மரமாக்
கதிதள் ளிபிரா துகடைப் பிடிநீ
மதிதள் ளியிடும் வழைசூழ் பொழிலே" (சிந். 1194)

என்று விஞ்சையன், சீவகன் கடந்து செல்லவிருக்கும் காட்டின் அருமையினைக் குறிக்குமிடத்து "அக்காடு இன்பச் சூழ்நிலையால் அறிவினைக்கெடுத்து மயக்கும். நீ நின் போக்கைத் தவிர்ந்திராது கடைப்பிடித்துப் போ!" என்றான் என்னும் நச்சினார்க்கினியர் உரையானும் அறியலாம்.

அன்றியும் காடுகள் மகளிரைப்போலப் பொலிந்து "போது சிறங்கணிப்பப் போவார்கண் போகா புகாரே எம்மூர்" என்றாற்போல, போவாரைத் தகைப்பதோடு பேய் மகளிரைக் கொண்டிருத்தலும் உண்டு. அவர்கள் அவ்வழி இயங்குவோர் முன்னர்ப்போந்து தம்காமம் மொழிந்து இன்புறும் செவ்வி கூறித் தழுவத்தூண்டிப் பின்னர்த் தம்மைத் தழுவினாரைக் குழைய முயங்கிப் பிழிந்து உயிர் செகுத்துவிடுவார்கள் என்பதனை,

"இளவெயின் மணிவரை எறித்திட் டன்னதோர்
அளவரு குங்குமத் தகன்ற மார்பினுய்
களவினி னணிநலம் கவர்ந்த கள்வனென்று
உளர்மணிக் கொம்பனார் உருகி நைபவே" (சிந். 1182)

"பழங்குழைந் தனையதோர் மெலிவிற் பையென
முழங்கழல் வேட்கையின் முறுகி யூர்தரத்
தழும்பத மிதுவெனச் சார்ந்து புல்லலும்
பிழிந்துயிர் உண்டிடும் பேய்க ளாபவே." (சிந். 1183)

என்னும் சிந்தாமணி கொண்டும் தெளியலாம். இதனால் தான் அக்காடு தனிமகனுக்கு நடுக்கம் தருவதாயிற்று என்றார். ஒருவன் பேரழகி ஒருத்தியொடு கூடிச்செல்லின் அவன் அவளழகில் ஈடுபட்டுச் செல்வான். அங்கு இயற்கைச் சூழ்நிலையும் பேய்மகளிரும் அவனுக்கு நடுக்கம் தந்து தகைக்கமாட்டா. அவ்வாறு அவ்வியற்கையாலும் பேய்மகளிராலும் ஈர்ப்புண்ணாது செல்லுதற்குரியோர் அல்லிப்பாவை ஆடுவனப்பேய்ப்பக் காம இருவராய் இருத்தல் வேண்டுமென்கின்றார்.

அல்லிப்பாவை என்பவள் இலக்குமி. அவள் ஒருகால் அவுணர்களை வெல்ல அழகூட்டிக்கொண்டு வெற்றிகண்ட அம்மோகினி வடிவினை ஒத்த வடிவினைக் கொண்டவராதல் வேண்டும். அவ்வழிச் செல்வோர் அவர்பூண்ட அழகும், அழகுறுத்துவோனால் புனைந்து செய்யப்பட்டதாதலும் வேண்டும். அப்பொழுது தான், இலக்குமி அவுணர்கள் இழைத்த தீங்கினைக் கடக்க எடுத்த அழகு வெற்றிதந்தாங்கு,

இக்காவிடை இயங்குவோர்க்கு இயற்கை விளக்கும் கேட்டினைக் கடந்து செல்ல இயலும். இதனை,

"செருவெங் கோலம் அவுணர் நீங்கத்
திருவின் செய்யோள் ஆடிய பாவையும்"
(சிலப். கடலாடு 60-61)

என்று அடிகள் அல்லிப்பாவையாகிய இலக்குமி ஆடிய பாவையாடல்பற்றிக் குறிப்பதுகொண்டு தெளியலாம்.

இவற்றையெல்லாம் தெளிந்த கோவூர்கிழார் நலங்கிள்ளியின் வாயில்மாடம் சூழ்ந்த ஓதுக்கின் திணிமணலும், புதுப்பூம்பள்ளியும் தனிமகனை வழங்க ஒட்டாது தகைக்கும் என்றும், அதனைக் கடக்க ஒருவரையொருவர் காமுறும் பெற்றியர் வேண்டுமென்றும், அத்தகைய இயற்கை அழகினுல் நடுக்கம் தரத்தக்க வாயில் சூழ்ந்த மாடத்தின்கண் அவனிருந்து, மரந்தொறும் மறி அறுத்து ஊன் உணவாக்கிப் பரிசிலர்க்கு ஊட்டிய பெருமையினை,

"வல்லோன் றைஇய வரிவனப் புற்ற
அல்லிப் பாவை யாடுவனப் பேய்ப்பக்
காம விருவ ரல்லதி யாமத்துத்
தனிமகன் வழங்காப் பனிமலர்க் காவின்
ஒதுக்கின் றிணிமணற் புதுப்பூம் பள்ளி
வாயின் மாடந்தொறு மைவிடை வீழ்ப்ப
நீயாங்குக் கொண்ட விழவினும் பலவே"

என்று கூறுகின்ருர். இங்கு இப்பாட்டில் வரும் 'அல்லிப் பாவை ஆடுவனப்பு' என்பதற்கு அல்லிப்பாவை அல்லியம் என்னும் கூத்தைஆடும் அழகினையொப்ப என்றும், "அல்லிப் பாவை ஆடுவனப்பென்றது ஆண்கோலமும் பெண் கோலமுமாய் அவ்விருவரும் ஆடுங்கூத்தை" என்றும் பழைய உரையாசிரியர் உரை எழுத அதற்கு அடிக்குறிப்பாக 'அல்லியக்கூத்து' என்று சிலப்பதிகாரத்தில் மாதவி ஆடிய பதிஞெரு ஆடலுள் ஒன்ருகிய அல்லியக்கூத்தினை உ. வே. சா. அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். சிலம்பில் 'அல்லியக்கூத்து' என்பது,

" கஞ்சன் வஞ்சம் கடத்தற்காக
அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள்
அல்லியத் தொகுதியும் " (சிலப். கடலாடு 46-48)

என்று குறிப்பதேயாகும்.

இதற்கு உரைகண்ட அடியார்க்குநல்லார், " அஞ்சன வண்ணன் ஆடியஆடல் பத்துள், கஞ்சன் வஞ்சத்தில்வந்த யானையின்கோட்டை ஒசித்தற்குநின்று ஆடிய அல்லியத் தொகுதி என்னும் கூத்தும் " என்று எழுதியுள்ளார். இங்கு அஞ்சனவண்ணன் ஆடியகூத்திற்கும் கோவூர்கிழார் வாயில் மாடத்திற்குச்செல்லும் வழியருமையைச்சுட்டி, " அதனைக் கடத்தற்கு அல்லிப்பாவை ஆடுவனப்பேய்ப்பக் காம இருவரால் அல்லது பிறரால் ஆகாது" என்றற்கும் பொருத் தமின்மை காணலாம். அதனால், அல்லிப்பாவை என்பதற்கு

" அல்லியுட் பாவையன்னுள் அறிவுரு வகையின்ஒற்றி
மெல்லவே திறந்துநீக்கி மின்னுவிட் டிலங்குபைம்பூண்
கொல்சின மடங்கலன்னுன் கொழுநிதி மாடம்நீந்திப்
பல்சதிர்ப் பருதிபோலப் பாயிருள் ஏகினுனே "

(சிந். 1505.)

என்ற சிந்தாமணியுள் கேமசரியைக் குறிக்கவந்த தேவர் 'அல்லியுட் பாவையன்னுள்' என்று இலக்குமியை ஒப்பாள் என்று குறிப்பதுகொண்டும், பதுமையை " அல்லிசேர் அணங்கன்னவள் " என்று குறிப்பதுகொண்டும் அல்லி என்பது தாமரை என்றும், அல்லிப்பாவை என்பவள் தாமரைவாழ் திருமகள் என்றும் தெளியலாம். ஆதலால் திருமகள் வனப்பே இவண் கோவூர்கிழாரால் குறிக்கப் பெற்றதாகும். அத்திருமகள் வனப்புற்றுச் செய்த செய லுக்குப் பாவைஆடல் என்றுபெயர். அதனை அடிகள்

" செருவெங் கோலம் அவுணர் நீங்கத்
திருவின் செய்யோள் ஆடிய பாவையும் "

(கடலாடு. 60-61)

என்று கூறுகின்றுர். இதற்கு உரைகண்ட அடியார்க்கு நல்லார், " அவுணர் வெவ்விய போர்செய்தற்குச் சமைந்த

போர்க்கோலத்தோடு மோகித்து வீழும்படிக் கொல்லிப் பாவைவடிவாய்ச் செய்யோள் ஆகிய திருமகளால் ஆடப் பெற்ற பாவை என்னும் ஆடலும்'' என்று உரை எழுதி யுள்ளார். இதுகொண்டு பார்த்தால் இருவயின் ஒத்த காமத்து இருவர் ஒருவரையொருவர் மோகித்துக்கொள்ளு மாறு ஒருவர் அழகினை ஒருவர் அழகு வெளவி நிறுத்த வேண்டுமன்றி ஓதுக்கிடமோ, திணிமணலோ, புதுப்பூம் பள்ளியோ, பேய்மகளிரோ தகைத்து நடுக்கம்செய்யா திருக்குமாறு அமையவேண்டுமென்கின்றூர். அத்தகை இயற்கைச்சுழலுடையது நலங்கிள்ளியின் வாயில்மிக்க மாடத்துக் காடு என்கின்றூர்.

இவ்வாறெல்லாம் கோவூர்கிழார் நலங்கிள்ளியின் வீரச் சிறப்பினையும், அவ்வீரம் பெருமை எய்துமாறு அமைந்த பாண்டியர் பெருமையினையும் கூறி, போர்வேட்கையால் ஓரிடத்து அமையாது புலவர்களால் வஞ்சியும், வாகையும் பாடுதற்கே உரியனுய் இருக்கும் அவன் பெற்றியோடு பகைப்புலத்து அவன் ஆற்றிய வினையினைத் தன்னகத் தாற்றும் வினையோடு உறழ்ந்து மேம்பாடு மொழியுமிடத்து அவன்கொண்ட வாயில்மாடங்களின் இயற்கை அழகு களையும் பரக்கப்பேசி முடிக்கின்றூர்.

"வல்லோன் தைஇய வரிப்புனை பாவை
முருகியன் றன்ன உருவினை யாகி,
வருபுனற் கற்சிறை கடுப்ப விடையறுத்து
ஒன்னூர் ஓட்டிய செருப்புகன் மறவர்''

என்று மாங்குடி மருதனர் மதுரைக்காஞ்சியில் பாடிய தும், அதற்கு நச்சினர்க்கினியர், "சித்திரக்காரி பண்ணப் பட்ட எழுதிக்கைசெய்த பாவையிடத்தே தெய்வத்தன்மை நிகழ்ந்தாற்போன்ற வடிவினையுடையையாய்'' என்று உரை கூறியதும் மேற்கூறிய கருத்திற்கு அரண்செய்யும்.

(மதுரைக்காஞ்சி. 723–724)

## 4. புதல்வர்ப்பூங்கண்

"காலனும் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே!
திசையிரு நான்கு முற்க முற்கவும்
பெருமரத் திலையி னெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவும்
எயிறுநிலத்து வீழவும் எண்ணெய் ஆடவும்
களிறுமேல் கொள்ளவுங் காழக நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்
கனவி னரியன காணா நனவிற்
செருச்செய் முன்பநின் வருதிற னோக்கி
மையல் கொண்ட வேமமி லிருக்கையர்
புதல்வர்ப் பூங்கண் முத்தி மனையோட்
கெவ்வங் கரக்கும் பைதன் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றாற் றானே காற்றோ
டெரிநிகழ்ந் தன்ன செலவிற்
செருமிகு வளவநிற் சினைஇயோர் நாடே" (புறம். 41.)

திணை: வஞ்சி. துறை: கொற்றவள்ளை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர்கிழார் பாடியது.

பொழிப்புரை :—

கூற்றும் தன்னால் உயிர்கொள்ளலாங்காலம் வருந் துணையும் பார்க்கும். அவ்வாறு காலம் பாராது செறிந்த வேற்படையொடுகூடிய தானை பலகொண்ட பெரிய வேந்தர்கள் தொலையும் வண்ணம் நீ வேண்டிய இடத்துப் போரிட்டு வாகைசூடும் வேந்தே! எட்டுத் திசைகளிலும் எரிகொள்ளி எரிந்து வீழவும், பெரிய மரத்தின்கண்ணே இலையில்லாத நெடிய கோடாகிய வற்றல் பற்றவும், வெய்ய சுடரையுடைய ஞாயிறு பல்விடத்தும் செறிந்து தோன்றவும், மற்றும்

அச்சந்தருவனவாகிய புட்கள் குரலிசைப்பவும், பற்கள் நிலத்தின்கண்ணே விழவும், எண்ணெயைத் தலைமயிரின் கண்ணே வார்க்கவும், பன்றிஏற்றை ஏறவும், ஆடையைக் களையவும், தீட்டிச் செப்பனிட்ட படைக்கலம் தானிருந்த கட்டிலினுடனே கவிழ்ந்து விழவும் ஆய தீக் கனவுகளைக் கண்டு அவற்றால் அஞ்சி, ஆய்தலை மேற்கொள்ளாது போர் செய்யும் வலியையுடையோய்!

காற்றுடன் எரிநிகழ்ந்தாற்போன்ற செலவையுடைய போரின்கண்ணே வலிமிக்க வளவ! நீ இத்தன்மையுடையை யாதலால் நின்னைச் சினப்பித்தோருடைய நாடு, நின் இயல் பையும் செலவையும் தெரிந்த பகைப்புலத்து வீரர்கள் தாம் இறந்துபடும் உறுதி கண்டு மயங்கி, தாம் ஈன்ற மக்களை எடுத்தணைத்து அவர்தம் பூப்போன்ற கண்களில் முத்த மிட்டுத் தம் மனைவியர்க்குத் தமது வருத்தம் தோன்றாமல் மறைக்கும் துன்பத்தையுடைய ஆடவரோடு மிக்க கலக்க முற்றது.

திணை, துறை விளக்கம் :—

கொற்றவள்ளை என்பதற்குப் புறப்பொருள் வெண்பா மாலை ஆசிரியர் ஐயனாரிதனார்,

"மன்னவன் புகழ் கிளந்து
ஒன்னார்நா டழிபிரங் கின்று"

என்று பகைத்துச் செல்லும் அரசன் புகழைச் சொல்லி அவனால் பகைக்கப்பெறும் அரசர் தம்நாடு அழிவதற்கு இரக்கமுற்றுக் கூறுவது என்ற பொருளில் பாடிய இலக்கணம் இப்பாட்டிற்குச் சாலவும் பொருத்தமுடையதாக அமைந்துள்ளது. தொல்காப்பியத்தில் "குன்றாச் சிறப்பிற் கொற்றவள்ளையும்" என்ற துறை வஞ்சித்திணையுள் அமைந் துள்ளது. ஆனால், அதற்கு உரைகண்ட நச்சினார்க்கினியர் 'வேந்தனது குறையாத வெற்றிச் சிறப்பினால் பகைவர் நாடழிதற்குஇரங்கித் தோற்றானை விளங்கக்கூறும் வள்ளைப் பாட்டும்' என்று எழுதியிருக்கின்றார். இப்பாட்டு வள்ளைப் பாட்டு முறையில் அமையவில்லை. அன்றியும் இப்பாட்டில்

பகைவர் பெருமைபேசியதாகவும் இல்லை. கனவு காண்டல், எரிகொள்ளி தோன்றல் முதலிய தீய நிகழ்ச்சிகளைக் கண்டும் அஞ்சாது பகைப்புலத்தார் இருப்ப அத்தகைய ஆற்றல் மிக்காரைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் (நலங்கிள்ளி) வென்றான் என்று ஏற்றிக் கூறு வதற்கு,

"கனவி னரியன காணா நனவிற்
செருச்செய் முன்பநின் வருதிற னோக்கி"

என்ற அடிகளின் மொழிநடை இடந்தராது. இப்பாட்டினை மேற்கோள் காட்டிய நச்சினார்க்கினியர் இதன் பொருளைத் தெளிவாகத் தெரிந்து "நாளும் புள்ளும் கேளா ஊக்கமொடு எங்கோன் ஏயினன் ஆதலின்" என்று குறிப்பிட்டது கொண்டு தெளியலாம். (தொல். புறத்-சூ. 3 நச்.)

விளக்கவுரை :

சோழன் நலங்கிள்ளி பேராற்றல் உடையோரையும் நினைத்தபோதே வெல்லும் இயல்பினன் ஆகவும், தனக்கு இறப்பும் தோல்வியும் உறுதியாக வருமென்பதைக் காட்டும் முன்னறிவிப்பாக உள்ள எல்லா நிகழ்ச்சிகளும் நனவிலும் கனவிலும் காணினும் வெல்லும் வலிமை மிக்கவனாகவும், படையெடுத்துச் செல்லும்போது பகைப் புலத்தார்க்கு வளியொடு தீமிடைந்தன்ன சென்று செருச் செய்யும் ஆற்றலுடையோனாகவும் இருக்கின்றான். இதனைக் கண்ட கோவூர்கிழார் இவனை வஞ்சியொழுக்கத்திருந்தபோது கண்டு அவன் மேலும் படையெடுத்துச் செல்வதால் இவன் ஆற்றல் கேட்ட பகைவர்கள் படும் பாட்டினை நினைந்து இரங்குமாப்போலக் கொற்றவள்ளைத் துறையின்பாற் படுத்தி அவன் பெருமையினைப் பாடுகின்றார். பாடும்போது இவனைக் காலனோடு சார்த்தி இவன் அவனில் எத்துணைக் கொடியன் என்பதைக் காட்டுகின்றார்.

ஒருவன் உயிர்குடிக்கும் கூற்றிற்கு வரையறுத்த நாள் உண்டு. கிள்ளிவளவனோ தான் விரும்பியபோது விரும்பிய இடத்து, விரும்பியோரை, விரும்பியபடி கொல்லுந்திறன் உடையனாய் இருப்பதால் உலகத்தார்க்குக் கொடியனாய

காலனின் இவன் பகைப்புலத்தார்க்குக் கொடியவனய் இருக்கின்ருன்.

"சாற்று நாளற்றது எண்ணித் தருமம்பார்த்து
ஏற்றும் வின்என்பதன்றி இவளைப்போல்
நாற்றம் கேட்டலும் தின்னஙயப்பதோர் கூற்றுமுண்டோ!
(கம்பர். தாடகை 64.)

என்பது கூற்றிற்குரிய அறம். இவனே பகை காண்வழி யெல்லாம் அடுகின்ருன் ஆதலின் கொடியோன் என்பதை,

"காலனும் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே!"

என்கின்ருர்.

சோழன் நலங்கிள்ளி பெரும்படை உடைமையாலும், தலைசிறந்த மனவெழுச்சி உடைமையாலும், பகைஒழித்துப் புகழ்பரப்பி நாடுபெருக்கும் வேட்கை உடைமையாலும் அவன் அயராது போரிடும் பெற்றியுடையனய் இருக்கின்ருன். அதனல் அவனை எதிர்க்கும் வேந்தர்கள் செறிந்த வேற்படையொடு கூடிய தானை பலகொண்ட எல்லாவற்ருனும் மேம்பட்ட அரசர்கள் தொலையும்வண்ணம் தான் விரும்பிய இடத்துப் போரிட்டு வாகைசூடும் வேந்தனவான். இவனுக்குப் பகைவேந்தர்கள் எத்தகைய ஆற்றலுடையவரேனும் கண்டஇடத்துப் பொருகின்ற பெற்றி இருப்பது ஒருவகையில் கேடுபயப்பதாயிற்றே. ஞாலம் கருதினும் காலங்கருதி இடத்தால் செய்தாலன்ருே கைகூடும் என்பது வள்ளுவர் வாக்கு. அப்படியிருந்தும் தன்வலி ஒன்றையேகருதி மாற்ருன்வலியினை நினையாது இங்ஙனம் வேண்டியஇடத்து அடுகின்ருனே என்ருல், அவனுக்கு வீரம் கருதும்போது, சில ஏதம்பயப்பன எனினும் அவன் அவற்றைப் பொருட்படுத்துவதில்லை. அவனுக்கு அத்தகைய நெஞ்சுரம் உண்டு. பொதுவாக எரிகொள்ளி தோன்றினும், எரிந்து வீழ்ந்தாலும் அவை அரசர்கட்குக் கேடு வருமென்பதைக் காட்டும் தப்பாத முன்னறிவிப்பாகும்.

பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு வரும் கேட்டினைக் கோப்பெருந்தேவி கண்டகனவில் முன்னறிவிப்பாக,

"குடையொடு கோல்வீழ நின்று நடுங்கும்
கடைமணி யின்குரல் காண்பென்கொல் எல்லா,
திசை இரு நான்கும் அதிர்ந்திடும் அன்றிக்
கதிரை இருள்விழுங்கக் காண்பென்காண் எல்லா
இருங்கொடி வில்லர வெம்பகல் வீழும்
கடுங்கதிர் மீனிவை காண்பென்கொல் எல்லா"

(வழக்குரை 1-7)

இவற்றைக் காணுகின்றாள். இவற்றிற்கேற்ப, பாண்டியனும் பாண்டிமாதேவியும், பாண்டிநாடும் கேடுற்றதைக் காண்கின்றோம். இதுபோல் கண்ணகி கண்ட கனவும் மெய்யாயிற்று. கனநூல் உடையாரும்,

"மிக்க வெயிற்றின கொம்பின பன்றி விறற்குரங்கு
தொக்கன தம்மைக் கனவினிற் காணிற் சுடர்மகுடச்
சக்கர வர்த்திக ளாற்பய முண்டெனும் தம்முயிர்க
ளுக்கன வாதல்செய் தாற்பொரு டேயும் பயமுடைத்தே"

(கனநூல் 15.)

என்று கூறுகிறார்.

இப்படியிருந்தும் நலங்கிள்ளி கனவிலும் நனவிலும் நான்குதிசையின்கண்ணும் எரிகொள்ளி எரிந்து வீழக் கண்டாலும் அதனைத் தனக்கு வரும் கேடெனக் கருதாது அதற்கென மடிந்து பகைவனுக்குத் தன் மடிவினைக் காட்ட விரும்பாது வீரமே நோக்கமாய்ப் போரிடும் பெற்றியன் என்கின்றார். இங்ஙனமே, பட்டு இலையின்றி நின்ற பெருமரத்துக் கோடுகள் திடீரெனத் தீப்பிடித்து எரிவதுபோல் காண்பதும் ஒருவனுக்கு வருந்தீங்கினை மெய்யாகக் காட்டும் செயலாகும். அதனைக் கனவிலும் நனவிலும் கண்டபோதும் பகைவரைக் காய்ந்து செருச்செய்வானேயன்றிக் கனவிலும் நனவிலும் கண்ட காட்சியால் தனக்குக் கேடுவருமென்று மடிந்திருத்தலில்லை. இங்ஙனமே வெங்கதிர்க்கனலி ஆய சூரியன் ஒன்றன்மேல் ஒன்றாகச் செறிந்தோ, அடுக்கியோ

தோன்றினும், இதுபோல் அச்சம்தரும் செயல்கள் இயற்கை நிகழ்ச்சிகளாக எத்தனை நிகழ்ந்தபோதும் ஓய்ந்திராது போரேசெய்யும் இயல்புடையன் அவன். இன்னும் ஆந்தை, கோட்டான் போன்ற புள்ளினங்கள் அலறினுல் அதுவும் இறப்பினைக் காட்டவல்லது. அவற்றைக் கனவினும் நனவினும் கேட்பினும் அவன் உள்ளம் மாழ்கிப் பொராதிருப்பதில்லை. இவையன்றித் தன்பறகள் நிலைதிரிந்து நிலத்து விழுவதுபோலவும், தான் எண்ணெய்தேய்த்து முழுகுவது போலவும், பன்றிமேல் இவர்ந்துசெல்வது போலவும், உடுத்திய ஆடை நீங்குவதுபோலவும், தீட்டிச் செப்பனிட்ட படைக்கலன்தாங்கிய படைக்கலக்கட்டில் கவிழ்ந்துவீழ்வது போலவும் அரிதாய கனவுகளைக் கண்டபோதும் அவற்ருல் அச்சம்கொண்டு ஆய்தலை மேற்கொள்ளாது பகைகண்ட போதோ, தான் விரும்பியபோதோ பொரும் பெற்றியன், கனவெல்லாம் தனக்குக் கேடுவருவனவற்றை முன்னறிவிப்பாகக் கண்டும் நனவெல்லாம் போரேசெய்யும் பெற்றியனும் என்பதை,

"திசைஇரு நான்கும் உற்கம் உற்கவும்
பெருமரத்து இலையில் நெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனலி துற்றவும் பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக்குரல் இயம்பவும்
எயிறுநிலத்து வீழவும் எண்ணெய் ஆடவும்
களிறுமேல் கொள்ளவும் காழகம் நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்
கனவின் அரியன காணு நனவின்
செருச் செய் முன்ப"

என்று குறிப்பிடுகின்ருர்.

இத்தகைய ஆற்றல்மிக்க நலங்கிள்ளி பகைப்புலத்துக்குப் படையெடுத்துச் செல்லும்போது காற்றெடுகலந்த தீயினைப்போலப் புகுகின்ருன் என்கின்ருர். அஃதாவது இவன் சினம் "தீமிகின் மன்னுயிர் நிழற்றும் நிழலுமில்லை; வளிமிகின் வலியுமில்லை" என்ருங்கு, பகைவர்களால் தகைப்பரியது என்பதனைக் "காற்ருேடு எரிநிகழ்ந்தன்ன

செலவிற் செருமிகு வளவ!" என்று அழைத்து அவனைச் சினப்பித்தோர் நாட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறுகின்றார்.

நலங்கிள்ளியின் ஆற்றலையும் இயல்பையும் செலவையும் தெரிந்த பகைப்புலத்துவீரர்கள், தாம் இறந்துபடும் உறுதி கண்டு மயங்கி தாம்ஈன்ற மக்களை எடுத்தணைத்து அவர்தம் பூப்போன்ற கண்களில் முத்தமிட்டுப் பிரியாவிடை பெறும்போது, மக்கள்மேல்நின்ற காதலால் அடைக்கும் தாழ்இன்றி வெளிப்பட்ட கண்ணீரை அயல்நின்ற மனைவி கண்டு அவலம்பட்டுப்போவாள் என்று தமக்குற்ற துன்பத்தினை மறைத்து கிளர்ந்தெழுந்து போக முற்பட்டுத் துன்புறுகின்றனர். இதுபோல் எத்தனையோபேர் தமக்கு இனி அரணில்லை என்று மயங்கிப் பைங்கணுற்றுப் பெரிதும் கலங்கி அலமருகின்றனர் என்பதை,

"நின் வருதிறன் நோக்கி
மையல் கொண்ட ஏமமில் இருக்கையர்
புதல்வர் பூங்கண் முத்தி மனையோட்கு
எவ்வம் கரக்கும் பைதல் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றாற் றானே காற்றோடு
எரிநிகழ்ந் தன்ன செலவின்
செருமிகு வளவநிற் சினைஇயோர் நாடே".

என்கின்றார்.

இவ்வாறு நலங்கிள்ளி கூற்றிற்கொடியனாய், எங்கும் யாரையும் பொரும் ஆற்றலனாய், ஏதம் எதிர்நிற்பதைக் கனவினும் நனவினும் கண்டும் மானமேபெரியதாய் வீரமே நோக்காய்ப் போரினை விளைப்போனாய், தீயினும்கொடியனாய், காற்றினும் வலியனாய் விரைந்துவருகின்றான் என்பதைக் கேட்டுப் பகைப்புலத்தார் அணைப்போரின்மையோடு அடைவோர் காணாது அலமந்து பெற்ற மக்களைப் பிரியமாட்டாது மனைவிக்குத் தம்துன்பம் மறைத்துத் தெருமந்து பகைப்புலம் அவலம்பட்டுக்கிடக்குமாறு செய்யவல்லவனே என்று அவன் வஞ்சியொழுக்கத்தைக் கொற்றவள்ளைத்துறையில் பாடுகின்றார் கோவூர்கிழார்.

"காற்ருேடு எரிநிகழ்ந்தன்ன செல்வின்செருமிகுவளவ" என்று மன்னவன்புகழ் பேசப்பட்டமையாலும், 'நிற் சினை இயோர் நாடு பைதல் மாக்களொடு பெருங்கலக்குற்றன்று' என பகைவர் நாடு அழிவதுகுறித்து இரங்கிக் கூறுவதாலும் இப்பாட்டு வஞ்சித்திணைக் கொற்றவள்ளைத் துறையின்பாற் பட்டதாயிற்று.

கோவூர்கிழார் இப்பாட்டில் நலங்கிள்ளியின் பெருமையினைக் கூறவந்து கனுநூலின் உண்மை பலவற்றை வெளிப்படுத்திக்காட்டும் அழகும், காலனேடு அவனை உவமித்து வீரம்பேசிய சிறப்பும், கடந்த ஞானியும் கடப்பரிதாய மக்கள் காதலையும், சூழ்நிலையால் வீரம்விளைக்கப் பிரியநின்ற வருபனிகரந்த கண்ணராகி மனையோட்கு எவ்வம்கரக்கும் பகைப்புலத்து வீரர்தம் பெற்றியினையும் அழகொழுகப் பாடியுள்ளார்.

## 5. அலமரல் யானை

"இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெருஅ
திருந்தரை நோன்வெளில் வருந்த ஒற்றி
நிலமிசைப் புரளும் கைய வெய்துயிர்த்
தலமரல் யானை உருமென முழங்கவும்
பாலில் குழவி அலறவும் மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்
இன்னு தம்ம ஈங்கினி திருத்தல்
துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்
அறவை யாயின் நினதெனத் திறத்தல்
மறவை யாயின் போரொடு திறத்தல்
அறவையும் மறவையும் அல்லை யாகத்
திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்
நீண்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே" (புறம். 44.)

திணை : வாகை. துறை : அரசவாகை

சோழன் நலங்கிள்ளி உறையூர் முற்றியிருந்தானையும் அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும் கோவூர்கிழார் பாடியது.

பொழிப்புரை :—

கரியபிடியினது கூட்டத்தோடு (முற்றுகைக்கு உட்பட்டதாலும், சிறைப்பட்ட ஊரில் நீரின்மையானும்) பெரிய கயத்தின்கண் படியாவாய் உழந்தன யானைகள்.

நெய் கலந்து மிதித்துத் திரட்டப்பெற்ற கவளத்தைப் போர்ஆர்வத்தால் பெருவாய், கட்டுதற்குச் செப்பனிடப்பெற்ற இடத்தின்கண் அமைந்த கட்டுத்தறியை இழுத்து அலைத்து ஆர்த்து, கைநிலம் தோயச் சுருட்டி எறிந்து வெய்துயிர்த்துக் கட்டுத்தறியிடத்தேயே சுழன்று திரிந்து இடியோசைபோல் அவை முழங்குகின்றன.

உணவுப் பொருள்கள் வெளியிலிருந்து உட்புக வாய்ப்பின்றித் தடுக்கப்பெற்றமையால் மனைவாழ் தாயர்கள் உயிர்வாழ் உணவு கொள்ளவில்லை. உண்ணுத் தாயிடைப் பாலில்லாதுபோக பாலுண் குழவி அழுகின்றது.

ஆண்கள் அனைவரும் மதிற்காவலுக்குச் செல்ல, கணவரில்லாப்போது ஒப்பனைகோடல் இழுக்கென்று கருதித் தலைக்கு அழகுறுத்தும் பூவின்றி முடித்துப் பொலிவின்றித் தோன்றுகின்றனர் மகளிர்.

தொழில் புனைந்த நல்ல மனையிடத்து, (ஆடவன் மதிற்போரில் இறந்தமையால்) அவற்றின் நீர்மைக்கு இயல்பல்லாத அழுகுரல் ஏற்படுகின்றது.

இவற்றையெல்லாம் காணுது இவ்விடத்து நீ ‘இனிதாக இருத்தல் இன்னுது. நண்ணுதற்கரிய வலிய குதிரையையுடைய தோன்றல்! அறம் உடையையாயின் ‘இந்நாடு உன்னுடையதாகட்டும்’ என்று சொல்லிக் கதவினைத் திறந்துவிடு. அல்லது நீ மறமுடையவனுயின், ‘இந்நாட்டை

முற்றுகையிட்ட உன்னை ஒழித்தே தீர்வேன்' என்று போர்க்களம் குறித்துப் புறப்படு. அவ்வாறன்றி, ஆராய்ந்து நோக்குங்கால் அறமும் மறமுமின்றித் திறவாது அடைக்கப் பெற்ற திண்ணிய நிலையையுடைய கதவினைக்கொண்ட நீண்ட மதிலுள் ஒருபக்கத்தே ஒதுங்கியிருத்தல் காண் போர்க்கு நாணுந்தன்மையையுடைத்து.

திணை, துறை விளக்கம் :—

இப்பாட்டு வாகைத்திணையுள் அரசவாகை என்று கொள்ளவேண்டின் தொல்காப்பியர் கருத்துப்படி "ஐவகை மரபில் அரசர்பக்கமும்" என்ற துறையில் மறம் பொருளாகப் பகைவர்நாடு கோடலும் அரசனுக்குரிய இலக்கணங்களுள் ஒன்றுதலால் அதனைச் செய்து மேம்பட்டிருக்கும் அரசன் இயல்பைக் கூறுவது என்று கொண்டால் இப்பாட்டு நெடுங்கிள்ளியின் சிறுமையைக் கூறுவதுபோல் நலங்கிள்ளியின் பெருமையைக் கூறியதாகும். இப்பாட்டு நெடுங்கிள்ளியைக் கண்டு கூறியதாக இருப்பதால் இதனை உழிஞைத்திணையுள் சார்த்திப் பேச இடமுண்டு.

"முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற் றாகு மென்ப" (தொல். புறத். 10)

என்னும் சூத்திரப்படி இப்பாட்டில் அரண் முற்றுகையிடப் பட்டிருத்தலும், அதுபற்றி நிகழ்ந்த நிகழ்ச்சிகளும் பேசப் படுவதால் இத்திணையில் 'முரணிய புறத்தோன் அணங்கிய பக்கமும்' அஃதாவது முரண்பட்டுச் சென்ற வேந்தன் அகத்திருந்தோனைத் துன்புறுத்திய செய்தியைக் கூறியதாகுந் துறையில் கொள்ளலாம். இதற்கு நச்சினார்க்கினியர் உரை மாறுபட்டதாக அமைந்துள்ளது.

விளக்கவுரை :—

சோழப் பேரரசு உறையூரையும், காவிரிப்பூம்பட்டினத்தையும் தலைநகரங்களாகக் கொண்டது. சோழ அரசருள் நலங்கிள்ளி, மாவளத்தான் ஆய இருவரும் உடன் பிறந்தோராவர். நெடுங்கிள்ளியும் சோழப் பேரரசிற்குக்

கால்வழி வந்த உரிமையுடையவன். ஆதலால், சோழன் நலங்கிள்ளி பகைப்புலம் படர்ந்தபோது அவனுக்குரிய ஆவூரைத் தனதாக்கிக்கொண்டான் நெடுங்கிள்ளி. தன் உரிமையைப் பெறக்கருதிய நலங்கிள்ளி, தன் தம்பியை ஆவூரை முற்றுகையிடுமாறு பணித்தான். அப்பொழுது அடைத்திருந்த நெடுங்கிள்ளி திறவாமையானும், முற்றியிருந்த நலங்கிள்ளி பகை ஒழியாமையானும் நெடிதுநாள் அகத்திருப்போர் புறத்தும், புறத்திருப்போர் அகத்தும் போக்கொழிந்தனர். அன்றியும், முற்றுகையிட்டோர் கால்வாய்களைச் சிதைத்தமையாலும், ஏரி குளங்கள் நீரற்று அகத்திருப்போர்க்குத் துன்பம் பெரிதாயிற்று. உணவுப் பொருளைத் தடைசெய்து புறத்தே நிறுத்தியமையால் அகத்திருந்தோர் உணவின்றி உயங்கினர். இப்படி மக்கள் அவலத்தைப் பெரிதும் நினைந்த கோவூர்கிழார் அடைத்திருந்த நெடுங்கிள்ளியை இடித்துரைப்பதாக அமைந்தது இப்பாட்டு.

'முற்றியிருப்போனைப் பாடி முற்றுகை தவிர்த்தல் எளிதாகவும், அடைத்திருந்தோன்பாற் சென்று கோவூர்கிழார் பாடுதல் எதற்கு?' என்பதோர் ஐயவினா எழலாம். மக்கள் துன்புறுவதற்கு அடைத்திருந்தோனைப்போல முற்றுகையிட்டோனும் காரணமாவான். ஆனால், அரசர்கட்கு முற்றுகையிடுதலும், அடைத்திருத்தலும் இயல்பேனும், அடைத்திருந்தோன் காலங்கடத்தலாகாது. காலங்கடத்தவேண்டின் அகத்திருப்போர் நீரானும், உண்பொருளானும், மற்றப் பொருள் எவ்வையானும் வருந்துதல் ஆகாது. பாரிபறம்பு போல் இயற்கைவளம் நிறைந்ததேல் பெருமிதமாக, பகை கண்டு முற்றுகை என்செய்யும் என்று பேசலாம். ஆனால், நெடுங்கிள்ளியின் கதவடைப்பால் ஆவூர் அல்லற்பட்டு ஆற்றுது அழுத கண்ணீரது ஆயிற்று. அரசனும் அதனைக் காணகில்லாது அரணுள் யாண்டோ ஒருபுடை ஒதுங்கி இன்புற்றுக்கிடந்தனன். இதனுல் அரசன் தன்னலம்பேணிப் பிறர் கேடு சூழ்வித்துப் பெற்றியிழக்கக் கண்டார் புலவர். அறனும் மறனும் அற்ற அவனே கதவுதிறந்து வெளிப்

போந்து, முற்றுகையிட்டோனுக்கு நாட்டைத் தருதலோ, அன்றி அவனொடு பொருது நாட்டினைக் காப்பதோ வேண்டு மாதலின் அடைத்திருந்தோனையே பாடுகின்றார்.

'மன்னன் உயிர்த்து மலர்தலை உலக'மாதலின் தனக்கு அங்கமாய படையும், குடியும் படும் பாட்டினைக்கூறி, அதன் பின்னர் அவன் இருப்பினை உணர்த்தி, அச்செயல் அவனுக்கு அறத்தொடுபட்டதா அன்றி மறத்தொடுபட்டதா என்பதை உன்னுமாறு உணர்த்தித் தம் கருத்தாக அவன் மேற்கொண்ட செயல் நாணத்திற்கு உரியதென்று கண்ணின்று கண்ணறப் பேசி இடித்துரைக்கின்றார்.

நெடுங்கிள்ளி கதவடைத்து முற்றுகைக்கு உள்பட்டதாலும், சிறைபட்ட ஊரில் நீரின்மையாலும், கயம்படிந்து மதநீர்கழுவி மொய்க்கும் வண்டினை அகற்றமுடியாவாய் யானைகளெல்லாம் செய்வகையறியாது உழந்தன. அன்றியும் அவை புறம்போக வாய்ப்பற்றுத் தளைபட்டமையாலும், தம்மை வருத்தும் ஈக்களின் துன்பத்தினின்றும் கயம்படிந்து போக்ககில்லாவாய் உழந்தன. தாம் படிதற்குரிய குளம் மதிற்புறத்திருத்தலின் அகத்தினின்று தொழுதிசூழத் துன்புற்றன. இது பெண்யானைகளின் அவலநிலை.

அடுத்து ஆண்யானைகள் மானவுணர்வும், போர் வெறியும் மிக்கன, அகத்திருப்போன் அஞ்சிக் கதவடைத்தமையால் புறத்துநின்றோன் கதவிடத்து ஆர்ப்பரிக்கவும், முரசுகொட்டிப் போருக்கு அழைக்கவும்ஆயின. நலங்கிள்ளி மானவுணர்வோடு புறப்படாதொழியினும் பகை ஆர்ப்பரிப்பையும், போர்ப்பறையையும் கேட்ட யானைகள் இயல்பினால் பொரத் துடிக்கின்றன. அப்போர் வேட்கை மிகுதியால் நெய்கலந்து கூட்டிமிதித்து ஊட்டும் கவளத்தினைப் பெருவாய்த் தாம் கட்டுதற்குச் செப்பனிடப்பெற்ற இடத்தின்கண் அமைந்த கட்டுத்தறியை இழுத்து அலைத்து ஆர்த்து, அவற்றினின்றும் விடுபட வாய்ப்பற்றுக் கை நிலம் தோயச் சுருட்டி எறிந்து வெய்துயிர்த்துக் கட்டுத்தறியிடத்தேயே சுழன்றுதிரிந்து இடியோசைபோல் பிளிறுகின்றன. இதனை,

"இரும்பிடித் தொழுதியொடு பெருங்கயம் படியா
நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெருஅ
திருந்தரை நோன்வெளில் வருந்த ஒற்றி
நிலமிசைப் புரளும் கைய வெய்துயிர்த்
தலமரல் யானை உருமென முழங்கவும்"

என்று கூறுகின்றார்.

இங்ஙனம் யானை போர்வெறியினால் உணவு கொள்ளாமையை,

"தேன்படு கவுள சிறுகண் யானை
ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த
வயல்விளை இன்குளகு உண்ணாது நுதல்துடைத்து
அயில்நுனை மருப்பின்தன் கையிடைக் கொண்டென"
(முல்லை. 31–34)

என்ற முல்லைப்பாட்டானும் அறியலாம்.

ஆண்யானைகள் மதிற்புறத்துப் போர்ப்பறை கேட்டு அதனைத் தாங்கமாட்டாது கிளர்ந்து நெய்மிதி துறந்து, தளைத்த கயிறவிழ்த்து, கட்டுத்தறியை ஒற்றி வருத்தித் துதிக்கையை நிலம் தோய்த்து எறிந்து வெய்துயிர்த்து இடியோசைபோல் முழங்குகின்றன என்றால், இவ்வேட்கை யானை இனத்திற்கே உண்டென்பதை,

"எழூஉப்புறந் தரீஇப் பொன்பிணிப் பலகைக்
குழூஉநிலைப் புதவிற் கதவுமெய் காணிற்
தேம்பாய் கடாத்தொடு காழ்கை நீவி
வேங்கை பொன்ற பொறிகிளர் புகர்நுதல்
ஏந்துகை சுருட்டித் தோட்டி நீவி
மேம்படு வெல்கொடி நுடங்கத்
தாங்க லாகா வாகும்நின் களிறே"
(பதிற். 53. 15–21 வரி)

என்ற பதிற்றுப்பத்தாலும் அறியலாம். இதற்கு முற்றுகையிட்டதால் யானைகள் நெல்லொடு கலந்த நெய்மிதியினைப் பெறாது பசித்து, இங்ஙனம் அலைத்து அலறின

என்றும் கூறுவர். பசி என்பது பெண் யானைக்கும் உரிய தாதலால், அவை தொழுதியொடு பெருங்கயம் படியா என்ற தோடு நிறுத்தி, ஆண்யானைக்கு இத்தனை நிகழ்ச்சிகளையும் கூறியதுகொண்டே இவை பசியாலான செயலன்று என்று தெளியலாம்.

நாடு முற்றுகையிடப்பெற்றதால் உணவுப்பொருள்கள் வெளியிலிருந்து உட்புக வாய்ப்பின்றித் தடுக்கப்பெற்றமை யாலும், இருந்த உணவில் பெரும்பகுதி படையோர்க்கு ஆனமையாலும் பொதுமக்களுக்குப் பஞ்சம் மிகுந்தது. அதனுல் மனைவாழ் தாயர்கள் உயிர்வாழ் உணவுகொள்ள வில்லை. உண்ணுத்தாயிடைப் பாலில்லாதுபோக பாலுண் குழவி பாலின்மை கண்டு சுவைத்தொறும்அழுகின்றது.

ஆண்மக்கள் அனைவரும் தம்மனை துறந்து முற்றுகை யிட்ட பகைவர் தம் மதிலூடு புகாதவாறு மானங்கருதி மதிற்காவலுக்குச் சென்றனர். அவர்தம் மனைவியர் 'குலமகட்கழகு தன் கொழுநனைப் பேணுதல், விலைமகட்கழகு தன் மேனிமினுக்குதல்' என்ற முதுமொழியினை அறிந்தவ ராதலின் கணவரில்லாப்போது ஒப்பனை கோடல் இழுக் கென்று கருதித் தலைக்கு அழகுறுத்தும் பூவின்றி முடித்து 'வறுங்குரற்கூந்தல்' (குறுந்தொகை) உடையோராய், உள்ளனர். அவர்தம் கூந்தல்,

"நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல"

புனையாது பொலிவின்றித் தோன்றுகின்றது.

ஆவூர் நல்ல மாடமாளிகைகளாலும் இன்னியம் முழங்கப் பாடி ஆடும் மகளிராலும் சிறப்பெய்தியது. மாடங்கள் சுதையாலும் ஓவியத்தாலும், வண்ணப் பூச்சுக்களாலும் அழகுறுத்தப் பெற்றவை. அம்மாடங்கள் என்றும் தம் அழகிற்குத்தக இன்னிசையே பிறப்பித்தன. இன்று அவ்வில்லத்திற்குரிய ஆடவர்கள் மதிற்போரில் இறந்த

மையால் அவ்வீடுகளில் அவற்றின் நீர்மைக்கு இயல்பு அல்லாத அழுகுரலும் ஓலமும் ஏற்படுகின்றன. இதனைக் கண்ட கோவூர்கிழார்,

"பாலில் குழவி அலறவும் மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்லில் இனைகூஉக் கேட்பவும்"

என்று கூறுகின்றார்.

இங்ஙனம் நாட்டில் மக்களும் மாக்களும் அலமரவும், பகைவரால் கேடு வராது மக்களைக் காக்கவேண்டிய அரசன் தானே கதவடைத்தலால் கேடு சூழ்வித்து வருத்துகின்றான். இக்கொடுமைகளை அவன் கண்டோ கேட்டோ அவற்றை நீக்குதற்குரிய வழிகளைச் செய்தானுமல்லன். அதற்கு வேறாக நீண்ட மதிலகத்து ஒருபுடை தனக்குரிய எல்லா இன்பங்களும் பொருந்த வாழ்கின்றான். கதவடைத்திருந்த போதும் நெடுங்கிள்ளி பகைவரால் துன்னற்கரிய வீரனே. ஆனால், இதுபோது அம்மறம் புலப்படுத்த வாய்ப்பின்றிக் கோழைபோல் அஞ்சிக் கதவடைத்திருக்கின்றான். அவனைக் கண்ட கோவூர்கிழார், "நெருங்குதற்கரிய வலிமையுடைய நீ, வெற்றியே விளைக்கும் வாம்பரியுடைய வீரர்களால் சிறந்த நீ கதவடைத்திருத்தல் இழுக்கு. போர் மேற் கொண்டால் படையும், நாடும் இருமருங்கும் அழியுமென்ற அருள்நோக்கொடு பட்ட அறன் உடையனாயின் அகத்திருப்போர் அவலங்கண்டு, புறத்து நின்றோர்க்கு, 'இந்நாடு உன்னுடையதாகட்டும்!' என்று சொல்லிக் கதவினைத் திறந்துவிடு. அல்லது நீ மறமுடையவனாயின், 'இந்நாட்டை முற்றுகையிட்ட உன்னை ஒழித்தே தீர்வேன்!' என்று போர்க்களம் குறித்துப் புறப்படு. இவ்விரண்டு தன்மையுள் நீ ஒன்றையும் மேற்கொள்ளாதவனாய் உரம்பெற்ற நின் மதிற் கதவுகளை எதற்கும் திறவாது அடைத்து, மக்கள் துன்பம் காணாது, நின் இன்பமே பேணி அரணின் ஓரிடத்து அஞ்சியிருத்தல் அறநெஞ்சுடையார்க்கும் மறநெஞ்சு படைத்தார்க்கும் நாணம் தரும் செயலாகவுள்ளது. ஆதலின், நீ

இவ்விரண்டினுள் ஏதாவது ஒன்றனைச் செய்!" என்று இடித்துரைக்கின்றார்.

கோவூர்கிழார் இப்பாட்டில் பிடியும் பெண்டிரும் முறையே கயம் படியாமையானும், பூப்புனையாமையானும் பொலிவிழந்த நிலைமையைச் சுட்டி, குழவி அலறலால் தாயர் உண்ணாமையைச் சுட்டி, பொலிவுடைய மாடத்தில் கேட்கும் இயல்பற்ற ஒலியால் வீரர் இறப்பினைச் சுட்டி, கட்டுத்தறியினை இழுக்கும் களிறுகளின் பெற்றியால் அவற்றிற்கு இருக்கும் இயற்கை வீரத்தினைப் புலப்படுத்தி, துன்னருந்துப்பின் வயமானும் படைத்த அவன், அக்களிறுகட்கு இருக்கும் அவ்வியற்கை மானவுணர்வும், போர்வெறியும் அற்று மக்கள் துன்புறவும், பகைவன் முற்றுகை நீட்டவும் கதவடைத் திருத்தல் அரசனெனப் பேர்படைத்த அனைவர்க்கும் இழுக்கு என்பதைச் சுட்டிக்காட்டும் அழகு போற்றத்தக்கது.

## 6. மெய்ம்மலி உவகை

"இரும்பனை வெண்டோடு மலைந்தோன் அல்லன்
கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்
நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே
ஒருவீர் தோற்பினும் தோற்பதுங் குடியே
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே, அதனால்
குடிப்பொருள் அன்றுநும் செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் விகலே" (புறம்: 45)

திணை : வஞ்சி துறை : துணைவஞ்சி

பொழிப்புரை :

ஆர்புனைந்து பகைத்துவந்து நிற்பவன் சேரர்க்குரிய பெரிய பனையினது வெள்ளிய தோட்டைச் சூடினோன் அல்லன். அல்லது கரிய கோட்டினையுடைய வேம்பினது தாரைக் சூடினோனும் அல்லன். நின்னுடைய கண்ணியும்

ஆத்தியால் கட்டப்பட்டது; நின்னுடன் பொருவோன் கண்ணியும் ஆத்தியாலே அமைந்தது. ஆதலால், உங்களுள் ஒருவர் தோற்ருலும் அத்தோல்வி உங்கள் குடித்தோல்வி யாகும். இருவரும் வெற்றிபெறல் என்பது போரில் இல்லை. நுமது இச்செய்கை நும் குடிக்குத் தக்கதொன்றன்று. நும்மைப்போல் கொடியால் பொலிந்த தேரையுடைய வேந்தர்க்கு இம்மாறுபாடு உடம்பு பூரிக்கும் உவகையைச் செய்யும். ஆதலால், இது தவிர்தலே நுமக்குத் தக்கது.

திணை, துறை விளக்கம்:

இப்பாட்டிடைக் குறித்தவண்ணம் வஞ்சித்திணையுள் துணைவஞ்சி என்றதோர் துறை தொல்காப்பியத்திலும், புறப்பொருள்வெண்பாமாலையிலும் இல்லை. ஆனல், புறநானூற்றில் 36, 45, 46, 47, 57 என்ற எண்களிலுள்ள பாடல்களின் அடியில் வஞ்சித்திணையுள் துணைவஞ்சி என்று குறிக்கப்பெற்றுள்ளது. அவற்றுள், "அடுநையாயினும்" என்று தொடங்கும் இத்துறைப்பட்ட 36ஆம் பாட்டிற்கு உரை கூறிய பழைய உரையாசிரியர், "மேற்சென்ருனைச் சந்துசெய்து மீட்டலின், இது துணைவஞ்சியாயிற்று" என்று எழுதியுள்ளார். அங்ஙனமே, "இரும்பனை" என்று தொடங்கும் 45ஆம் பாடலிலும், "இது சந்து செய்தலால் துணைவஞ்சியாயிற்று" என்று குறிப்பிட்டுள்ளார். அவ்வாறே 46ஆவது பாட்டிலும், "இதுவும் இவரைக் கொல்லாமல் சந்து செய்வித்தலின் துணைவஞ்சியாயிற்று" என்று எழுதியுள்ளார். அங்ஙனமே 57ஆம் பாட்டிலும், "நின் யானைக்குக் கந்து ஆற்ருவாதலால் கடிமரம் கடிதல் ஓம்பு எனக் கூறுவான்போல் சந்து செய்விக்கும் நினைவாற் கூறினமையின் இது துணைவஞ்சி ஆயிற்று" என்று எழுதியுள்ளார்.

ஆனல், "அடுநையாயினும்" என்று தொடங்கும் புறப்பாட்டை இளம்பூரணர் உழிஞைத்திணையுள், "உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்" என்ற துறைக்கு மேற்கோளாகக் காட்டியுள்ளார். (தொல். புறத். 10)

அஃதாவது நினைத்தது முடிக்கும் வேந்தனது சிறப்பு என்ற பொருளில் கையாண்டுள்ளார். இப்பாட்டினை நச்சினார்க்கினியர், "இது புறத்து உழிஞையோன்கண், தூதன் அவன் சிறப்பு எடுத்துரைத்தது" (தொல். புறத். 12) என்று எழுதி இளம்பூரணரைப் போன்றே உழிஞைத்திணையில், "உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்" என்ற துறைக்கே மேற்கோளாகக் காட்டியுள்ளார். அஃதாவது, நச்சினார்கினியர், "குறித்த குறிப்பினை முடிக்கின்ற வேந்தனது சிறப்பினை அவன் படைத்தலைவன் முதலியோரும் எடுத்துரைத்தல்" என்ற பொருளில் இப்பாட்டினை அடக்கியுள்ளார். ஆனால், இப்பாட்டின் அடிக்குறிப்பின்படி வஞ்சித்திணையில் துணைவஞ்சி என்று கூறுதற்கு இடமில்லை. அதனால், "இரும்பனை வெண்டோடு" என்ற பாட்டும் சந்து செய்வித்தலால் உழிஞைத்திணையுள் அடங்குமன்றி வஞ்சித் திணையுள் அடங்காது.

இளம்பூரணர் வஞ்சித்திணைக்குரிய, "இயங்குபடை யரவம்" என்ற சூத்திரத்தில் (தொல். புறத். 7) "கழிபெரும் சிறப்பின்" என்றமையால் பேரரசர் துணையாக வந்த குறுநில மன்னரும் தாமும் பொலிவெய்திப் பாசறைநிலை உரைத்தலும் பிறவுங்கொள்க. இவைபற்றியன துணைவஞ்சி "நீயேபுறவின்" (புறம் 46) "வள்ளியோர்ப் படர்ந்து" என்னும் புறப்பாட்டுக்களில் காண்க" என்று எழுதியுள்ளார். ஆனால், நச்சினார்க்கினியர் மேற்குறித்த இரண்டு பாக்களையும்பற்றிக் குறிப்பிடும்போது, "துணைவஞ்சி என்பார்க்கு அவை மேற்செலவின்கண் அடங்காமையின் பாடாண்திணை எனப்படும் என்றுரைக்க" என்று எழுதியுள்ளார். (தொல். புரத். 8) இங்ஙனம் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் புறநானூற்றுப் பாட்டுக்களின் அடியிற்குறிப்பிடப் பெற்றிருக்கும் திணை துறைகளினின்றும் பெரிதும் மாறுபடுகின்றனர். எனினும், இப்பாட்டினை நச்சினார்க்கினியர் கருத்துப்படி உழிஞைத்திணையுள் அடக்கிக் கூறலே பொருந்தும். உழிஞைத் திணையுள் புறப்பாட்டில்லை என்ற குறையும் நீங்கும்.

விளக்கவுரை :

சோழன் நலங்கிள்ளி நெடுங்கிள்ளிக்குரிய உறையூரை முற்றுகையிட்டான். அப்பொழுது கோவூர்கிழார் முற்றுகை யிட்ட நலங்கிள்ளியையும், அடைத்து மதிலகத்திருந்த நெடுங்கிள்ளியையும் பாடியதாக அமைந்தது இப்பாட்டு.

கோவூர்கிழார் சோழர்குடிக்கு எந்தவகையிலும் கேடு வாராது காக்கவேண்டுமென்ற கோட்பாட்டினர். ஆனல், சோழர் குடிக்குள்ளோ பெரும்பகை மூண்டு ஒருவரை யொருவர் அழிக்கவே முற்பட்டிருக்கின்றனர். நலங் கிள்ளியே முற்றுகையிட்டிருக்கிறான். நெடுங்கிள்ளியும் காலங்கருதி அவனோடு பொருதற்கு உரியோனே. எனினும், அடைத்திருந்தோனினும் முற்றுகையிட்டோன் வலியனு தலின் அவனைப் பார்த்து வலியொழிய வேண்டுவதே முறையாதலின், இப்பாட்டு நலங்கிள்ளியை நோக்கியே பாடியதாகக் கோடல் ஒருவகையில் நன்று.

'நும்மோரன்ன வேந்தர்க்கு' என்றும் 'நும்செய்தி' என்றும் வரும் அடிகளை வைத்துப்பார்த்தால் இருவரையும் முன்னிலைப்படுத்திப் பேசியதுபோல் தோன்றுகின்றது. அங்ஙனமே 'நின்ன கண்ணியும்', 'நின்னெடு பொருவோன் கண்ணியும்' என்பதைக்கொண்டு பார்த்தால் தனித்தனியாக ஒவ்வொருவரிடமும் பாடியதாகக் கொள்ள இடமுண்டு.

இப்பாட்டினைச் சோழன் நலங்கிள்ளி உறையூர் முற்றி யிருந்தபோது அவனையும், அடைத்திருந்த நெடுங்கிள்ளி யையும் கோவூர்கிழார் பாடினர் என்றிருப்பதற்கு வேருக, நலங்கிள்ளி ஆவூரை முற்றியிருந்தபோது கோவூர்கிழார் நெடுங்கிள்ளிக்கு மானஉணர்வு தோன்றப் பாடி வெளிப் படுத்த, அவன் களங்குறித்து நலங்கிள்ளியோடு பொர நின்றபோது இருவர் இடையிலும் நின்று அவர் சந்துசெய் விக்கப் பாடினர் என்று கொண்டால் பாட்டிலுள்ள பொரு ளுக்கு எல்லா இயைபும் இருக்கும். எப்படியோ இட்ட அடிக் குறிப்பிற்கு ஏற்பப் பொருள் கொள்ளவேண்டியுள்ளது.

நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் சோழர்கள் ஆதலின் அவர்கள் தம் குலத்திற்குரிய ஆத்திப் பூவையே சூடியுள்ள னர். "இங்கு ஆர்புனைந்து பகைத்து நிற்பவன், சேரர்க் குரிய பனம்பூவைச் சூடிக்கொண்டு வந்திலன். அல்லது பாண்டியர்க்குரிய வேப்பம்பூவைச் சூடிக்கொண்டும் வந் திலன். அவ்வாறு வந்திருந்தால் சேரனென்றோ, பாண்டியனென்றோ கருதிச் சினந்துப் பொரலாம். அதற்கும் இங்கு வழியில்லை. ஆண்டு அவன் புனைந் துள்ள ஆத்திக்கண்ணியையே நீயும் புனைந்துள்ளாய். ஆதலால், உங்களுக்குள் யாவர் தோற்றாலும் அத்தோல்வி உங்கள் குலத்தோல்வியாகும். இருவரும் வெற்றிபெறல் என்பது போரில் அமையாது. 'ஒருவர் வெற்றியை உலகு புகழுமே; அதுவே சாலும்' என்றால், தொன்றுதொட்டுப் பகைவர்க்குத் தோலாது நின்ற ஆத்தி தோற்றது என்று கூறுவதில் பகைவர்க்கு மிக்க மகிழ்ச்சியுண்டாகும். அதனால், ஒருவர் வெற்றியினும் ஒருவர் தோல்வியே இங்குக் கருதற்பாலது. ஆதலால், இப்பொழுது நீங்கள் மேற் கொண்ட இந்தப் போர்ச்செய்கை உம்மையொத்த பெரிய பகைவேந்தர்கட்கு உடம்பு பூரிக்கும் உவகையைத் தரும். அதனால், குடிக்குள் நின்ற பகை ஒழிவது, குடிக்கு வேறாய நும் பகைவர் மகிழ்ச்சியைக் குறைப்பதே இருவர்க்கும் வெற்றி ஆதலின், குடிப்பகை ஒழிந்து இப்போரை விடுக!" என்று கூறுகின்றார்.

'நும்மோரன்ன வேந்தர்க்கு மெய்ம்மலியுவகை செய்யும் இவ்விகலே' என்ற சொற்றொடரைக்கொண்டு பார்க்கும் போது, கோவூர்கிழார் பகைவராய்நின்ற பாண்டியனும் சேரனும், 'இவ்விகல் துணையாகக்கொண்டு இருவருள் ஒருவற்குப் படைத்துணையாக அமைந்து, சோழநாட்டைக் கைப்பற்றலாம்' என்னும் நாடுபெறும் வேட்கையால் மகிழ்ச்சிகொள்வர் என்றும் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு கோவூர்கிழார் நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளி யும் என்றும் உறவினர்களாகவே பகையின்றி ஒன்றித்து

வாழவேண்டும் என்ற தம் விழைவுதோன்றப் பாடியுள்ளார். அன்றியும், நலங்கிள்ளி உறையூரைக் கைப்பற்றி நெடுங்கிள்ளியை நாடற்றவனாக்கிவிடுதற்கு அவர் ஒருப்பட்டிலர். நாடு பெருக்கும் வேட்கையும் பகையுணர்வும் காட்டுதற்கு உரியோர் சேரனும் பாண்டியனும் மற்றையோருமேயன்றி அவன் குடியிடத்தன்று என்பதனை, "இரும்பனை வெண்டோடு மலைந்தோனல்லன்," "கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்" என்கின்றார். பொருதற்கு உரியோர் அத்தகையோரே அல்லாமல் ஆர்புனைந்தோர் அல்லர் என்று நலங்கிள்ளிக்கு நெடுங்கிள்ளிபால் நின்ற பகையை வேறிடத்தில் திருப்பிவிடுவதைக் காணலாம்.

இதுபோலவே நெடுங்கிள்ளியும் தனக்கிருந்த அரசவுரிமையைப் பறிக்க முற்படும் நலங்கிள்ளியின் சிறுமை கண்டு, அவனுடன் இறுதிவரையிற் பொருது வெல்ல நினைந்தாலோ, அன்றி வெல்லமுடியாப்போது சேரரையும் பாண்டியரையும் துணைநாடினாலோ அச்செயலும் சோழர் குடியை வீழ்த்த அக்குடியின் பகைவராய சேரர்க்கும் பாண்டியர்க்கும் உவகை தருவதாகும். அவ்வாறே அவர்கள் துணையைக்கொண்டு நலங்கிள்ளியை வென்றாலும் அவ்வெற்றியும் அவர்கட்கு மகிழ்ச்சியை விளைப்பதாக முடியும். இவ்விகலை உட்பகையாக்கிக்கொண்டு சோழரை வெல்லுதற்குச் சேர பாண்டியர்கள் காலங்கருதிக் காத்திருப்பர் என்று சுட்டுவாரைப்போல, "நும்மோரன்ன வேந்தர்க்கு மெய்ம்மலி உவகை செய்யுமிவ் விகலே" என்கின்றார்.

இங்ஙனமெல்லாம் கோவூர்கிழார் தம் புலமைநலத்தால் அரியனவற்றுள் அரியன ஆற்றி, அழியாப் புகழ்பெறலைக் காணலாம்.

## 7. தண்ணிழல் வாழ்நர்

"நீயே புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை
இவரே, புலனுழு துண்மார் புன்கண் அஞ்சித்
தமதுபகுத் துண்ணும் தண்ணிழல் வாழ்நர்
களிறுகண் டழூஉம் அழாஅல் மறந்த
புன்றலைச் சிருஅர் மன்றுமருண்டு நோக்கி
விருந்திற் புன்கணோ வுடையர்
கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே"

(புறம். 46)

திணை: வஞ்சி. துறை: துணைவஞ்சி

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், மலையமான் மக்களை யானைக்கிடுவுழிப் பாடி உய்யக்கொண்டது.

பொழிப்புரை:

நீ புறவிற்காகத் தன் உடம்பை அரிந்து இட்டுத் துலை புகுந்து உயிர்துறந்து அடைக்கலம் காத்த சோழன் மரபிலுள்ளாய். இதோ உன்னல் கொலைசூழ நிற்கும் இக் குழந்தைகளோ, அறிவான் உழுதுண்ணும் புலவரது வறுமையைக் கணமும் காணப்பெருது தம் பொருளனைத் தையும் வாரிவாரி வழங்கும் வள்ளல் மலையமான் மக்கள். இவர்கள் களிற்றைக் கண்டு தம் பெற்றேர் பிரிவால் அழுகையை விட்டு வியந்தும், பின் அழுதும் நிற்கும் ஒன்றும் அறியாப் பச்சிளங் குழந்தைகள். குடிபற்றியோ, அறம்பற்றியோ ஆயாது, சினத்தால் அறிவிழந்து அவர் களைக் கொல்லத் துணிந்தாயே. இது முறையா? நீ விரும்பி யதைச் செய்வாயாக.

திணை, துறை விளக்கம்: முன் பாட்டில் காண்க.

விளக்கவுரை:

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பேராற்றல் படைத்த திருமுடிக்காரியொடு பகை கொண்

டவன். அப்பகைவனை அழிப்பதற்கு அதிகமான் நெடு மானஞ்சியினுடைய துணையினைப் பெற்று அவனை அழித் தான். மலையமான் திருமுடிக்காரி இறந்தபின்னும் அவன் பால் மூண்ட பகைமை தணியாமையால் அவன் மக்களை யானைக்கிட்டு மிதிப்பித்துக் கொல்ல நினைந்தான். அது கண்ட கோவூர்கிழார் அவன் சினந்து செய்கின்ற அச்செய லின் விளைவால் வருகின்ற கொடுமைகளை உன்னி அவனை அச்செயல் செய்யாதவாறு தவிர்க்க முற்படுகின்றார்.

ஓர் அரசன் ஒன்றினைக் கருதித் துணிந்து செயற்பட முற்பட்டபோது அவனைத் தடுத்துநிறுத்தல் என்பது பொது வாக யார்க்கும் இயலாச் செயல். மக்கட்கு முக்குணம் இயல் பாதலின் அரசன் இராசதகுணத்துச் செயற்படுகின்றபோது அவனைத் திருத்துதல் என்பது எரியிடை எண்ணெய் பெய்வதோடொக்கும்.

"களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று"

என்றாற்போலச் சினமுற்றானைத் திருத்துதலும் அத்தகைய தாகும். வழியொழுகி வற்புறுத்தின் ஒருகால் திருத்த முற் பட்டான் செயல் கைகூடும். இந்த நுட்பத்தினை உணர்ந்த கோவூர்கிழார், 'அரசியலில் புலவர் தலையிடுகின்றார்' என்ற குறை தன்பால் நிகழாதவாறும், அரசன் சினத்தால் அச் செயல் செய்து பழி ஏலாதவாறும், அவனே தான் மேற் கொண்ட செயல் எத்துணை அடாதது என்பதை உன்னி உணர்ந்து திருந்தித் தவிருமாறும் திறம்படப்பேசுகின்றார்.

கோவூர்கிழார் கிள்ளிவளவனிடம் அவன் மேற்கொண் டிருக்கின்ற செயல் தவறென்று சுட்டியோ, அல்லது அவனால் கொல்ல இருக்கின்ற மக்களை விடுவி என்று கூறியோ, தாமாக ஒன்று சொல்லாது 'நீ விரும்பியதைச் செய்' என்று அவன் எண்ணத்தின் முடிவிற்கே தம் வேண்டுகோளினை விட்டு, இருவர் குலப்பெருமையையும் கூறிமுடிக்கின்றார். முதற்கண், அவன் முன்னோர் செயலுக்கும், இப்பொழுது இவன் மேற்கொண்ட செயலுக்கும் உள்ள உயர்வு தாழ்வு

என்ன என்பதை அவனே உன்னி உணருமாறு சிபி போன்று பிறர்க்குதவிய சோழர் பெருமையினை உணர்த்து கின்றார்.

"சிபி அஃறிணைப் பொருளாய ஒரு புறவிற்காகத் தன் உடம்பை அரிந்து இட்டுத் துலைபுகுந்து, உயிர் துறந்து அடைக்கலம் காத்தவன். அன்னான் மரபில் வந்தவன் நீ. நீ மேற்கொண்ட செயலோ, தமக்கு வருவது சாவு என்பதறி யாது, மன்று கண்டு மருளும் குழந்தைகளைக் கோறல் ஆகும். இச்செயல் நின் முன்னோர் புகழுக்கு ஏற்றந்தருமா; அல்லது மாசு கற்பிக்குமா என்பதை நீ சற்று உன்னிப் பார்!" என்று சுட்டாமல் சுட்டுகின்றார்.

"ஒருவன் செய்த செயல் அவனோடு மடிவதில்லை. அது வழிவழி நின்று அதன் பயனைப் பயப்பது உறுதி. பெருங் குலத்துப் பிறந்த ஒருவனாய நீ, சினம் சிறந்து ஆயாது செய்கின்ற செயலும் வழிவழி நின்று வருத்தும். நின் மரபின் பெருமையோ உயர்ந்தது. இதோ உன்னால் கொலைசூழ நிற்கும் இக்குழந்தைகளோ, புலவர்தம் வறுமை யைக் கணமும் காணப்பெறாது தம் பொருளனைத்தையும் வாரிவாரி வழங்கிய வள்ளல் மலையமான் மக்கள். இவர் களும் நின் மரபினர்போல் அருளுடைய மரபினரே. நீ புலவர்குழாத்தினைப் பெருமையாக வைத்துப் பேணுவதைப் போலவே இவர்தம் தந்தையும் புலவர்குழாம் பேணும் பேரருளுடையவன் என்பதை யாம் அறிவோம். அருள்வழி வந்த நீ, அருளுடைக் குலத்தோன் மக்களைச் சினத்தால் கோறல் முறையன்று" என, தம் உள்ளக் கருத்தைக் கூறாமற் கூறுகின்றார். மலையமான் மக்களைச் சுட்டிக்காட்டி அவர்கள் தமக்கு வரும் இறப்பை ஒருசிறிதும் அறியாதவராய்த் தம் பெற்றோரைக் காணாமையால் அழுகின்றனர். தாம் இதுகாறும் தம்பக்கல் இதுபோல் காணாத யானையைக் கண்டதும், வியந்து அழுகையை மறப்பதும், மீண்டும் அழுவதும் ஆய செயலையன்றி வேறொன்றும் அறியாத பச்சிளங்குழந்தைகள் அவர்கள். அத்தகையோரைக் கொல்லுதல் என்பது நின்

மரபிற்கு ஒவ்வாது. அல்லாமலும் நின் அரசமுறைக்கும் ஒவ்வாது. உன்னுல் இவர்கள் கொலையுண்ண, நினக்கோ நின் நாட்டிற்கோ இவர்கள் செய்த கொடுமைதான் என்ன? தந்தை பகைமை மக்கள்பால் ஒழிவதாயின் அவரும் தம் தந்தைபோல் நின்பால் பகையுடையராதல் வேண்டும். அதோடு, நின்னெடு பொரத்தக்க ஒத்த உரன் உடையவராதலும் வேண்டும். இவர்களை நீ ஏதேனும் கேட்டால் நின் வினவிற்கு விடையிறுக்கும் தகுதியோ, செய்தியோ இல்லாத சிறியர். இன்று நீ இவர்களைக் கொன்ருல் நாளை உன் மக்களே உன்னைப் பழிதூற்றவுங்கூடும். இவற்றையெல்லாம் குடிபற்றியோ, அறம்பற்றியோ ஆயாது, சினத்தால் அறிவிழந்து கொல்லத் துணிந்தாயே! இது முறையா? இதுவே முறை என்று நீ அவர்களைக் கொன்ருயேல் உன் மக்களும் 'அரசன் எவ்வழி குடியும் அவ்வழி' என்ற கோட்பாட்டில், அவர்களும் இவ்வறமழிச் செயலை அறமாகவே கொண்டு பழியாக்கி விடுவார்களே" என்று இனிய சொற்களால் கேட்டு, அவன் உள்ளத்தை மாற்றி அக்குழந்தைகளை, அவனே உணர்ந்து விடுமாறு செய்த அவர் திறம் வியக்கற்பாற்று.

கோவூர்கிழார் மலையமான் மக்களை விடுவிக்கவேண்டும் என்ற அருள்நெஞ்சுடையவர் என்பதைக் காட்டிலும், கணப்பொழுது சினத்தால் வழிவழி நிலைநின்ற சோழகுடி பழியுண்ணும் என்ற அச்சமே அவருக்குப் பெரிதாதல் காணலாம்.

---

## 8. வடியா நா

"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய என்னுது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ இன்றே, திறப்பட
நண்ணார் நாண அண்ணாந் தேகி
ஆங்கினி தொழுகின் அல்லது ஓங்குபுகழ்
மண்ணாள் செல்வம் எய்திய
நும்மோர் அன்ன செம்மலும் உடைத்தே"

திணை : வஞ்சி துறை : துணைவஞ்சி

சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர் புகுந்த இளந்தத்தன் என்னும் புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி ஒற்றுவந்தானென்று கொல்லப்புக்குழிக் கோவூர்கிழார் பாடி உய்யக்கொண்டது.

பொழிப்புரை :

புலமையைப் போற்றுவோர் யாண்டாண்டு இருக்கின்றனரோ ஆண்டாண்டு பழுமரம் நாடும் பறவைகளைப் போலப் புலவர்கள் புகுவர். வள்ளல்பெருமக்கள் சேணிடையிருப்பினும், நாடு இடையிட்ட காடுபல கடந்து ஆண்டுச் சென்று அவர்களைத் தம் நாவால் வல்லாங்குப் பாடுவர். ஆண்டு அவர் தரப்பெற்ற பரிசிலால் அமைதிகொண்டு தம் சுற்றம் அருத்துதலைச் செய்வர். துய்த்த வறுமையையும் அதுபோக்க மேற்கொண்ட முயற்சியையும் நினைந்து வல்லாங்கு வாழ்தற்குப் பெற்ற பொருளை ஓம்புதலைச் செய்யாது, உள்ளம் மலர்ந்து அதனையும் பிறர்க்கு வழங்கி விடுவர். தம்மைப் புரப்போர் புலமைகண்டு தரும் பரிசிலில் ஏற்றத்தாழ்வு கண்டு வருந்துவது இப்பரிசில் வாழ்க்கை,

உயர்ந்த புகழுடையவர்களும் பெருநிலம் படைத்தோரும், திருமலிந்தவரும் நும்மையொத்த தலைமை சான்றவரும் இவ்வுலகத்து உண்டு. ஆதலால், கல்விச்செருக்கால் தம்மொடு மலைந்தார் நாணத் தமது கல்விப்பெருக்கால் வென்று, செம்மாந்து அவ்விடத்து இனிதாக நடப்பதல்லது பிறர்க்குத் தீதுசெய்ய அறிந்ததன்று இப்புலவர் வாழ்க்கை.

விளக்கவுரை :

கோவூர்கிழார் சோழகுடிக்குத் தோல்வியோ பழியோ எவ்வகையானும் வாராது காக்கின்ற இயல்புடையவர். சோழன் நலங்கிள்ளிக்கும், நெடுங்கிள்ளிக்கும் இடைவிடாப் பகைமையிருந்து, அப்பகைமை பெரிதாகிச் சோழவள நாட்டைக் குருதிக்கறை படிந்ததாக ஆகாதவாறு முற்றுகையும் பூசலும் விளையும்போதெல்லாம் நடுநின்று சந்துசெய்து காத்ததைப்போல ஈண்டும் நிகழவிருக்கும் ஒரு பெருங்கேட்டினைத் தவிர்க்கின்றார்.

நலங்கிள்ளி நெடுங்கிள்ளியின் சற்று ஆற்றல் மிக்கவன். ஆனால், நெடுங்கிள்ளியோ நலங்கிள்ளிக்குத் தொல்லை தருவதில் வல்லவன். அவன் நலங்கிள்ளிக்குச் செய்த தீங்குகாரணமாக இருமுறை அவனிடமிருந்து கோவூர் கிழாரால் மீட்கப்பெற்றவன். புலவரால் சந்துசெய்யப் பெற்றும் அவர்கள் உட்பகை ஓய்ந்தபாடில்லை. ஒருவர் ஒருவரைத் தாக்கிப் பொருதற்குக் காலங்கருதியிருந்தனர். ஒருகால் இளந்தத்தன் என்ற புலவன் நலங்கிள்ளியின் நாட்டினின்றும் நெடுங்கிள்ளியின் நாடு புகுந்தான். நெடுங்கிள்ளி அவனை ஒற்றனென்று கருதிக் கொல்லத் துணிந்து சிறைசெய்தான். இச்செய்தியறிந்த கோவூர் கிழார் நெடுங்கிள்ளியின் செயலையறிந்து துணுக்குற்றுப் போனார். பழிபடாத சோழர்குடி புலவனைக் கொன்று பழியேற்குமே என்று பதைத்து, நெடுங்கிள்ளிபால் போந்து புலவனை விடுவிக்கப் பாடியதாக அமைந்தது இப்பாட்டு.

நலங்கிள்ளி சினங்கொண்டு சிறைசெய்திருக்கும்போது அவனை வழியொழுகி வற்புறுத்தி ஐயமகற்றிப் புலவனை விடுவித்தலே நேரிய முறை. நேர்நின்று வேம்பும் கடுவும் போல் வெஞ்சொல் புணர்த்துக் கூறுதல் என்பது ஆண்டு புலவர்க்கே ஏதமாகும். இதனையறிந்த கோவூர்கிழார், தம் நுண்மாண் நுழைபுலத்தின் திறமையெல்லாங் காட்டிப் புலவனை விடுவிக்கப் பாடுகின்றார். ஆண்டு, அவர் அவனிடம் போந்த காரணத்தை வெளிப்படையாகக் காட்டாது, அவன் மேற்கொண்டிருக்கும் அச்செயலால் அவனுக்கு வரும் பெரும்பழியினைக் குறிப்பாகப் புலப் படுத்திப் 'பழிகரப்புச் செவியுரை அங்கத' மாகப் பாடு கின்றார்.

கோவூர்கிழார் வெளிப்படையாக இளந்தத்தனைக் கோறல் குற்றமென்று கூறியிருந்தாலும், அல்லது அவனை விடுவித்தலையே பரிசிற்பொருளாக வேண்டியிருந்தாலும், தாம் முன்பு அவனை நலங்கிள்ளியினின்றும் விடுவித்த நன்றியறிதலைக் காரணமாக்கிக் குறிஎதிர்ப்பாகக் கேட்டி ருந்தாலும் அது தவறுடையதாகும். கோவூர்கிழார் இவ்வொற்றனைப் புலவனென்று கூறி மீட்டு நலங்கிள்ளிக்கு நன்மை செய்கின்றார் என்று நெடுங்கிள்ளி கருதுதல்கூடும். அன்றியும் என்றோ செய்த நன்றிகாரணமாக என்றும் அரசியலில் தலையிட்டுக் கோவூர்கிழார் இடுக்கண் விளைக் கின்றார் என்று நெடுங்கிள்ளி கருதுதலுங்கூடும். கோவூர் கிழாரின் வேண்டுகோட்கிணங்கிச் சிறைசெய்தவனை விடுவானேல், நெடுங்கிள்ளி ஆராயாது புலவனைச் சிறை செய்தான் என்ற குற்றமும் அவன்பாற் சாரும். கோவூர் கிழார் வெளிப்படையாக இளந்தத்தனைச் சிறைவீடு செய்யுமாறு வேண்டியிருப்பின் 'புலவர்கள் ஒற்றர்தொழில் செய்வதும், அவர்கள் பகைப்புலத்தாரால் கடிகொள்ளும் போது புலவர்கள் புலமையைக் காட்டி அல்லது செய்த நன்றியைக் காட்டி அவர்களை மீட்பதும் இயல்புபோலும்!' என்ற பழியும் ஒருபுடை சாரும். அன்றி வெளிப்படையாகக் கோவூர்கிழார் வேண்டியிருந்தால் சினஞ்சிறந்த நெடுங்

கிள்ளி புலவனை விடுத்தற்குவேருக ஒற்றனென்று கொன்று அவரை மதியாது ஒழியின் அவர் நேர்மை நிலைநாட்ட வேண்டி நெடுங்கிள்ளியைப் பழிபடப் பாடி இதுகாறும் பழிபுகாது காத்த சோழகுடிக்குத் தாமே பழிசார்த்திப் பாடிக் குறைநிறுத்திய குற்றம் அவர்பால் சாரும். இவற்றை யெல்லாம் எண்ணிய கோவூர்கிழார் தாமாக எதனையும் வெளிப்படையாகக் குறியாது, தாம் அவனுக்குச் செய்த நன்றியறிதலைக் குறிப்பினும் கிளத்தாது நிகழும் நிகழ்ச்சியைப் பண்பாடு கூறும் முறையில் கூறுகின்ருர். அவன் துணிந்த செயல் எத்தகையது என்பதை அவனே உன்னி உணர்ந்து தெளிந்துத் திருந்திப் புலவனை விடுமாறு செய்து சோழர் குடிக்கும் புலவர் பரம்பரைக்கும் எவ்வகையிலும் புன்மை புகாது காக்கின்ருர்.

" இங்ஙனம், ஒருவர் அறிவின் ஒருவர் மேம்பட்டு விளங்கவேண்டி அறிவில் அழுக்காறும் பூசலும் கொண்டு தம் அறிவினைத் தீட்டிச் செப்பனிட்டுக் கலை வளர்த்துத் தரங்காட்ட முற்படுவாரன்றிக் கேடு செய்வார் அல்லர். அவர் புலமையால், அவர் அழுக்காற்ருல், அவர் விளைக்கும் அறிவுப் பூசலால் கலைநுட்பம் பெருகுமன்றி யாருக்கும் எத்தீங்கும் வருவதில்லை. இப்படித் தம் புலமையைக் காட்ட வாய்ப்பளிக்கும் வள்ளல்பெருமக்கள் சேணிடை இருப்பி னும், ஆண்டுச் சென்று வரிசைக்கு வருந்துவாரேயன்றிப் பிறர் தீங்கினைக் கனவிலும் நினையாதவர் அவர் கள். அவர்கள் கலைத் திறத்திலே பெரிதும் நாட்டமுடைய வராதலால் பொருள் போற்றி வாழும் பெற்றி அற்றவராவர். ஓர் அரசன் கலை நலங்கண்டு பெரும் பொருள் தருவனேல் அவற்றை வைத்துப் பேணி வறுமை தவிர்ந்து வாழ மாட்டாதவர் அவர்கள். பெற்றது கொண்டு சுற்றம் அருத் துதலன்றி, வல்லாங்கு வாழ்தற்குப் பொருளை ஓம்புதல் செய்யாது அவற்றையும் பகுத்துண்டு வாழும் இயல்பினர். அவர்கள் நா வல்லாங்குப் புகழ்பாடப் பயன்படுமன்றி, குறளை கூறவோ, ஒற்றறிந்து உணர்த்தவோ பயன் படுவதன்று. அவர்கள் அவ்வியல்பால் நாடுநாடாய் ஊர்

ஊராய் நினைந்தவண்ணம் இயங்குவார்கள். அவர்கள் செல்லுகின்ற நாடு புறப்பட்ட நாட்டிற்குப் பகையுடைய தாகவோ, நட்புடையதாகவோ, இருதரத்தாகவோ இருத்தல் உண்டு. புலமைநலங் காட்டிப் பரிசில்பெற அரசர் களிடம் செல்லும் புலவர்கள் அவர்களால் வரவேற்கப்பட்டு, அன்பின் வழியாலும் ஆர்வச் சிறப்பாலும் சிறைசெய்யப் பெறுவரன்றி அவர்களால், 'அடாதன செய்வோர்' என்று அரும்பழி சார்த்தப்பெற்றுப் பெருஞ்சிறை புகுந்து கொலைப்படற் குரியரல்லர். இவையெல்லாம் எம்போன்ற புலவரியல்பு!' என்று பொதுவாகப் புலவரியல்பைக் கூறுவார் போன்று கூறுகின்றார்,கோவூர்கிழார். நலங்கிள்ளியால் சிறை செய்யப்பட்ட இளந்தத்தன் தன்னையொத்த புலவனேயன்றி நலங்கிள்ளிக்காக ஒற்றறிய வந்த ஒருவனல்லன் என்று கூருமற் கூறவந்தவர் குறிப்பாக, "வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை" என்று சுட்டிக்காட்டுகின்றார். 'இப்பரிசில் வாழ்க்கை' என்ற குறிப்பே இப்பாட்டில் உயிர் தந்து நிற்பது.

நலங்கிள்ளியிடம் தாம் கூறவந்தது இப்பரிசில் வாழ்க் கையின் இயல்பையன்றி வேறில்லை என்பார்போலச் சுட்டிக் காட்டுகின்றார். பொதுவாகப் புலவரியல்புகளைக் கூறிய கோவூர்கிழார், 'இப்பரிசில் வாழ்க்கை' என்று அண்மைச் சுட்டாகச் சுட்டிக் காட்டுகின்றரே, அச்சுட்டால் குறிக்கப் பெறுகின்ற பரிசில்வாழ்க்கையர் யாவர் என்று அவனைக் கருதச் செய்கின்றார். அவ்வாறு அவன் கருதும்போது அப்பரிசில் வாழ்க்கையும் பிறர்க்குத் தீது அறிந்தது அன்று என்னும் தெளிவு பெறவும் செய்கின்றார். அதனோடு நில்லாது, புலவர்களைப் பேணிப் பொருள் தருவோர் நெடுங் கிள்ளியை ஒத்த எத்தனையோ ஆட்சிச் செல்வர்களும் இந் நிலவுலகத்தில் உண்டு என்ற உண்மையினைப் பொதுவாகக் கூறியவிடத்தும் குறிப்பாகச் சொல்லி விளக்கமும் தருகின் றார். இப்பாட்டில் கோவூர்கிழார் இளந்தத்தன் என்ற பெயரை யாண்டும் குறியாது, அவனை விடுவி என்று தானும் வேண்டாது பொதுவாகப் புலவர் இயல்பையும், புலவரைப்

பேணும் வள்ளல் பலர் உடைமையையும் கூறிப் பாட்டை வாளா முடிக்கின்றார்.

இப்பாட்டில் கோவூர்கிழார் முன்பு தாம் நலங்கிள்ளிக்குச் செய்த உதவிக்குக் கைம்மாறு கருதியதாகும் என்று கருதி அதனைச் சுட்டாது, புலவனை ஒற்றன் என்று கொண்ட அவன் கருத்தை மாற்றவும், உண்மைப் புலவனை அவன் தவறாகக் கொல்ல முனைந்தான் என்பதைச் சுட்டிக்காட்டவும், உண்மையில் புலவனையே கோவூர்கிழார் வேண்டுகோளுக்கு இணங்கி விடுக்கின்றோம் என்ற எண்ணம் அவனுக்குத் தோன்றவும், புலவனல்லா ஒற்றனைக் கோவூர்கிழார் வேண்டுகோட்கன்றியும் நன்றியறிதல் காரணமாக விட்டோம் என்று அவன் கருதாது இருக்கவும், தம்மைப் போன்ற புலவர் இனத்தின்மேல் நின்ற மாசினைப் போக்கவும், உலகம் அவ்வாறு நினையாதிருக்கவும்வேண்டியே இம்முறையைக் கையாளுகின்றார்.

கோவூர்கிழார் முன்னர் சோழகுடிக்கு வந்த பழியினைக் கண்ணிகாட்டித் துடைத்தவர்; இப்பொழுது, பெண்கொலை புரிந்து நன்னன் புலவர் பாடாப் பழியேற்று உழந்தது போல நெடுங்கிள்ளியால் சோழகுடி புலவரைக் கொன்றது என்ற பழி ஏலாதிருக்கப் பாடுபடுவதைக் காணலாம்.



## 9. சில்செவித்தாகிய கேள்வி

"உடும்புரித் தன்ன என்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணது
சில்செவித் தாகிய கேள்வி நொந்துநொந்து
ஈங்கெவன் செய்தியோ பாண பூண்சுமந்து
அம்பகட் டெழிலிய செம்பொறி யாகத்து
மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையின்
ஆடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை
புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச்
சுரந்த காவிரி மரங்கொல் மலிநீர்
மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொருநன்
உட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்
கேவா னாகலிற் சாவேம் யாமென
நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்பத்
தணிபறை யறையு மணிகொள் தேர்வழிக்
கடுங்கட் பருகுநர் நடுங்குகை யுகுத்த
நறுஞ்சே றாடிய வறுந்தலை யானை
நெடுநகர் வரைப்பிற் படுமுழா வோர்க்கும்
உறந்தை யோனே குரிசில்
பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே" (புறம்: 68)

*திணை : பாடாண்திணை* *துறை : பாணாற்றுப்படை*

*சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.*

பொழிப்புரை :—

*கலை கேட்போர் அற்ற கவலையால் உடும்புரித்தாற் போன்ற எலும்பெழுந்த உடம்பினராய் உள்ள நின் சுற்றத்து மிக்க பசியைத் தீர்ப்பாரைக் காணமல், நின் நுண்கலை கேட்போர் அருகுவதால் இக்கலை நின்னோடே அற்றுப்போகுமோ என்று கையறவு கொண்ட பாண! பூணைத்தாங்கிய அழகிய பெருமையுடைய எழில்பெற்ற மூன்று வரைகளைக் கொண்ட மார்பினையுடைய சோழன் நலங்கிள்ளி, கண்ணிற் பொதுவுண்ணும் மெல்லிய*

மகளிரால் தழுவக்குழையும் இயல்போடு வீற்றிருக்கின்றான். படைக்கலம் சுமந்து போர்க்களம் புகுந்தபோது வந்த வம்பமள்ளரை அழுந்தப் பிணித்துக் குழைக்கும் இயல் புடைத்து அவன் மார்பு. ஈன்றணிமையால் குழவிக்குப் பால் ஊறி நிற்கும் தாய்மார்புபோல, தன்கண் ஊறிப் பெருகும் நீரால் கரைமருங்கு நின்ற மரத்தொகுதியெல்லாம் வேர்கீண்டு சாயுமாறு நீர்பெருகி உலகு புரக்கும் காவிரி நாட்டுப் பொருநன் அவன்.

அவனுக்குத் தாயத்தாரால் நின்ற உட்பகை நீங்கப் பெற்றதால் அவன் தன் வீரர்களைப் புட்செய்யும் பகையிடத்து ஏவவில்லை. அதனால், அவ்வீரர்கள் மறப்பண்பு என்றும் தம்மினின்றும் நீங்காதவராகித் தமக்குள்ளே பொருது சாவேம் என்கின்றனர். அம்மறம் தணிந்து அமைதிகொள்ள, இதுகாறும் ஒலித்த வீரமுரசு மாற்றிச் சினம் தணிக்கக் கொட்டும் தணிமுரசு கொட்டப் படுகின்றது.

அம்முரசிருந்த தேரிலுள்ளவர்கள் கள்ளை மிகுதியாக உண்டதால் அறிவிழந்து கைநடுங்கிக் கீழே உகுத்த கள்ளால் தரை சேருகிப்போகின்றது. அச்சேற்றில் நின்று உழக்கும் பாகன் ஏருத யானைகள் நெடிய நகரிடத்தே ஒலிக்கும் பறையினைச் செவிதாழ்த்துக் கேட்கும்படியான உறையூரில் உள்ளான் அவன். அவனிடம் நீ செல்வையாயின் பிறன் கடைத்தலைச் சென்று நிற்கும் நிலை வாராதவாறு நினக்குப் பெருங்கொடை அளிப்பன்.

திணை, துறை விளக்கம் :—

புறப்பொருள்வெண்பாமாலையில் பாடாண்திணையில் பாணாற்றுப்படைக்கு,

" சேணோங்கிய வரையதரிற்
பாணனை ஆற்றுப்படுத்தன்று " (புறப். 216)

என்று சூத்திரமிருக்கின்றது. அஃதாவது, மிகவுமுயர்ந்த

மலேவழியிடத்துப் பாணனை வழியிலே செலுத்தியது என்பதாகும்.

தொல்காப்பியரும்,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறுஅர்க் கறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்"
(தொல். புறத். 36)

என்று கூறியுள்ளார். இதற்கு, "ஆடன்மாந்தரும், பாடற் பாணரும், கருவிப்பொருநரும் இவருட் பெண்பாலாகிய விறலியுமென்னும் நாற்பாலாருந் தாம்பெற்ற பெருஞ் செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச் சென்று தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடும்" என்று நச்சினுர்க்கினியர் உரை கூறியுள்ளார்.

**விளக்கவுரை :**

நலங்கிள்ளி உறையூரை வென்று இனி தனக்கு ஒரு பகையுமில்லே என்று அமைதியோடு இருந்தகாலத்துக் கோவூர்கிழார் வழியில் பாணர் கூட்டத்தோடிருந்த ஒரு பாணர் தலேவனை ஆற்றுப்படுத்திப் பாடுகின்ருர்.

பாணர்கள் தம் கலேயை உணர்ந்து மதித்து, அதன் வழித் தம்மைப் பேணிப் போற்றுவாரின்மையால் வறுமை யுற்று மெலிந்திருக்கின்றனர்.

பாணர்கள் முத்தமிழுள் ஒன்ருய இசைத்தமிழின் கூற்றில் தலேயாய யாழ்க்கருவியில் வல்லவர்கள். அவர்கள் தம் யாழின் இசைப்பண்பால் கடாம் சிறந்து கலாம் விளேக்கும் கடாக்களிற்றினேயும் தம் யாழ்வரைப்படுத்த வல்லவர்கள். இத்தகைய யாழ்க்கருவியின் துணேயினுல், பிறரைக் கோறலே குடிப்பண்பாகவும், தொழிலாகவுமுடைய

கலன்களைக் கைநெகிழ்த்து நிலைபெயராது நிற்கச் செய்ய வல்லவர்கள். இப்படி இயல்புக்கு மறுதலையாய செயல்களை யாழின் துணையினால் செய்யவல்ல அவர்கள் அக்கலைத் திறத்தின் நுட்பத்தினைப் பெறப் பல்கால் முயன்று மெய் வருத்தம் பாராது கண் துஞ்சாது கலையே கண்ணாகிக் கடுந் தவத்தால் ஊன் உருகி உள்ளொளி பெற்றிருக்கின்றனர். இங்ஙனம் இசைப்பயிற்சியில் ஈடுபட்டு இளைத்து என் பெழுந்து இயங்கும் யாக்கையராய்க் காட்சியளித்தும் கற் றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையராய்ப் புலமை மிக்கிருக்கின்றனர். பொதுவாக முத்தமிழின் துறையில் முறையொடு புக்கார் இளைப்பர் என்பதனை மணிவாசகரும்,

"........உயர்மதிற் கூடலின் ஆய்ந்தவொண் தீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல் புக்கோ
இறைவா தடவரைத் தோட்கென்கொலாம்புகுந் தெய்தியதே'

என்று தலைவனைப் பாங்கன் வினவும் முறையில் கூறுகின்றார். இவற்றையெல்லாம் பார்க்கின்றபோது இசைப்புலமையில் தலைநின்ற அப்பாணர்கள் கலையால் மெலிந்திருப்பதோடமையாது அவர்கள் மேலும் மெலிவ தற்கு நாட்டில் புலமை குறைந்தது மற்றொரு காரணம்.

கலை பொதுவாக எல்லோராலும் சுவைக்கப்பெறும் அளவிற்கு ஒருநிலைப்பட்டதன்று. அக்கலையே மிகநுட்ப மாகி ஒருசிலரால் மட்டுமே சுவைத்தற்குரியதாதலும் உண்டு. மிகச்சிலரால் சுவைக்கவல்ல அக்கலை மிகமிக நுண்கலை யாகும். வான்குருவியின் கூடு, வல்லரக்கு, தேன், சிலந்தி இவை அவ்வவற்றிற்கே தனிச்சிறப்புடைய கலைகளாகும். அவற்றுள்ளும் பொதுவும் சிறப்பும் உண்டு. அதுபோல இசைக்கருவிகளில் யாழிசைக்குப் பண்ணில், திறத்தில், இயக்கத்தில் பொதுவுமுண்டு; சிறப்புமுண்டு; தனிச்சிறப்பு முண்டு. பெரும் புலவர்கள் தம் கலையினை அஃதாவது, தாம் காட்டும் மிக அரிய நுட்பத்தினை எல்லோரும் புரிந்து பெரிதாக மகிழ்ந்து பாராட்டவேண்டுமென்றே கருதுவர். மறவர் மனத்தினின்றும் மறத்தினைப் பெயர்த்துப் படைக்

ஆனுல், உலகில் நுண்கலேயினே நுணுகி உணர்ந்தார் சிலர்; அந்நுட்பத்தினே உணராதாரே பலராவர். இங்கு, இவ் விசைப்பாணன் தன் யாழ்ப் புலமையைப் புலமை தெரிந்து சுவைத்த பெருமக்கள் அருகிப்போனது குறித்தும், தன் நுட்பத்தினே அவருள்ளும் சிலரே கேட்பாராகிப்போனது குறித்தும் நொந்துநொந்து இளேத்துப்போயிருக்கின்ருன். இங்ஙனம் இப்பெரும் புலமையுடைய பாணன் தன்ஞல் காத்தற்குரியோராய ஒரு பெரும் சுற்றத்தினேயும் கொண்டிருக்கின்ருன். அவன் கலேகேட்டுக் கொடுப்போர் இன்மையால் அவனே நம்பி வாழ்கின்ற அவனது சுற்றத் தினரும் கடும்பசியில் உழக்கின்றனர். இப்படித் தன்னே நோக்கி, தன்னேச் சூழ்ந்தோரைக் கண்டு, தன் கலேயை எண்ணி, அக்கலேயின் நுட்பத்தினே உன்னி, அக்கலே கேட்போர் அருகுதலேப் பார்த்து இரங்கி வெந்து ஓரிடத்து அமர்ந்திருக்கின்ருன்.

அவனுக்குத் தன்னிடமுள்ள இக்கலே தன்ஞேடு அற்றேபோகுமோ என்ற கையறவு ஒருபுறம். சுற்றத்தின் அவலம் ஒருபுறம். இவை அனேத்திற்கும் மேலாக யாவற் றையும் இழக்கச்செய்யும் பசிக்கொடுமை ஒருபுறம். இவ்வாறு கவர்புபட்ட மனத்தோடு கலங்கிநின்ற பாணனேக் காணு கின்ருர் கோவூர்கிழார். அவரும் அவனேப்போலவே சில் செவித்தாகிய கேள்விக்கு நொந்துநொந்து கையாறு கொண்டவர். எனவே, வழிநின்று அலமந்த அப்பாணனுக்கு நலங்கிள்ளியின் இயல்பினேயும் இருப்பினேயும் இடத்தினே யும் சுட்டி அவனே வழிப்படுத்திப் பாடுகின்ருர் கோவூர்கிழார். இங்கு, பாணன் பல காரணங்களால் இளேத்துக்கிடக்கின்ற காட்சி அவர்க்குத் தோலுரித்த உடும்பினே நினேவு படுத்திவிட,

"உடும்புரித் தன்ன என்பெழு மருங்கிற்
கடும்பின் கடும்பசி களேயுநர்க் காணுது
சில்செவித் தாகிய கேள்வி நொந்துநொந்
தீங்கெவன் செய்தியோ பாண"

என்கின்ருர்.

"ஏ பாணனே! நீ இப்பொழுது சென்ருல் உன் வறுமையைத் தீர்ப்பான் அந்த நெடுந்தகை" என்று கூறி நலங்கிள்ளி இத்தகைய தோற்றமுடையவன் என்பதை அறிவிப்பான்வேண்டி,

"பூண்சுமந்து
தம்பகட் டெழிலிய செம்பொறி யாகத்து
மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையின்
ஆடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை"

என்று அவனை அறிமுகம் செய்கின்ருர்.

"அவன் மார்பு இருவேறு செய்கைக்குரியது. படைக் கலம் சுமந்து போர்க்களம் புகுந்தபோது மேன்மேல் பகைத்துவரும் மள்ளர்களை இறுகப் பிணித்துக் குழைக்கும் அவன் மார்பு, அவையிலே அணிகலம் சுமந்து அழகுறுத்தி 'வரையகன் மார்பிடை வரையும் மூன்று கொண்டு' அப்பெருமையால் கண்ணிற் பொதுவுண்ணும் மெல்லிய மகளிரால் தழுவக்குழையும் இயல்புமுடையது. அத்தகைய அழகும் ஆற்றலும் மிக்க நலங்கிள்ளி தன் அவையில் இப்போது வீற்றிருக்கின்ருன்" என்கின்ருர்.

"வான் பொய்ப்பினும் தான்பொய்யாக் காவிரி நாடன் அவன். அக்காவிரியின் ஈன்றணிமையால் குழவிக்குப் பால் ஊறிநிற்கும் தாய்மார்புபோல, தன்கண் ஊறிப் பெருகும் நீரால் கரைமருங்கு நின்ற மரத்தொகுதி எல்லாம் வேர்கீண்டு சாயுமாறு நீர்பெருகி உலகுபுரக்கும் காவிரி நாட்டுப் பொருநன்" என்பதை,

"புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச்
சுரந்த காவிரி மரங்கொல் மலிநீர்
மன்பதை புரக்கும் நன்னட்டுப் பொருநன்"

என்கின்ருர்.

"அவனுக்குத் தாயத்தாரால் நின்ற உட்பகை சந்து செய்வித்தலால் ஒருவாறு நீக்கப்பெற்றதால், அவன் இனிப் பொருதற்கு ஓரிடமில்லை. பொருதொழிற்கே தம்மை

ஆக்கிக்கொண்டு போரில் பொன்றலே தமக்குப் பீடுதரும செயலென்று ஊன் வளர்த்து உரம் வளர்த்து உயிர்வாழும் அவன் வீரர்கள் தமக்குள்ளே சாவோம் என்றுகூறி, மறம் என்றும் தம்மினின்றும் நீங்காது இருக்கின்றனர். அவர்கள் ஒருவாறு மறந்தணிந்து அமைந்துவாழ இதுகாறும் ஒலித்த வீரமுரசிற்கு வேருக இப்பொழுது சினம் தணிக்கத் தணிமுரசு கொட்டப்படுகின்றது" என்பதனை,

"உட்பகை ஒருதிறம் பட்டெனப் புட்பகைக்
கேவா ஞகலிற் சாவேம் யாமென
நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்பத்
தணிபறை அறையும்"

என்கின்ருர்.

"அம்முரசு இவர்ந்து வந்த தேர்கள்ளைப் பெரிதும் உடையது. 'அத்தசும்பு துளங்கு இருக்கையில்' வீரர்கள் புடைசூழ நின்று தேட்கடுப்பன்ன நாட்படு தேறலையும் பாம்பு வெகுண்டன்ன தேறலையும் பருகுகின்றனர். களி மிகுதியால் அறிவிழந்து கைநடுங்கிக் கீழே உகுத்த கள் ஆருக ஓடிக் குளமாகத் தேங்க, ஆண்டு நின்ற யானைக் குழாங்கள் மிதிப்ப அவ்விடம் சேருகிப் போகின்றது. அங்குநின்ற அவ்யானைகள், தம் சுவல்மிசை இவர்தற்குரி யாரை ஏற்றியறியாத மதம் செறிந்தவை. அவை போர்ப் பறையே கேட்டு கொடிமதிற் பாயும் இயல்புடையன ஆதலால் அவண் ஒலிக்கும் தணிமுரசின் ஒலி வேறுபாடு கண்டு செவி சாய்த்து ஓர்க்கும். அங்கு ஓரிடத்தில் எம் குரிசில் உண்டாட்டு மேற்கொண்டிருக்கின்ருன். அவன் இலனென்னும் எவ்வம் உரையாமை ஈயும் குலனுடையனுதலால் நீ அவனைக் கண்டபின்றை ஒருவன் கடைத்தலைச் சென்று கலைத்திறங் காட்டி வறுமை போக்கும் ஒருநிலை எதிர்வில் வாராதவாறு ஈயவல்லவன். நீ சென்று அக்கொடையினைப் பெற்று மகிழ்ந்து வா!" என்று ஆற்றுப்படுத்துகின்ருர் கோவூர்கிழார். இதனை,

"கடுங்கட் பருகுநர் நடுங்குகை உகுத்த
நறுஞ்சே றாடிய வறுந்தலை யானை
நெடுநகர் வரைப்பிற் படுமுழா ஓர்க்கும்
உறந்தை யோனே குரிசில்
பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே"

என்பர்.

இப்பாட்டில் கோவூர்கிழார் கலையினுடைய இயல்பு, கலைவல்லாருடைய மனநிலை, அது மதிப்புண்ணாதபோது வரும் இழிநிலை இவற்றைக் குறித்துப் பேசியதோடு, கலை வல்லார்க்குப் பொருள்கொடுத்துப் பேணுவோர் ஒருபுடை வேண்டினும், அதன் நுட்பம் தெரிந்து சுவைப்போரும் பாராட்டுவோரும் பெரிதும் வேண்டும் என்று ஊன்றிக் கருதும் இயல்பு தெளிவாகும்.

அடுத்து, சோழன் நலங்கிள்ளி வீரப் பண்போடுமட்டும் வாழாமல் கொடைவாழ்வுமுடையன் என்பதைக் கூறுகிறார். அவன் இத்தகைய சிறப்பினைப் பெறுதற்குக் காவிரியின் வளமும், அவள் தந்த சோற்றுச் செருக்குமே காரணம் என்பதையும் குறிப்பிடுகின்றார். அரசனும் மறவர்களும் பெற்றுள்ள வீர இயல்பினை அவரால் பேணப்பெறும் யானைப் படைகளும் பெற்றிருக்கின்றன என்றும், அவற்றிற்கும் அம் மறவர்கட்கும் தணிபறை கொட்டியே சினந்தணிக்கவேண்டி இருப்பது குறித்தும் பெருமையோடு பேசுகின்றார். சோழ நாடு சோற்றுவளம் மிக்கதால் 'சோறாக்கிய கொழுங்கஞ்சி ஆறுபோலப் பரந்து ஒழுகி ஏறு பொரச் சேறாகும்' காவிரிப்பூம்பட்டினத்தில் என்றால், உறையூரில் சோழன் வாழுமிடம் உகுக்கின்ற கள்வெள்ளத்துக் களிறாடி சேறு செய்கின்ற அளவு கள்வளம் மிக்கது என்றும் கூறுகின்றார். இப்படியெல்லாம் சோழனுடைய எல்லாச் சிறப்பையும் ஆற்றுப்படுத்தும் முறையில் அழகொழுகக் கூறுகின்றார், கோவூர்கிழார்.

கோவூர்கிழார் நலங்கிள்ளியின் பேராற்றலினை 'புட்பகைக் கேவானாகலின்' என்று குறிப்பிடுகின்றார். புள்

என்ற சொல்லிற்குப் பறவை என்ற பொருளன்றி நிமித்தம் என்ற பொருளுமுண்டு. ‘நல்ல நல்லோர் வாய்ப்புள்’ என்பதில் புள் என்ற சொல்லிற்கு நிமித்தம் என்ற பொருள் இருத்தலைக் காணலாம். புட்பகை என்பது புள் அறிந்த பின்னும் அது உணர்த்தும் ஏதத்தையும் கருதாது பகைமேற் சேரலாகும். புட்பகைக்கு ஏவானாதலின் என்பது இதுகாறும் புட்பகைக்கு ஏவினன், இப்பொழுது உட்பகை ஒருதிறம் பட்டதால் முன்னையபோல பகைக்கு ஏவமாட்டான் என்று பொருள்.

பொதுவாகப் புள்ளறிதலும், உன்னங் கேட்டலும், விரிச்சி ஓர்த்தலும் எல்லா வேந்தர்கட்கும் உண்டேனும் இவன் மறமிக்க காரணத்தால் அவற்றைப் பொருட்படுத்திக் காண முற்படாதொழியினும், புள் நிமித்தமும் மற்றைய உற்பாதங்களும் கேடுகாட்டியபோதும் இவன் பொருவான். இவன் புள்ளிற்குப் பகைவனாதலால் புள் ஏதம் உடைமை யைக் காட்டினும் ஏவுவதற்குப் பகையின்மையால் ஏவான் ஆதலின் சாவேம் என்கின்றனர் அவன் வீரர்கள். புள் பகை காட்டியது அஃதாவது, அவனுக்கு ஏதமுண்மையை உணர்த்தியது பொய்க்கவில்லை. அந்நிமித்தங்கள் மெய்யே என்னும்வண்ணம் பகையில்வழியும் இவர்கள் தமக்குள் பகை விளைத்துக்கொண்டு பொருது சாவேம் என்பதால் புள் பகை காட்டியது மெய்யாயிற்று.

இதுபோலவே இளங்கோவடிகள் கணி கூறிய கூற்றினை மெய்யாக்க நினைந்து தமக்கு அரசியற்குரிய திருப்பொறி யிருந்தும் செங்குட்டுவனுக்கு அவ்வரசியலை விட்டுத் துறந்து கணியின் கூற்றினைப் பொய்யாக்கினும், கணியின் கூற்று அவரளவில் மெய்யாயிற்று என்பதைக் கண்ணகி வாயிலாக,

“சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து
அந்தமில் இன்பத்து அரசாள் வேந்து”

என்று கூறுவதால் அறியலாம்.

## 10. இன்னகை விறலி

" தேஎம் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண
கயத்துவாள் யாமை காழ்கோத் தன்ன
நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை
இனிய காண்கிவண் தணிகெனக் கூறி
வினவல் ஆனு முதுவாய் இரவல
தைத் திங்கள் தண்கயம் போலக்
கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்
அடுதீ யல்லாது சுடுதீ அறியாது
இருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்
கிள்ளி வளவன் நல்லிசை யுள்ளி
நாற்ற நாட்டத் தறுகாற் பறவை
சிறுவெள் ளாம்பல் ஞாங்கர் ஊதும்
கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடிப்
பாதிரி கமழும் ஓதி ஒண்ணுதல்
இன்னகை விறலியொடு மென்மெல இயலிச்
செல்வை யாயின் செல்வை ஆகுவை
விறகொய் மாக்கள் பொன்பெற் றன்னதோர்
தலைப்பா டன்றவன் ஈகை
நினைக்க வேண்டா வாழ்கவன் தாளே " (புறம்: 70)

*திணை : பாடாண் திணை* *துறை : பாணாற்றுப்படை*

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

பொழிப்புரை :—

தேன்போல் இனிய ஓசைபொருந்திய சிறிய யாழை யுடைய பாணனே! குளத்துவாழ் யாமையை ஒரு கம்பியில் கோத்துத் தொங்கவிட்டதுபோன்று கயிற்றில் கோர்த்துத் தொங்கவிடப்பட்ட தடாரிப்பறைகளை இயக்குவாய், இங்கு இருப்பாய் என்றெல்லாம் இடைவிடாது கேட்கின்ற முதுமையும் வாய்மையும் உடைய இரவலனே! கிள்ளி வளவன் நாட்டில் காவிரிநீர் நிறைந்த குளங்கள் தைத்

திங்களில் பளிங்குபோலத் தெளிந்து பருகுதற்கும், ஆடுதற்கும் இன்பந்தரவல்லது. அப்பொய்கையைப்போலக் கொளக்கொளக் குறையாத கூழ்வளமுடையது அவனது நகர். அது அடுதீயல்லது சுடுதீ அறியாதது. அவ்வாறு சோற்றையும் தண்ணீரையும் விளைக்கும் நல்ல நாட்டுக்கு வேந்தன் கிள்ளிவளவன். அவனுடைய நல்ல புகழை நினைந்து, மணத்தை ஆராயும் வண்டு வெள்ளிய ஆம்பல் மலரில் ஊதும் அத்தகைய கைவண்மைமிக்க பண்ணனது சிறுகுடிக்கண் பாதிரியின் மணம்போல் மணக்கும் தலைமயிரினையும், ஒள்ளிய நுதலினையும், இனிய முறுவலையும் உடைய விறலியுடனே மெல்ல மெல்ல நடந்து நீ செல்வாயேயானால் செல்வனாவாய். அப்பெருஞ் செல்வப்பேறு விறகு வெட்டச் செல்வோர் காட்டிடத்துப் புதைபொருள் பெறுதலைப்போல எங்கேயோ சென்றோம், எதையோ பெற்றோம் என்றதுபோன்று கருதல்வேண்டா. நீங்கள் கருதிய பரிசிலோ அதற்கு மிகுதியான பரிசிலோ கிடைக்கும். ஒன்றையும் நினைக்காது செல்லுங்கள். அவன் தாள் வாழ்வதாக!

திணை, துறை விளக்கம்: முன்பாட்டினைப்போலக் கொள்க.

விளக்கவுரை :—

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் போர்ப்பூசல் எதுவுமின்றிக் கலைவளர்ச்சியே கண்ணாகக் கொண்டு ஒவ்வொரு துறையிலும் புலமைமிக்காரைப் பாராட்டி வரிசையறிந்து பெரும்பொருள் வழங்குகின்றான். இவனுடைய இத்தகைய பெருமையைப் புலப்படுத்தவேண்டி வழிநின்ற பாணர்கூட்டத்தினை பரிசில்பெற்றுவந்த பாணனொருவன் ஆற்றுப்படுத்தும்முறையில் கோவூர்கிழார் பாடியது இப்பாட்டு.

இப்பாணன் சீறியாழினையும் மாக்கிணையினையும் கலைத்திறம் மலிய இயக்கவல்லவன். இவனோடு வந்த விறலியரும், ஆடலும் பாடலும் அழகும் என்றின்ன பண்புகளில் தலை

நின்றவர்கள். இவர்களை வழியிடைக் கண்ட ஒரு பாணன் இவர்தம் கலைப்பெருமை கண்டு இவர்கள் கிள்ளிவளவன் பாற் புகின், தரமிக்க பெரும் பொருள்களைப் பெறுவார்கள் என்ற காழ்த்த நம்பிக்கையால் அவன்பால் அவர்களை ஆற்றுப்படுத்துகின்ருன். இப்படிப் பரிசில் பெற்ற ஒரு பாணன், பரிசில் பெருது வருந்தும் மற்ருெரு பாணனை ஆற்றுப்படுத்துவதுபோல் கோவூர்கிழார் பாடு கின்ருர்.

இப்பாட்டில், இருந்த பாணன் (முதுவாய் இரவலன்) இயல்பினையும், ஆற்றுப்படுத்தியோன் இயல்பினையும், கிள்ளிவளவன் நாட்டின் பண்பினையும், அவன்பாற் பரிசில் பெறப்புகும் பாணனேடிருந்த விறலியர்தம் பெருமையினை யும், இத்தகையோர் செலின் கிள்ளிவளவனுல் தரப்பெறும் பரிசிலின் பெற்றியினையும் பண்பொழுகப் பேசுகின்ருர். இங்கு வந்த பாணன், வழிநின்ற பாணனின் இயல்பினைக் கண்டு பேசுகின்ருன். இருந்த பாணன் கலை ஈடுபாட்டினுல் வந்த பாணன் வைத்திருந்த கருவியினைக் கண்டு அச் சிறியாழின் இனிய இசையினைக் கேட்டு மகிழவேண்டியும், அவன் கைநின்ற மாக்கிணையின் ஒலியினை ஓர்த்துச் சுவைத்தல்வேண்டியும், அவனை அவ்விசைக் கருவிகளில் அவ்வவற்றிற்குரிய இசையோடு மீட்டுமாறு வேண்டுகின் ருன். அவன் கைநின்ற தடாரிப்பறை ஆமை அகடுபோல் அமைந்தது. குளத்தில் வாழுகின்ற ஆமையினுடைய வயிற்றுப் பகுதி வெள்ளிதாய்த் தோல்போன்றும் முதுகுப் பகுதி கரிதாய் மண்ணுல் இயன்ற சட்டிபோன்றும் காட்சி யளிக்கும். தடாரியைக் கண்டதும் அவனுக்குக் குளத்துவாழ் ஆமையின் நினைவு வந்துவிடுகின்றது. ஆமையைப் பிடிப்போர் அதனை ஒரு நாரில் கோத்துத் தொங்கவிட்டுச் செல்வார்கள். இக்காட்சி தடாரிப்பறை கயிற்றில் கோத்துத் தொங்கிவிட்டிருப்பதுபோல் காட்சி தருகின்றது. இதனைக் கண்டதும் இருந்த பாணன் வந்த பாணனை அவ்விசைக் கருவிகள் இருந்தவாற்றைக் கூறி அவற்றில் இசைக்க வேண்டுகின்ருன். இதனை,

'தேஎந் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண
கயத்துவாழ் யாமை காழ்கோத் தன்ன
நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை
இனிய காண்கிவண் தணிகெனக் கூறி
வினவல் ஆனு முதுவாய் இரவல''

என்பதால் அறியலாம்.

'இவ்வாறு யாழ் மீட்டுவாய், இப்படி மாக்கிணை இயக்குவாய், இவண் இருப்பாய்' என்றெல்லாம் இடைவிடாது கேட்கின்ற அம்முதிய இரவலனை வந்த பாணன் கண்டு, அவனுக்கிருந்த கலைநலத்தையும் ஆர்வத்தையும் வியந்து இத்தகையோன் கிள்ளிவளவனால் பாராட்டற் குரியவன் என்று கருதி அவன் இருக்குமிடத்தினைக் கூறி ஆண்டு ஆற்றுப்படுத்துகின்றான்.

கிள்ளிவளவனின் சோழநாடு காவிரியால் வளமூட்டப் பெற்றது. காவிரி தன்கண்ணுள்ள நீரினை நாடு எங்கணும் கால்வாய்களால் புகுத்திக் குளமாய் நிறைத்து வளமூட்டு கின்றது. இக்குளங்கள் தைத்திங்களில், பளிங்குபோல் தெளிந்து பருகுதற்கும் ஆடுதற்கும் இன்பம் தரவல்லவாகும். குளிர்காலமாதலால் தைத்திங்களில் நீரும் தண்ணென்றிருக்கும். இதனை,

'தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல்' (பரி. 11 : 91 வரி)
'நீதக்காய் தைநீர் நிறந் தெளிந்தாய்' (பரி. 11 : 115 வரி)
'தைத் திங்கள் தண்கயம் படியும்' (நற். 80)
'தைத் தண்கயம் போலப் பலர்படிந்து' (ஐங். 84)

என்பனவற்றால் அறியலாம்.

தைத்திங்களில் குளத்துநீர் குளிப்போர்க்குத் தண்ணென்று இருத்தலும், பருகுவோர்க்குத் தெளிந்திருத் தலும், கொள்வோர்க்குக் குறையாதிருத்தலும்போல, கிள்ளிவளவனாகிய பேரறிவாளன் பெற்ற திரு, ஊருணி நீர்நிறைந்தற்று ஆதலின் தைத்திங்கள் தண்கயமாகி இன்புறுத்தும் இயல்புடையது.

சோழநாடு சோறுடைத்தாதலின் அவன் நகர் என்றும் கூழ் அருதது. அவன் நாடு அவன் வீரப் பெருமையால், பகைப்புலத்தாரால் படையெடுக்கப்பெற்றுக் கலங்கி அலக்கணுற்று அலமருமாறு என்றும் சுடுதீ ஏற்றதில்லை. ஆனல், ஆங்காங்கு அவன் நாட்டில் கூழ் அடுகின்ற தீயே பெரிதாகிச் சுடுதீபோன்று காட்சியளிக்கின்றது. பசிப்பிணி மருத்துவன் சோழனுமாதலால் அவன் பத்தும் கெடாது காக்கப் பசிநோயகற்றி, மக்கட்கு மானம், குலம், கல்வி முதலியவற்றை நிலைபெறுத்துகின்ற சோற்று மருந்தினை என்றும் விளைவிக்கும் நாடுடைப் பெருமகனவன். ஆதலால் அவன்பாற் சென்று நிரப்பொழிந்து சிறப்பினைப் பெற்றுக் கலைக்குரிய பெருமையை நீங்கள் எய்தலாம் என்று கூறி ஆற்றுப்படுத்துகின்றவன், சோழன் இயல்பினை,

"தைஇத் திங்கள் தண்கயம் போலக்
கொளக் கொளக் குறைபடாக் கூழுடை வியநகர்
அடுதீ யல்லது சுடுதீ அறியாது
இருமருந்து விளைக்கும் நன்னட்டுப் பொருநன்"

என்று அறிமுகம் செய்வதைக் காணலாம்.

இங்ஙனம் பாணனை நோக்கிக் கூறியவன் பக்கல் நின்ற விறலியரைக் காணுகின்ருன். அவர்கள் இயற்கையழகும் கற்பின் மேம்பாடும் பொருந்தியவர்கள். கற்புடைய அவ்விறலியர்பால் நிகழும் மணம் ஆற்றுப்படுத்திய பாணனுக்குப் பண்ணனின் நினைவினைப் பிறப்பித்து விடுகின்றது. கற்புடைப் பெண்டிருடைய நுதலும் கூந்தலும் பாதிரிப்பூவின் மணத்தினைக் கொள்ளும் என்பது இலக்கியம் கண்ட உண்மை. ஆதலால், இவ்விறலியர்கள் பாதிரிப் பூவைச் சூட அது மணந்தது என்பதினும் இயற்கை மணம் கொண்டதால் கூறியதாகக் கொள்ளலாம். பாணனின் நாடு பாதிரி மலர்களால் நிறைந்தது. அவனும் பெரும் வள்ளல். கலைப்பண்பு அறிந்து தரவல்லவன். அவன் நாடும் காவிரி வளம் தலைப்பட்டதே. 'கழற்காற் பண்ணன் காவிரி வடவயின்' என்பவாகலின் காவிரிநாடன் பண்ணனின் நாடும் நீர்வளம் மிக்கது. அவன் நாட்டிலே அவ்வளத்

தால் ஆம்பல் மிகுதியுமுண்டு. அவ்வெள்ளாம்பலில் கருவண்டூதி காட்சிக்கு இனிமையும், செவிக்கு இன்பத்தையும் தருகின்றது.

பண்ணனின் அத்தகைய நாட்டில் பூத்த பாதிரியின் மணம்போல் மணக்கும் பித்தையினையும், நுதலினையும், முருந்தேய்க்கும் வெண்பல்லினையும் உடைய விறலியோடு கூடி மெல்லிதாக நடந்து சென்றால் போதும். அவன் உங்களைச் செல்வனாக்கி விடுவான் என்பதனை,

"கிள்ளி வளவன் நல்லிசை உள்ளி
நாற்ற நாட்டத் தறுகாற் பறவை
சிறுவெள் ளாம்பல் ஞாங்கர் ஊதும்
கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடிப்
பாதிரி கமழும் ஓதி ஒண்ணுதல்
இன்னகை விறலியொடு மென்மெல இயலிச்
செல்வை யாயின் செல்வை ஆகுவை"

என்கின்றார்.

அவன் உங்களைச் செல்வனாக்குவது என்பது தற்செயலாக நிகழும் நிகழ்ச்சியென்று நீங்கள் கருதவேண்டா. அவன் 'வரிசையறிதலிலும், வரையாது கொடுத்தலிலும்' வல்லவன், எனப் பரிசிலர் ஏத்தும் புகழ் மிக்கவன். உங்கள் பண்பறிந்து, கலைநலங்கண்டு, தரந்தெரிந்து உவப்பத் தருவானே அல்லாமல் காணாது கருதாது ஈயும் பரிசிலன் அல்லன் அவன்.

விறகு வெட்டச் செல்வோர் புதையல் பெறுதல்போல, எங்கோ சென்றோம் எதையோ பெற்றோம் என்றதுபோன்று நீங்கள் கருதவேண்டாம். யான் ஏவ நீங்கள் கலைப்பண்பு காட்டிப் பரிசில் பெறக் கிள்ளிவளவன்பாற் புக, அவனும் நீங்கள் எதிர்பார்த்த பரிசிலையே தந்தான் என்றிருக்குமன்றி, ஏதோ கடமைக்குத் தந்தான் என்றிருக்காது.

"தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்கினிய தில்"

என்பார் வள்ளுவராதலின் நீங்கள் பெற்ற பெரும் பொருள்

உங்கள் புலமையாலும், பெற்ற முயற்சியாலும் உங்கள் பொருளேயன்றி, அவன் ஒன்றும் அறியாது மிகுதியாகக் கொடுத்த பொருளன்று என்கின்ருர். இங்கு இவர்தம் கலைப்பெருமை அத்தகையது என்றும், அக்கலையை அளந் தீயும் பெற்றியன் அவன் என்றும் கோவூர்கிழார் இருவர்க்கும் பெருமை பேசுகின்ருர். இதனை,

" விறகொய் மாக்கள் பொன்பெற் றன்னதோர்
தலைப்பா டன்றவன் ஈகை
நினைக்க வேண்டா வாழ்கவன் தாளே "

என்கின்ருர்.

விறகொய் மாக்கள் பெற்ற விழுப்பொருளை வெளிப்பட யாரும் பயன்படுத்த முடியாது. அதனுல் அதுபோன்ற தன்று அவன் கொடை. கிள்ளிவளவன் எதிர்பார்த்த பொருள் தருவான். ஆனுல், அதில் எதிர்பாராத மிகுதியும் உண்டு. அது அன்பினுல் ஆயது என்று கோடல்வேண்டு மன்றி விழுக்காடன்று. அவன் கலைஞர்களைச் செல்வராக்க வேண்டுமென்றே தருவான் என்கின்ருர்.

இவ்வாறெல்லாம் கோவூர்கிழார் கிள்ளிவளவன் பெருமைகளைக் கூறி ஆற்றுப்படுத்தியும், அவ்விரவன் மாக்கள் விரைந்து சோழன்பால் புகமுற்படாது நீடு நினைந்து வாளா இருப்ப, அதனைக்கண்ட கோவூர்கிழார் அவர்கள் மனக்குறிப்பினை உணர்ந்து, " நீங்கள் ஒன்றையும் நினையாது கிள்ளிவளவனை உன்னிச் செல்லுங்கள். அவன் ஒரு தரமறி கொடைஞன். அவன் நீடுவாழ்ந்து கலைஞர்களைப் பேணட்டும்" என்பதைக் கூறி,

" நினைக்க வேண்டா வாழ்கவன் தாளே "

என்று வாழ்த்தெடுக்கின்ருர்.

இப்பாட்டில் கோவூர்கிழார் பாணனை ஆற்றுப்படுத்தும் போது கொடை பெறுவோன், கொடை தருவோன் என்ற இருவர் தரத்தையும் செம்மையாக உயர்த்தி, கொடுக்கும் கொடைக்கு ஓர் இலக்கணம் கூறிமுடிப்பது நோக்கத்தக்கது.

## 11. உளங்கழி சுடர்ப்படை

" பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண !
சீறூர் மன்னன் சிறியிலை எஃகம்
வேந்தூர் யானை ஏந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த வேலே என்னை
சாந்தார் அகலம் உளங்கழிந் தன்றே
உளங்கழி சுடர்ப்படை ஏந்திநம் பெருவிறல்
ஓச்சினன் துரந்த காலை மற்றவன்
புன்தலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே"

(புறம். 308)

திணை: வாகை. துறை: மூதின்முல்லை.

பொழிப்புரை:

பொற்கம்பியினையொத்த முறுக்குடைய நரம்பினையும், மின்னலையொத்த தோலினையும், மிஞிறென்னும் வண்டுகளின் குரல்போன்ற இனிய ஓசையையுமுடைய சீறியாழின் நன்மைகள் நிறைந்த, எல்லோராலும் விரும்பத்தக்க பாண! என்தலைவனும் நும் பெருவிறலுமான சீறூர் மன்னன் பண்ணன் ஓச்சிய சிறிய இலைவடிவமான வேல் அவனை எதிர்ந்த வேந்தன் ஊர்ந்து வந்த யானையின் முகத்தில் தைத்தது. அவ்வேந்தன் சினந்து எறிந்த வேல், என் தலைவனின் சாந்து புலர்ந்த அகன்ற மார்பினைத் தைத்து ஊடுருவி நின்றது. அவ்வேந்தன் எறிந்து உளங்கிழித்து மெய்நின்ற அச்சுடர்ப்படையைப் பறித்தெடுத்து, தன் வலியெல்லாம் செறிய ஏந்தி விசியெறிந்தான். அவ்வேல் வரும் விரைவினைக் கண்ட அவ்வேந்தனின் களிறுகளெல்லாம் புல்லிய தலையையுடைய பிடி நாண, புறக்கொடுத்து ஓடின.

திணை, துறை விளக்கம்:

இப்பாட்டினை நச்சினார்க்கினியர் வெட்சித்திணையுள் அடக்கி 'ஆரமர் ஓட்டல்' என்னும் துறைக்கு உதாரணமாக்கிக் காட்டுவர். புறநானூற்றில் இப்பாட்டிற்குத் திணை துறை குறிப்பிட்டவண்ணம் மூதின்முல்லை என்ற ஒரு துறை தொல்காப்பியத்தில் இல்லை. வாகைத்திணையில் மூதின்முல்லை என்பதொரு துறை புறப்பொருள்வெண்பாமாலையில் காணப்படுகின்றது. அத்துறைக்குச் சூத்திரம் கூறிய அந்நூலாசிரியர்,

'அடல்வேல் ஆடவர்க் கன்றியும் அவ்வில்
மடவரன் மகளிர்க்கு மறம்மிகுத் தன்று'

(புறம். 175)

என்று கூறுகின்றார். இவ்விளக்கத்திற்குத் தக்கவாறு,

"வந்த படைநோனாள் வாயின் முலைபறித்து
வெந்திறல் எஃகம் இறைக்கொளீஇ—முந்தை
முதல்வர்கல் தான்காட்டி மூதின் மடவாள்
புதல்வனைச்செல் கென்றாள் போர்க்கு'"

என்று இப்பாட்டினை மேற்கோளாகக் காட்டுகின்றார். ஆனால் 'பொன்வார்ந்தன்ன' என்ற இப் புறப்பாட்டு இதுபோன்ற சூத்திரத்திற்கும் அதன் விளக்கத்திற்கும் உரிய பொருளைப் பெற்றதாக இல்லை. ஆனால்,

'புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே'

என்ற இரண்டு அடிகளின் துணையினால் மூதின்முல்லை என்ற துறைக்கு ஒருவாறு சார்த்திக் கூறமுடிகின்றது. போர்க்களத்து வீரம்விளைக்கச் சென்ற ஆண் யானைகள், பகை வேந்தன் எறிந்த வேலோச்சிற்கு அஞ்சிப் புறக்கொடுத்து ஓடிவிட்டன. அவை ஓடியது கண்ட பெண்யானைகள், 'தாம் போருக்குப் போகமுடியவில்லையே, சென்ற தம் கணவன்மார்கள் இங்ஙனம் புறக்கொடுத்து விட்டார்களே' என்று வீரம் மிகுந்து மானமழிந்த அவர் செயற்கு நாணியதாகக் கூறி, பெண்டிற்கு மறம்மிகும் என்பதற்கு வேறாக பெண்

யானைக்கும் மறம் மிகும் என்று மூதின்முல்லையின் துறையின் பாற்படுத்தலாம்.

ஆனல், புறநானூற்றில் வாகைத்திணையில் மூதின்முல்லை என்ற துறையில்,

" கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளி ராதல் தகுமே
மேனு ளூற்ற செருவிற் கிவடன்னை
யானை யெறிந்து களத்தொழிந் தனனே
நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப் பட்டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
ஒருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே "

(புறம். 279)

என்ற பாட்டு காட்டப்பெற்றுள்ளது. ஒக்கூர்மாசாத்தியார் பாடிய இப்பாட்டே புறப்பொருள் வெண்பாமாலைச் சூத்திரத்திற்கும், அதற்கு மேற்கோளாகக் காட்டப்பெற்ற பாட்டிற்கும் பொருத்தமாக அமைந்துள்ளது.

'கெடுக சிந்தை' என்ற பாட்டை இளம்பூரணர்'

"மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையு மத்திணைப் புறனே "

(தொல். இளம். 62)

என்ற சூத்திரத்திற்கு மேற்கோள் காட்டி, இவற்றுள் ஆண்பால்பற்றி வந்ததனை 'இல்லாண்முல்லை' எனவும், பெண்பால்பற்றி வந்ததனை 'மூதின்முல்லை' எனவும் கூறுப. 'பொன்வார்ந்தன்ன' என்ற இப்பாட்டு பெண்பால்பற்றி வந்த மூதின்முல்லை யாதலால், இது தொல்காப்பியத் துறையில் அடங்கும்.

விளக்கவுரை :

கோவூர்கிழார் இப்பாட்டில் ஒரு சீறூர் மன்னனைப் பற்றிப் பாணனை விளித்துக்கூறுமாறு கூறுகின்றார். இச் சீறூர் மன்னன் பண்ணனாக இருத்தல்கூடும் என்பது, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் சிறுகுடிகிழான் பண்ணனை,

'யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய'

என்று பாடிய பாட்டின் அடிக்குறிப்பினால் அறியலாம், சிறுகுடிகிழான் பண்ணன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனால் எத்துணை மதிப்பினைப் பெற்றால், இத்தகைய பாட்டினைப் பாடற்குரியோன் ஆவன் என்பது விளங்கும். குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் போர் மேற்கொண்ட போதெல்லாம் பகை வெல்ல இவன் துணை புரிந்தவனாதல் வேண்டும். இங்ஙனம் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனால் பாடவும் பாராட்டவும் புகழவும் உரிய சிறுகுடிகிழான் பண்ணனைக் கோவூர்கிழாரும் பாடியிருக்கின்றார். அதனால்தான் இவன் 'சீறூர் மன்னன்' என்று குறிக்கப்பெறுகின்றான்போலும்!

இச்சீறூர் மன்னன் பண்ணன் ஒருகால் மூவேந்தருள் ஒருவனால் எதிர்க்கப்பெற்றான். அப்பொழுது நடந்த நிகழ்ச்சி யினைக் கோவூர்கிழார் ஒரு பாணனிடம் கூறுமாப்போல அவன் வீரச்சிறப்பினைக் குறிப்பிடுகின்றார், கோவூர்கிழாரால் விளிக்கப்பெறும் பாணன் சீறியாழ் மிழற்றுவோன். சீறியாழ் என்பது கோடு, திவவு, பத்தர், போர்வை, நரம்பு ஆய ஐந்து உறுப்புக்களைக் கொண்டது. இங்கு இப் பாணன் தாங்கிய சீறியாழில் உள்ள நரம்பு முறுக்குடைய தேனும், அம்முறுக்கெல்லாம் மேல்கீழாக இல்லாமல் ஒன்றித்து அடங்கி வடித்த பொற்கம்பிபோல இருக்கின்றது. அந்நரம்புகள் யாத்த பத்தரிலுள்ள தோல் மின்னலைப்போல் ஒளிர்ந்து காணப்படுகின்றது. அவற்றில் பிறக்கும் ஒலி வண்டினங்கள் முரல்வதுபோல் இருக்கின்றது. இச்சீறி யாழில் பிறக்கின்ற இசை கேட்போர்க்கு இனிமை தருவதால்

அப்பாணன் விரும்பத்தக்கவனுகின்றுன். இப்படி எல்லோராலும் விரும்பத்தக்க சீறியாழினைப் பெற்ற பாணனை,

‘பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண’

என்று விளிக்கின்றுர்.

யாழிற்குச் சிறப்பு அவற்றின் உறுப்புக்களானும், அதனை இயக்குவோராலும் உண்டாகும். யாழ் இயற்றப்பெறும் மரம் நீர்நிலைநிற்றல், இளையதாதல், முதிர்தல், இடியேறுண்டல் போன்ற குற்றம் படுமேல் யாழிசை செம்மையுருது. இது யாழ்க்கருவியின் மரப்பகுதியான் வரும் இசைக்குற்றம். இனி நரம்பான் வருவது பெரிது. நரம்புகள் முறுக்குண்டு யாண்டும் ஒவ்வாது அம்முறுக்கு வெளியில் தோன்றி ஏற்றிழிபுடையதாய் இருப்பின் நரம்பு வேற்றெலியைப் பிறப்பித்து ஒலி நயத்தைக் கெடுக்கும். இதை,

“தீந்தொடை நரம்பின் தீமை சிறிதலாப் பொழுது மோதிப்
பூந்தொடை யரிவை காணப் புரிநெகிழ்த் துரோமங் காட்டத்
தேங்கமழ் ஓதி தோற்றுள் செல்வனுக் கென்ன மைந்தன்
வாங்குபு நபுலன் கையுள் வார்புரி நரம்பு கொண்டான்”
(சிந். 721.)

என்ற சிந்தாமணிப் பாட்டானும் தெளியலாம். ஆதலின் நரம்புகள் யாண்டும் ஒருநிகருடையதாய்ப் பொற்கம்பியை வடித்தாலொப்ப இருக்கவேண்டும் என்பதனை,

‘பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்’

என்கின்றுர்.

சீறூர் மன்னன் பண்ணன், தன்னை யானைப்படையொடு வந்து எதிர்ந்த வேந்தனைத் தடுப்பான்வேண்டித் தன் கைக்கண் இருந்த சிறிய இலைவடிவான் இயன்ற வேலினை

ஓச்சினுன். அவ்வேல் அவ்வேந்தன் ஊர்ந்து வந்த யானை யின் முகத்தில் தைத்தது. அதுகண்ட வேந்தன் சினந்து தன் கையேந்தி எறிந்த வேல் என்னையிற் சிறந்த பண்ண னின் சாந்து புலர்ந்த, அகன்ற மார்பினைத் தைத்து நெஞ் சினைப் பிளந்து ஊடுருவி நின்றது. கைவேல் களிற்ருெடு போக்கிய அப்பெருந்தகை தன்பால் வேலோச்சிய வேந்தன் மீது எறிய வேலில்லாதபோது, அவன் எறிந்து உளங் கிழித்துத் தன் மெய்நின்ற அவ்வேலினையே பறித்தெடுத் துத் தன் வலியெல்லாம் செறிய ஏந்தி அவ்வேந்தன்பால் வீசி எறிந்தான். அவ்வேல் வரும் விரைவினைக் கண்ட களிற்றுக் கூட்டங்களெல்லாம் எதிர்த்தல் ஒழிந்து கெட்டுப் புறங்கொடுத்தன. இவை புறங்கொடுத்து ஓடல்கண்ட போர்க்களம் புகாதிருந்த பிடிகளெல்லாம் தமக்குற்ற கணவர்களாகிய களிறுகளெல்லாம் புதைவேலில் பட்டுப் பாடுன்ருவாய் இங்ஙனம் பெயர்ந்தனவே என்று, அவற்றின் செயற்கு நாணின. தாம் பெண்டிராக இருந்தும் புறக் கொடுத்தலாகிய இழிசெயலை என்றும் நினையாதனவாகியும், அவற்றிற்குற்ற களிறுகளெல்லாம் இங்ஙனம் பிறக்கிட் டனவே என்று அவற்றைக் கணவனுகப் பெற்றமைக்கு நாணின. இங்ஙனம் பிடிகள் நாண வேந்தன் கொணர்ந்த களிறுகள் பிறக்கிட இவன் வென்ருன் என்று குறிப்பிடும் போது பெண்யானைக்கு ஆண்டுப் போரிட்ட ஆண்யானை யின் மேம்பட்டு மானத்தால் மறம் நிகழ்ந்ததாகக் கூறி முடிக்கின்ருர்.

யானையொடு போரிடுவது என்பது அரிய செயல். 'புதை அம்பிற் பட்டுப் பாடுன்றும் களிறு' என்பர் வள்ளுவர், ஆதலால், களிற்றினை எதிர்ப்பதினும் களிற்றுப் படையினைச் சிதைப்பது என்பது ஆற்றலுள் ஆற்றல் வாய்ந்த செயல். கட்டியங்காரனுக்கும், சீவகனுக்கும் இறுதி யில் நடந்த போரில் சீவகனுடைய தோழன் விபுலன் என்பான் ஆயிரம் யானைகளை வேலோச்சி விரட்டிய செய்தியை,

" ஒன்றுயினும் பலவாயினும் ஓரோச்சினும் எறிய
வென்றுயின மதவேழமும் வுளவோவென வினவிப்
பொன்றுழ்வரைப் புலிப்போத்தெனப் புனேதார் மிஞிறுர்ப்பச்
சென்றுனிகல் களிறுயிரம் இரியச் சினவேலோன் "
(சிந். 2262 மண்மகள்)

எனக் குறிக்கின்றுர் தேவர். இங்கு, இச்சீறூர் மன்னன் பண்ணன் இத்தகைய ஆற்றல் பெற்றுக் குஞ்சரப்படை புறக்கொடுத்தோட வேந்தனே ஓட்டிய செய்தியைக் காணலாம்.

இவற்றையெல்லாம் கொண்டு பார்க்கின்றபோது கோவூர்கிழார் சிறுகுடிகிழான் பண்ணனின் பேராற்றலினே வேந்தனேப் பிறக்கிட்டோடச் செய்தானென்று குறிப்பிடாமல், தன் உளங்கழி சுடர்ப்படையால் கடிதோச்சிப் பிடிநாணக் குஞ்சரம் ஓடின என்பதில் புலப்படுத்திக் காட்டுகின்றுர். பெரிய வீரர்கள் எதிர்த்த அனேவரையும் தம் கருவிகொண்டு சிதைத்து வெற்றி விளேப்பதினும் தம் படைத்தகையாலும், தம் கருவிப் பெருமையாலும், தம் பார்வையின் கடுமையாலுமே வெற்றி விளேப்பார்கள். இதனே,

" அரிமா னிடித்தன்ன அஞ்சிலே வல்விற்
புரிமாண் புடையிற் புறங்காண்ட லல்லால்
இணேப்படைத் தானே யரசோ டுறினுங்
கணேத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பின் "
(பாலேக் கலி. 15)

என்பதாலறியலாம். இங்கு உண்மையான பெரும் வீரர்களின் செயலும் வெற்றியும் தெளிவாக்கப்பெற்றுள்ளது. இங்கு வீரர்கள் தமக்குப் பகையாயினுரை வெல்லுதற்குத் தம் வில்லில் அம்பைத் தொடுப்பதற்கு நாணி, தம்வில்லில் பூட்டப்பெற்ற நாணினேத் தெறித்து, சிங்க ஏறு இடித்தாலொப்ப அதன்வழிப் பிறக்கும் ஒலியினுல் அவர்களே

அச்சுறுத்திப் பிறக்கிடச் செய்வார்களேயல்லாமல் கொல்லு தலே மேற்கொள்ள மாட்டார்கள் என்று குறிப்பிடுகின்ருர். இதனைப் பார்க்கின்றபோது இச்சீறூர் மன்னன் தன் மெய்வேல் பறித்து அதனைத் திரித்து ஓச்சிய அளவிலேயே யானைப்படை புறக்கொடுப்ப அவற்ரேடு வந்த வேந்தனைப் பிறக்கிட்டு ஓட்டிய செய்தி புலனுகும்.

இப்பாட்டிற்கு வேறு ஒருவாறு பொருளும் கூறலாம். அரசன் இவர்ந்து வந்த யானை பிடி. அது தன் முகத்து வேல் பாய்ந்த வருத்தத்தையும் தாங்கிநிற்க, களிறுகளெல் லாம் புறங்காட்டி ஓடியதைக் கண்டு அப்பிடி நாணிற்று. இவ்வாறு பெண்யானைக்கு மறமிகுந்தது கூறியதால் இப் பாட்டை மூதின்முல்லையின்பாற் படுத்தலாம்.

அரசன் பிடியில் வருவது பொதுவாக உலா வருதற்கே ஆம். ஆனல், இவனே பிடி இவர்ந்து வந்திருக்கின்ருன். களிறு இவர்ந்து போர்க்குப் போதல் மரபு என்பதற்கு "இறுவரை இவர்வதோர்" (சிந். 1833) என்ற சிந்தாமணிப் பாட்டு சான்ருகும்.

---

## 12. நிறனுற்ற அரா

"கட்பபடை அடற்கொண்டி
மண்டுற்ற மறநோன்ருள்
தண்சோழ நாட்டுப்பொருநன்
அலங்குளை அணிஇவுளி
நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்பாடிப் பெறல்வேண்டேம்
அவற்பாடுதும் அவன்தாள் வாழியவென
நெய்குய்ய ஊனவின்ற
பல்சோற்ருன் இன்சுவைய
நல்குவனின் பசித்துன்பற
என்பநின் பொருநர் பெரும அதற்கொண்டு
முன்னுள் விட்ட மூதறி சிருஅரும்
யானும், ஏழ்மணியங் கேழணியுத்திக்
கட்கேள்விக் கவை நாவின்
நிறனுற்ற அரா அப் போலும்
வறனெரீஇ வழங்குவாய்ப்ப
விடுமதி யத்தை கடுமான் தோன்றல்
நினதே, முந்நீ ருடுத்தவிவ் வியனுல கறிய
எனதே, கிடைக்காழ் அன்ன தெண்கண் மாக்கிணை
கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோல்
எறிதொறும் நுடங்கி யாங்குநின் பகைஞர்
கேட்டொறும் நடுங்க ஏத்துவென்
வென்றதேர்பிறர் வேத்தவை யானே." (புறம். 382)

திணை : பாடாண் திணை. துறை : கடை நிலை.

சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

பொழிப்புரை :

நலங்கிள்ளி கடற்படை செலுத்தித் தன் அடல்காட்டிக் கவர்ந்து பெற்ற பெரும் பொருளுடையன் ; செறிந்த மறமும் முயற்சியும் கொண்டவன் ; தண்மை செய்யும் சோழநாட்டு வீரன் ; அசைகின்ற பிடரிமயிரின் பெருமை

யால் தோற்றப் பொலிவுள்ள குதிரைகளையுடையவன். அவன் விருப்பத்திற்குரிய கிணைப் பொருநர்களாகிய யாங்கள் அவனையன்றிப் பிறர் புகழ் பாடிப் பொருள் பெறுவதை விரும்புவதில்லை; அவன்தாள் வாழ்க என்றே அவனை வாழ்த்திப் பாடுவோம். நெய்யில் 'குய்' என்னும் ஓசை உண்டாகும்படிப் பொரித்த ஊனோடு பலதிறப்பட்ட இனிய சோற்றினை என் பசியற நீ நல்குவாய் என்று நின் பொருநர்கள் கூறுவார்கள்.

முதிர்ந்த அறிவுடைய சிறூர்களும் யானும் நின்னால் முன்னம் பரிசில் பெறாது விடப்பட்டோம். அதனால், எழுச்சியையுடைய மணியையும், நிறம் பொருந்திய பொறிகளையும், கண்ணிற்பொருந்திய செவியையும், கவைத்த நாவையுமுடைய வண்ணம்பொருந்திய நல்லரா கதுவிப் பொறிபுலன்கள் அனைத்தையும் ஓயச்செய்யும் கடுவன்ன யாங்கள் உற்ற வறுமைத் துன்பம் நீங்க இப்பொழுது நின்னுடையதாக இருக்கின்ற கடல்சூழ் மண்டிலம் அனைத்தும் பிறர்க்கு வழங்கும் உரிமையோடு எல்லோருமறிய எனதாகட்டும். காழ்த்து முதிர்ந்த நெட்டியினை அரிந்தாலொத்த மாக்கிணையின்கண் யாத்து வைக்கப்பட்ட சிறுகுணிலால் அடிக்குந்தொறும், அப்பறை அதிர்ந்தாங்குப் பல தேர் வேந்தர்களை வென்ற வெற்றிக்களிப்புடைய நின் பகைவர் தம் அவையத்து அவர் நடுங்க நின் புகழ் பாடி ஏத்துவேன்.

திணை, துறை விளக்கம்:

'பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்'

(தொல். புறத். 36)

என்பதனைப் 'பரிசில் கடைஇய நிலை' என ஒரு துறையாகவும், 'கடைக் கூட்டு' நிலை என ஒரு துறையாகவும் பிரித்து, பரிசில் கடைஇய நிலை என்பதற்குப் 'பரிசிலரை நீக்குதல் அமையாது நெடிது கொண்டு ஒழுகிய தலைவர்க்குப் பரிசில் வேட்டோன் தன் கடும்பினது இடும்பை முதலியன கூறித் தான் குறித்த பொருண்மையினைச் செலுத்திக் கடாவின நிலையும்' என்று பொருள் கூறியுள்ளார் நச்சினார்க்கினியர்.

ஆகவே, 'கடைஇய நிலை' என்ற துறையே இப் பாட்டிற்குப் பொருத்தமான துறையாகும்.

" சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானும் "
(தொல். புறத். 34)

என்ற கடைநிலைத்துறை இப்பாட்டிற்கு ஏற்றதன்று. காரணம் இப்பாட்டில் அரசனைக்கண்டு இன்னது தா என்று கேட்பதால் இது கடைநிலையன்று. 'கடைஇய நிலை' என்னும் துறையே ஏற்புடைத்து.

விளக்கவுரை :

இங்குக் கோவூர்கிழார், தாம் முன்னர் அவன்பால் பரிசில் பெருத ஒரு பொருநர் தலைவனுக இருந்து பாடுகின்ருர். பொருநர் தலைவராகிய தாமும், சில மூதறிசிருர்களும் நலங்கிள்ளிக்கேயுரிய கிணைப்பொருநர்கள் கூறிய அவன் கொடைப் பெருமையை உணர்ந்து இப்பொழுது மீண்டும் பரிசில் பெற வந்திருப்பதாகக் கூறுகின்ருர். நலங்கிள்ளி முன்னர் ஒருகால் பரிசில்மாக்கள் வேண்டியபோது அவர்க்கும் அவர் சுற்றத்தார்க்கும் உண்பொருள் கருதிப் பூவா வஞ்சியையும், விறலியர்க்குப் பூவிலையாக மாடமதுரையையும் தந்துவிட்டான். எனவே, தாம் பெறுதற்கு இனி ஒன்றில்லை என்று கருதிக் கழிந்த மூதறிசிருரும் தாமும் பெரிய வறுமைத் துன்பத்தில் வாடிவிட்டதால், நலங்கிள்ளி இப்பொழுது கடற்படை செலுத்திக்கொண்ட வெற்றியோடு வேறு பிற வெற்றியும் கொண்டிருக்கின்ருனுதலால், அவன் இப்பொழுது முன் விறலியர்க்கும் புலவர்க்கும் கொடுத்த கொடைபோன்று ஒரு கொடையினைத் தமக்கும் தருமாறு வேண்டுகின்ருர். இவர் கேட்கின்ற கொடை இதுகாறும் யாராலும் கேட்டிராதது. அதற்கேற்ப நலங்கிள்ளியும் தான் இதுகாறும் கைக்கொள்ளாத பிறர் நாட்டையும் தன் வீரத்தில் வைத்த நம்பிக்கையால், வேண்டும் இரவலர்க்குத் தரவல்லவன். ஆற்றல் மிக்க அரசர்கள் இவ்வாறு வழங்கிவிடுவதுண்டு. இதனை,

'நீயே ஒன்னூர்
ஆரெயி லவர்கட் டாகவும் நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய்
பூண்கட னெந்தைநீ யிரவலர் புரவே'

(புறம். 203)

என்ற புறப்பாட்டான் அறியலாம்.

நலங்கிள்ளி, 'கொள்ளார் தேயம் குறித்த கொற்றம்' விளைப்பவனாதலின் தான் வெல்லாத பிறர் நாட்டையும் இரப்போர்க்கு வழங்குவான். அவ்வாறு கொடை பெற்றோர் அந்நாட்டு அவைக்குச் சென்று தாம் கொடையாகப் பெற்ற நாட்டினை நலங்கிள்ளி புகழ்பாடிப் பிறர்க்குக் கொடையாக்குவதைக் கண்ட அந்நாட்டின் வேந்தர்கள் குணில் பாய்வதால் துடிக்கண் நடுங்குமாறுபோல நடுங்குவர். அத்தகைய கொடை தந்து விடுக்குமாறு வேண்டுகின்றார்.

சோழன் நலங்கிள்ளி சேரபாண்டியனை வென்றதோடு நில்லாமல் வடபுல வேந்தரையும் பணிக்கச்செய்து பெரும் பொருள்திரட்டியவன். அதோடமையாது, கடற்படையையும் அமைத்து ஆண்டும் தன் அடல்காட்டி அவர் பொருளையும் கவர்ந்து குவித்த பொருளையுடைய காவிரிநாட்டிற்குரிய பெருவீரன் என்பதனை,

"கடற்படை அடற்கொண்டி
மண்டுற்ற மறன்நோன்றாள்
தண்சோழ நாட்டுப்பொருநன்"

என்கின்றார்.

அவனுக்கு அமைந்த புரவி அவன் நினைந்தது செய்ய வல்லது. அது பிடரிமயிரின் பெருமையால் தோற்றப் பொலிவுடையது. நெய்யில் 'குய்' என்னும் ஓசை உண்டாகுமாறு பொரித்த ஊனோடு பலவாறு அமைக்கப் பெற்ற இன்சுவை மலிந்த சோற்றினை நலங்கிள்ளி நல்குவான் என்று பொருநர்கள் சொல்வார்கள் என்பதனை,

" அலங்குளை அணிஇவுளி
நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல்வேண்டேம்
அவற்பாடுதும் அவன்தாள் வாழியவென
நெய்குய்ய ஊனவின்ற
பல்சோற்றான் இன்சுவைய
நல்குவனின் பசித்துன்புற
என்பநின் பொருநர் "

என்கின்றார்.

"யாங்கள் நின்னால் பரிசில் பெறுது விடப்பட்டவர்கள். நீ முன்னர் உண்கலம் நிறையாகப் பரிசிலர்க்குப் பூவா வஞ்சியைத் தந்தாய். அடுத்து அருகிருந்த விறலியர்க்குப் பூவிலைக்காக மாடமதுரையைத் தந்துவிட்டாய். அப்பொழுது நீ வென்ற இருபெரு வேந்தர் நாடுகளையும் இருதிறத்தார்குத் தந்தது கண்டு யாங்கள் பெறுதற்குரியதொரு நாடு இல்லையே என்று நின்பால் பரிசில் பெறுது சென்றுவிட்டோம். அதன்பின்னர் நல்லராகதுவிப் பொறிபுலன்கள் அனைத்தையும் ஓயச்செய்வதுபோன்ற வறுமைத்துன்பத்தில் உழந்தோம். அத்தகைய கொடிய வறுமையை இப்பொழுது நீக்கவேண்டும். அதற்கு நீ இத்தகைய பரிசிலைத் தர வேண்டும்" என்று நலங்கிள்ளியிடம் மூதறிவாளரும் பொருநனும் இரந்ததை,

" ......பெரும அதற்கொண்டு
முன்னாள் விட்ட மூதறி சிறுஅரும்
யானும், ஏழ்மணியங் கேழணியுத்திக்
கட்கேள்விக் கவை நாவின்
நிறனுற்ற அராஅப் போலும்
வறனொரீஇ வழங்கு வாய்ப்ப
விடுமதி "

என்று குறிப்பிடுகின்றார்.

" நினதாக இருக்கும் கடல்சூழ் மண்டிலம் அனைத்தையும் எல்லோருமறிய எனக்கு நீ வழங்கு. வேத்தவையில், காழ்த்து முதிர்ந்த பரிய நெட்டியினை அரிந்தாலொப்ப வெள்ளிய தோல் போர்த்த என்னுடைய மாக்கிணையின்கண் யாத்து வைக்கப்பெற்ற சிறுகுணிலால் நின் புகழ் பாடிக் கிணைகொட்டுவேன். அடிக்குந்தொறும் அப்பறை அதிர்ந் தாங்கு அப்பகை வேந்தர்கள் நடுங்குவர்" என்று பொருநன் கூறுவதை,

" ......கடுமான் தோன்றல்
நினதே, முந்நீ ருடுத்தவிவ் வியனுல கறிய
எனதே, கிடைக்காழ் அன்ன தெண்கண் மாக்கிணை
கண்ணகத் தியாத்த நுண்ணரிச் சிறுகோல்
எறிதொறும் நுடங்கி யாங்குநின் பகைஞர்
கேட்டொறும் நடுங்க ஏத்துவென்
வென்ற தேர்பிறர் வேத்தவை யானே "

என்பதால் காணலாம்.

கோவூர்கிழார் இங்கு, " நல்குவனின் பசித்துன்பற" "என்ப நின் பொருநர்" என்கின்றார். இதனால் இப்பொழுது பரிசில் பெற வந்த இவன் இதுகாறும் நலங்கிள்ளியின் கொடையினைப் பெற்றவனாக இவன் இருந்தால் 'நல்குவ னின் பசித்துன்பற' என்றும், 'என்பநின் பொருநர்' என்றும் கூறியிருக்கமாட்டார். அன்றியும் நலங்கிள்ளி பிறன்கடை மறப்ப நல்கும் இயல்புடையவன். ஒரு தரம் அவனிடம் கொடை பெற்று அவன் பொருநனாகிய ஒருவன் பிறர்ப் பாடிப் பெறல்வேண்டா அளவுக்குச் செல்வனாகிவிடுவான். இவன் நலங்கிள்ளியின் கொடை பெறாததால் அவனுடைய பொருநனாகவில்லை அதனால் நலங்கிள்ளியின் பொருநர்கள் அவனைத் தம்மவராகக் கொண்டு பேசாது, வேற்றவனாகவே மதித்து, 'நல்குவன் நின் பசித்துன்பற' என்று பேச, அவனும் நலங்கிள்ளியின் பொருநர்களைக் குறிக்கும்போது 'என்ப நின் பொருநர்' என்று விளக்கிப் பேசுகின்றான். நலங்கிள்ளியின் வளம் பெற்றவர்கள் பிறர்ப் பாடிப் பெறல் வேண்டேம் என்ற செருக்கோடிருப்ப, நலங்கிள்ளியின்

கொடை பெருததால் அப்பொருநனும், அவனெடு வந்த மூதறிசிருரும், அராப்போல் வறுமையுற்றிருக்கின்றனர். இதனுல், 'முன்னுள் விட்ட மூதறிசிரு அரும்' என்பதற்கு, "முன்னுள் பரிசில் தந்துவிட்ட தொன்முறையறிந்த சிறுவரும்' என்ற உரை கொள்ள வாய்ப்பில்லே. அதனுல் கொடை கேட்கும் இப்பொருநன் முன்னே அவனுல் கொடை பெருது விடப்பட்டவனேயன்றி, கொடை தந்துவிடப் பட்டவன் அல்லன்.

இங்குக் குறிக்கப்பெற்ற பாம்பு மணியினேயும், நிறத்தினேயும், புள்ளியினேயும், கண்ணேச் செவியாகக் கொண்டு கேட்கும் பெற்றியினேயும், பிளந்த நாவினேயு முடைய பாம்பாகும். இப்பாம்பினேப் போன்ற வறுமை என்றது பாம்பின் விடத்தினே ஒத்த வறுமை என்பதாகும். நல்லரா கதுவினுல் கடிக்கப் பெற்றவனின் பொறி புலன்கள் துன்புற்று ஒய்ந்துபோகத் தொழிற்படா இயல்பினன் ஆவான். அதுபோல வறுமை வருமேயானுல் அதுவும் பொறிபுலன்களோடு மனத்தினேயும் கையறவு கொள்ளச் செய்து இயக்கமின்றிச் செய்துவிடும். இதனே,

> "மானம் குலம்கல்வி வண்மை அறிவுடைமை
> தானம் தவமுயற்சி தாளாண்மை —தேனின்
> கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
> பசிவந்தி டப்பறந்து போம்"

என்பதால் அறியலாம். அத்தகைய கொடிய வறுமையில் உழந்துவிட்டோமென்று நலங்கிள்ளியின் வளந்துய்க்காப் பொருநன் சொல்கின்ருன்,

இதற்கு, "பாம்பிற்கு அதன் (சட்டை) தோல்போல எமக்கு வறுமை அமைந்துள்ளது என்பதைக் குறிக்க 'அராப்போலும் வறன்' என்று குறிப்பிட்டார் என்று கூற முடியாது. அரவிற்குத் தோல் உரித்தல் என்பது அடிக்கடி நிகழும் செயல். அப்படியானுல் பிறன்கடை மறப்ப நல்கும் நலங்கிள்ளியிடம் பொருள் பெற்ற பின்னும் பாம்பின் சட்டைபோல் அடிக்கடி வறன் நிகழவும் நீக்கவும் நேரும்.

குறிப்புரைகாரர், 'வறுமைக்கு அரவின் விடம் உவமை' என்றது கொண்டு பார்க்கும்போதும் மேற்குறித்தவாறு பாம்பு கடித்தாலொத்த வறுமை என்ற உவமையே பொருத்த மாகும். இதனை,

"நல்லரா கதுவி யாங்கென்
அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே" (குறுந். 43)

என்பதுகொண்டும் தெளியலாம்.

வறுமை போக்கலைமட்டும் இவன் நலங்கிள்ளிபால் வேண்டவில்லை. இவனும் ஒரு கொடையாளனாக வேண்டு மென்று வேண்டுகின்றான். நலங்கிள்ளி எங்ஙனம் தனக்கென ஒன்றினைக் கொள்ளாது வென்ற பிறர் நாடுகளை வேண்டுவோர்க்கு ஆண்டாண்டு நாடு நாடாகக் கொடுத் தானோ, அதுபோல் இவனும் பிறர்க்கு அத்தகைய பெரும் கொடையினை வழங்கவேண்டுமென நினைக்கின்றான். அப்படி வழங்க 'அவன் கொண்ட குடுமித்து இத்தண்பணை நாடு' ஆதலின் அது சாலும். நீ படையெடுத்துச் சென்று வென்றானன்றி வெல்லப்படாதோரும் பலரிருக்கின்றனர். அவர்களிடம் நீ என்று எப்பொழுது படையெடுத்துச் சென்று ஒறுப்பாயோ என்று துஞ்சாக் கண்ணராகிக் கிடக் கின்றனர். அவர்களும் பிறரை வென்ற தேர்ப்படையினரே.

அவர் அவையின்கண் யான்சென்று என் கிணையினைக் கொட்டி நின் புகழைப் பாடி அவர் நாட்டினைப் பிறர்க்குக் கொடையாக்குவேன். அப்பொழுது நின் புகழை யான் பாடுதலையும், அவர் நாட்டினை யான் கொடையாக்கலையும் கண்ட அவர்கள், "கொள்ளார் தேயம் குறித்த நின் கொற்றம்" குறித்து நடுங்குவார்கள். அவர்களுடைய நடுக்கம் யான் என் கிணையின்கண் யாத்த கோலால் எறிய அக்கடிப்பு இருந்தொறும் பறைக்கண் நுடங்குவதை ஒக்கும் அவர்கள் நெஞ்சு நடுங்கி அவலம் பாய்ந்துத் துன்புறுவார் கள். இப்படி நின்னைப் பகைவனாகக் கருதியோர் அலமறும் வண்ணம் நீ அவர் நாட்டை எனக்குக் கொடையாகத் தா" என்று கேட்கின்றான் என்று நலங்கிள்ளியின் பெருமையினைப் பாடுகின்றார் கோவூர்கிழார்.

## 13. வெய்துண்ட வியர்ப்பு

" நெடுநீர நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவும்
சூடுகிழித்து வாடூன் மிசையவும்
ஊன்கொண்ட வெண்மண்டை
ஆன்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
ஈத்தோன் எந்தை இசைதன தாக
வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர் பூத்த தும்பின
புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும்பின்று]
கடலே, கால்தந்த கலனெண்ணுவோர்
கானற் புன்னைச் சினை நிலைக் குந்து
கழியே, சிறுவெள் ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கனன்னுட் டுமனெலிக்குந்து
அன்னநன் னுட்டுப் பொருநம் யாமே
பொராஅப் பொருநரேம்
குணதிசை நின்று குடமுதற் செலினும்
குடதிசை நின்று குணமுதற் செலினும்
வடதிசை நின்று தென்வயிற் செலினும்
தென்திசை நின்று குறுகாது நீடினும்
யாண்டும் நிற்க வெள்ளியாம்
வேண்டிய துணர்ந்தோன் தாள்வா ழியவே."

(புறம். 386)

*திணை: பாடாண் திணை.* *துறை: வாழ்த்தியல்.*

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியது.

பொழிப்புரை :

மழைபெய்தற்குக் காரணமாய வெள்ளி கீழ்ப்பால் நின்று மேற்பாற் செலினும், மேற்பால்நின்று கீழ்ப்பால் செலினும், வடதிசைநின்று தெற்கே செலினும், தென்திசை நின்று எங்குப் புகுந்துநின்றாலும் நிற்கட்டும்; கவலையில்லை.

நெல்வயலின் வேலியாக நிற்கும் கரும்புப் பாத்திக்கு நடுவண் ஆம்பலும் நெய்தலும் பூத்துப் பொலிகின்றன. கிள்ளிவளவனுக்குரிய காட்டுப் பகுதியோ புல்லினையும், செடிகொடிகளையுமுடையதாய், பகைவர் ஆநிரைகள் அவற்றை உண்ண, வில்லேந்திய வெட்சிவீரர்களால் காக்கப்பெறுகின்றன. கடற்பக்கமோ, காற்றின் வேகத்தால் திசைதப்பி வந்த கலன்களை எண்ணுவோர், கடற்கரையிலுள்ள புன்னைமரக் கிளைகளைப் பிடித்துத் தொங்கித் தொங்கி நிற்பதால் அம்மரக்கிளைகள் அலைப்புண்டு கிடக்கின்றன. உப்பங்கழிகள், மலைநாட்டு வணிகர் ஆண்டுப்போந்து ஏலமிட்டு விலைப்படுத்துவதால் ஆரவாரம் நிறைந்துள்ளன. அத்தகைய அவன் நாட்டில் வாழும் போர்செய்யாத பொருநர் என்று பெயர்கொண்ட கூத்தர் யாங்கள்.

அவன் எங்கட்கு மிக்க நீர்நிலையில் வீழும் மழைத்துளி போல, நெய் துள்ளும்படிப் பொரித்த கறிகளை உண்ணவும், கோல்கொண்டு கிழித்துச் சுட்ட இறைச்சியைத் தின்னவும், ஊன்வைத்திருக்கும் கலம் நிறைய அட்ட பசும்பாலை நிரம்ப ஊற்றி வழியவும் ஈந்து, இவைகளை வெம்மையோடு உண்டதால் வரும் மெய்வியர்ப்பன்றி, தொழில் செய்து மெய் வருந்தி வியர்வை அறியாதபடிச் செய்து புகழைத் தனக்கே உரித்தாக்கினான் எங்கள் தலைவன். வேண்டியதை வேண்டிய இடத்துக் குறிப்பறிந்து கொடுக்கவல்ல அவன் தாள் வாழ்க!

திணை, துறை விளக்கம் :

"அடுத்தூர்ந் தேத்திய இயல்மொழி வாழ்த்தும்"

(தொல். புறத். 29)

என்பது தொல்காப்பியம். இதனை இயன்மொழி என்றும், வாழ்த்து என்றும், இயன்மொழி வாழ்த்து என்றும் மூன்ருகப் பிரிப்பர் இளம்பூரணர். வாழ்த்தியல் என்ற துறை இயன்மொழி வாழ்த்திலடங்கும்.

இதனை நச்சினுர்க்கினியர்; 'இதற்குத் தலைவன் எதிர் சென்று ஏறி அவன் செய்தியையும், அவன் குலத்தோர் செய்தியையும் அவன்மேல் ஏற்றிப் புகழ்ந்த இயன்மொழி வாழ்த்தும்' என்று கூறுகின்ருர்.

இந்த இயன்மொழி வாழ்த்து, புறப்பொருள்வெண்பா மாலையில்,

'இன்னோர் இன்னவை கொடுத்தார் நீயும்
அன்னோர் போல அவைஎமக் கீகென
என்னோரு மறிய எடுத்துரைத் தன்று'

(புறப். 194)

என்று காட்டப்பெற்றுள்ளது. இது தொல்காப்பியர் கருத்துப்படி இயன்மொழி வாழ்த்தாகாது. ஆனுல், புறநானூற்றில் துறையின் பெயர் வாழ்த்தியல் என்றே குறிக்கப்பெற்றுள்ளது. அதனுல் அதன்கண் எல்லா வாழ்த்தும் அடங்கும். அப்பெயரில் ஒரு துறை இரண்டு நூலிலும் இல்லை.

**விளக்கவுரை :**

இப்பாட்டில் கோவூர்கிழார் கிள்ளிவளவனின் கொடைப் பெருமையனைத்தும் பொய்யாக் காவிரியின் பெருமையாலேயே என்று குறிப்பிட வந்தவர் தம்மைக் கூத்தராக்கிக் கொண்டு பாடுகின்ருர்.

ஒருஞான்று பல தேயத்துக் கூத்தர்கள் ஓரிடத்துக் கூடினர். அப்பொழுது வடதிசையிலிருந்து விளங்கும் வெள்ளி தெற்கேகிய புதுமைபற்றியும், அதனுல் நாடெங்கணும் நிலவியிருக்கும் வறுமைபற்றியும், தமக்கு அதன்வழி வரும் ஏதம்குறித்தும் பலவாறு பலரும் பேசினர்.

அப்பொழுது குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனுல் போற்றப்பட்ட கூத்தன் ஒருவனும் அங்கிருந்தான். அவன் அதுபோது வெள்ளி வேறுபுலம் படர்ந்ததால் விளையும் வறுமையைப்பற்றியோ அதனுல் வரும் கேட்டினைப்பற்றியோ ஒன்றும் அறியாதவன். ஆண்டிருந்த மற்றைய நாட்டினர் வெள்ளி திசைதிரிந்தது குறித்துக் கவன்றபோது இவன் தனக்குத் தன் அரசுவழிக் கிடைக்கும் செல்வக் களிப்பினைக் கூறுகின்ருன். அக்கூத்தனின் அரசன் கிள்ளிவளவன் வெள்ளி திசைதிரிந்த அல்லற்காலையும் பெருஞ்செல்வம் பெற்றிருக்கின்ருன். பிறர்கூறும் வறுமையறியாது வாழ்தற்கு அவன் நாட்டு நானிலமும் வளம் பெற்றுக் கிடக்கின்றன. அந்தந்த நிலத்துத் தொழிலும் பண்டமாற்றும் இடையீடு படாது நடக்கின்றன. கிள்ளிவளவன் அவ்வளம் பெற்றதாலும் கலைப்பண்பு உடைமையாலும், அருள் உணர்வமையப் பெற்றதாலும் தனக்கு அவனளித்த உணவு வகைகளை முறைப்படுத்திக் கூறிக் காட்டுகின்ருன். "அப்படி அவன் கொடுப்பதுமட்டுமன்றி எங்கள் குறிப்பும் பண்புமறிந்து ஆற்றுவன ஆற்றுகின்ருனுதலின் நீங்கள் கூறும் வெள்ளி எத்திசையில் நிற்பினும் எங்கட்குக் கவலையில்லை. அவன் வாழட்டும்!" என்று வாழ்த்துகின்ருன்.

இங்கு வேற்றுநாட்டுப் பொருநர்களிடம் இப் பொருநன் தன் நாட்டு வளங்கூறி அதனைப் பேணுவோன் இயல் புரைத்துத் தமக்கிருக்கும் இன்பத்தினைக் கூறுமுகத்தான் உலகமெல்லாம் வறுமையில் வாடினும் சோழநாட்டார்க்கு வாட்டமில்லை என்று கூறுகின்ருன். அரசன் செங்கோல் இயல்பில் திரியுமேல், இயல்பில் இயங்கும் வெள்ளியும் தன் இயல்பில் மாறுபட்டுத் திசைதிரியும். கோள்நிலை திரிந்து வேறுபட்டால் பருவமழை பெய்யாது பிழைக்கும். மழையின்றேல் மன்னுயிரில்லை. இதனை,

"கோன்நிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடில் மாரி வறங்கூரும்
மாரி வறங்கூரின் மன்னுயிர் இல்லை"

என்பதால் அறியலாம். இவ்வாறு மாரிகெட்டு வற்கடம்

வந்து இயற்கைக்கு மாறுபட்ட செயல்கள் நிகழின் உலகத்தவர் அரசனைப் பழித்துக் குறையேற்றிப் பேசுவார்கள் என்பதும்,

" மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை யல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகன் ஞாலம். "

(புறம். 35)

என்பதால் விளங்கும்.

இப்படியெல்லாம் அரசு பழியுண்ணுமாறு இயற்கையல்லதாகி, மழைபெய்தற்குக் காரணமாய வெள்ளி, மழை பிழைத்தற்கு அறிகுறியாகக் கீழ்ப்பால் நின்றது மேற்பாலும், மேற்பால் நின்றது கீழ்ப்பாலும், வடதிசை நின்றது தென்திசையிலும், தென்திசை நின்றது எங்குச் சென்றாலும் எங்கட்குக் கவலையில்லை. இப்படியெல்லாம் அரசுக்குப் பழி சூழ்விக்கும் அனைத்தையும் முன்னின்று தகைத்துச் சோழ குடியைக் காக்கின்றாள் காவிரி. அவள்,

" வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்
தற்பாடிய தளியுணவிற்
புள்தேம்பப் புயன்மாறி
வான்பொய்ப்பினும் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி" (பட்டினப்பாலை)

ஆதலால், அவள் பொய்யாக் குலக்கொடியாயிருந்து உலகூட்டுவாள். மழை பெய்தால்தான் காவிரிக்கு நீருண்டு என்பதில்லை. அவள் உலகோம்பும் பெருந்தாய். அவள்,

" புனிறுதீர் குழவிக்கு இலிற்றிமுலை போலச்
சுரந்த காவிரி மரங்கொல் மலிநீர்
மன்பதை புரக்கும். "

(புறம். 68)

இயல்புடையவள். ஆதலால், ஊற்றுநீர் கொண்டு உலகூட்டும் காவிரி வாழும் அந்நாட்டிற்குரியவன் சோழன் அதன் வளத்தால் வறுமையறியாதது அவன் நாடு. ஆதலால்

வெள்ளி திசைதிரிந்து வற்கடம் வருவது குறித்துபொருநன் வருத்தப்படவில்லை.

காவிரி வளமூட்டியதால் சோழநாடு நானில வளமும் உடையது. காவிரி நாட்டின் வயலோ வேலிஆயிரம் விளைந்து நாடா வளத்ததாகும். நெல்வயலின் நாற்புறமும் வேலிபோல் கரும்பு கலித்துநிற்கின்றது. வயலின் நாப்பண் நெல்லோடு கொட்டியும், ஆம்பலும், நெய்தலும் பூத்துப் பொலிகின்றன. இம்மூன்றும் நெல்வயலின் இடையறு நீர்ப்பெருக்கால் இனிது வளர்ந்து நீர்வளத்தைக் காட்டுகின்றன என்பதை,

"வயலே நெல்லின்வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர் பூத்த தும்பின"

என்கின்றார்.

அவனுக்குரிய காட்டுப்பகுதியோ மழை இடையறாது பெய்தலால் அடர்ந்து செழித்துத் தழைத்த புல்லையும், செடி கொடிகளையும் உடையதாக உள்ளது. பகைப்புலத்தில் இருந்து கவர்ந்துவந்த பசுக்கூட்டங்கள் அவற்றை உண்ண, அவை கோலேந்திய கோவலரால் காத்தற்கு வேறாக விற்கை கொண்ட *குறும்பர் என்னும் வெட்சி வீரர்களால் காக்கப்பெறுகின்றன. வெட்சிவீரர்கள் தாம் கவர்ந்த நிரைகளை, வஞ்சி வீரர்கள் போந்து அகப்படுத்திக்கொள்ளாவகை சுரத்துய்த்து வில்லேந்திக் காத்து நிற்கின்றனர். இதனை,

"புறவே, புல்லருந்து பல்லாயத்தான்
வில்லிருந்த வெங்குறும் பின்று"

என்று கூறுகின்றார்.

---

* "வேலே குறும்படைந்த அரண்கடந்தவர்" (புறம். 97) என்பதற்குப் பழைய உரையாசிரியர் 'அவன் வேல்கள்தாம், குறும்பர் சேர்ந்த அரண்களை வென்று' என்று உரைகூறுவதால் குறும்பின்று என்பதற்குக் குறும்பர்களை உடையது என்று உரை கூறுதல் ஏற்புடைத்து. அரண் என்றல் வேண்டாம். அவன் காடு பசுக்கூட்டங்களையும் குறும்பர்களையும் உடையது என்று உரை கூறலாம்.

அவன் கடற்பக்கமோ காற்றின் விசையால் திசைதப்பிக் கரை வந்து சேரும் கலன்களை எண்ணுவோர் பெருகிக் கிடக்கின்றது. அவர்கள் அக்கடற்கரையிலுள்ள மரக்கிளை களைப் பிடித்துக்கொண்டு தொங்கித் தொங்கி நிற்பதால் அப்புன்னைக் கிளைகள் அலைப்புண்டு கிடக்கின்றன. இதனை,

"கடலே, கால்தந்த கலனெண்ணுவோர்
கானற் புன்னைச் சினை நிலைக்குந்து"

என்கின்றார்.

அவன் உப்பங்கழியோ பெரிதும் உப்பு விளைவது. அவ்வுப்பினைப் பெற மலைநாட்டு உப்புவணிகக் கூட்டம் ஆண்டுப் போந்து மிகுந்து ஏலமிட்டு விலைப்படுத்துவதால் கடற்கரை ஆரவாரம் நிறைந்துகிடக்கின்றது. அத்தகைய அவன் நாட்டில் வாழும், போர் செய்யாத பொருநர் என்ற பெயர்கொண்ட கூத்தர்கள் யாங்கள். இதுகாறும் புனைந்துரைக்கப்பட்ட அவன் நானிலம் வழங்கத் தவாத வளமும், முழக்குத் தவாத வணிகமும் உடையனவாக உள்ளன என்பதை,

"கழியே, சிறுவெள்ளுப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கனன்னாட்டு மணொலிக்குந்து
அன்னநன் னாட்டுப் பொருநம் யாமே
பொரா அப் பொருநரேம்"

என்கின்றார்.

அவன் நாடு தரும் வளத்தால் அவன் எங்கட்குப் பொரித்த கறிவருவலைத் தருகின்றான். அது நெய்யிலிட்டுப் பொரிக்கும்போது நீர் நிலையில் வீழும் மழைத் துளிகளைப் போலக் கொப்புளங்கொண்டு 'சோ' என்று ஒலித்துப் பொரிகின்றது. அடுத்து கோல்கொண்டு கிழித்துச் சுட்ட சூட்டிறைச்சியையும் வாட்டிப் பக்குவம் செய்த வாட்டிறைச்சி யையும் அவ்வெப்பு ஆறுமுன் தின்னத் தருகின்றான். அடுத்து, ஊன் வைத்திருக்கும் கலம் நிறைய அட்ட பசும்பாலை ஊற்றி ஊற்றி நிரப்பி வழிந்தோடச் செய்கின் றான். இவ்வளவும் வெம்மையோடு உண்டதால் அதன் வழிப்பட்ட மெய்வியர்ப்பன்றி அவற்றைப் பெற எடுத்துக் கொண்ட முயற்சியால்கூட வந்த வியர்ப்பை யாமறிந்

திலோம். அவ்வாறு எமக்கு உணவூட்டி ஈத்துவக்கும் இன்பத்தோடு புகழையும் தான் பெறுகின்றான் என்பதை,

"நெடுநீர நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவும்
சூடுகிழித்து வாடூன் மிசையவும்
ஊன்கொண்ட வெண்மண்டை
ஆன்பயத்தான் முற்றழிப்பவும்
வெய்துண்ட வியர்ப்பல்லது
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
ஈத்தோன் எந்தை இசைதனதாக"

என்கின்றார்.

இங்ஙனமெல்லாம் அங்கு நாடுதரும் வளத்தால் எமக்கு வேண்டியதை வேண்டியவிடத்துக் குறிப்பறிந்து கொடுக்க வல்லவன் அவன். அதனால்,

"யாம், வேண்டிய துணர்ந்தோன் தாள்வாழியவே"

என்கின்றார். "அவன் முயற்சி வாழ்ந்தால் போதும். கோள்நிலை கெடினும் கெடுக. எங்கட்குப் பசிப்பிணி வருத்துமாறில்லை" என்கின்றார். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் வெள்ளி வேறுபுலம் புக்கஞான்றும் இங்ஙனம் பெருவிருந்தருத்தும் இயல்புடையன் என்பதை எருக்காட்டூர் தாயங்கண்ணனார் என்ற புலவர்,

"நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்
பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரியன்ன வண்மையிற் சொரிந்து
வேனி லன்னவென் வெப்பு நீங்க
அருங்கல நல்கி யோனே........
எறிதிரைப் பெருங்கட னிறுதிக்கட் செலினும்
தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்
என்னென் றஞ்சலம் யாமே வென்வேல்" (புறம். 397)

என்று தாம் எதற்கும் கையாறுகொள்ளாது வாழ்வதாக அவன் பெருமை கூறுவது கொண்டு தெளியலாம்.

## 14. புகர்முக முகவை

"உருமிசை முழக்கென முரச மிசைப்பச்
செருநவில் வேழங் கொண்மூ வாகத்
தேர்மா வழிதுளி தலைஇ நாமுறக்
கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை
இழிதரு குருதியொ டேந்திய வொள்வாட்
பிழிவது போலப் பிட்டையூ றுவப்ப
மைந்த ராடிய மயங்குபெருந் தானைக்
கொங்குபுறம் பெற்ற கொற்ற வேந்தே
......................தண்டா மாப்பொறி
மடக்கண் மயிலியன் று மறலி யாங்கு
நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்றோண் மகளிர் மன்றம் பேணார்
புண்ணுவந்து....................
.........உளையணிப் புரவி வாழ்கெனச்
சொன்னிழ லின்மையி னின்னிழற் சேர
நுண்பூண் மார்பிற் புன்றலைச் சிறுஅர்
அம்பழி பொழுதிற் றமர்முகங் காணா
.........வாளிற் றுக்கான்
வேந்துபுறங் கொடுத்த வீய்ந்துகு பறந்தலை
மாட மயங்கெரி மண்டிக் கோடிறு
புருமெறி மலையி னிருநிலஞ் சேரச்
சென்றோன் மன்ற கொலைவற் சென்றெறி
வெம்புண்ணறிநர் கண்டுகண் ணலைப்ப
வஞ்சி முற்றம் வயக்கள னாக
அஞ்சா மறவ ராட்போர் பழித்துக்
கொண்டனை பெரும குடபுலத் ததரி
பொலிக வத்தைநின் பணைதயங்கு வியன்களம்
விளங்குதிணை வேந்தர் களந்தொறுஞ் சென்று
புகர்முக முகவை பொலிகென் றேத்திக்
கொண்டன ரென்ப பெரியோர் யானும்
அங்கண் மாக்கிணை யதிர வொற்ற

முற்றிலெ ளுயினுங் காதலி னேத்தி
நின்னோ ரன்னோர் பிறரிவ ணின்மையின்
மன்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும
பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு
கணநரி திரிதரு மாங்க ணிணனருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
அஞ்சுவரு கிடக்கைய களங்கிழ வோயே."

(புறம். 373)

திணை : வாகை: துறை: மறக்களவழி;
ஏர்க்கள உருவகமுமாம்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் கருவூரெறிந்தானைக் கோவூர்கிழார் பாடியது.

பொழிப்புரை :

மேகக் கூட்டத்தினைப்போலப் போர்ப்பயிற்சி மிக்க யானைகள் கூடவும், அதிற்பிறக்கும் இடியோசையினைப்போல முரசம் முழங்கவும், மேகங்களை அலைக்கும் காற்றினைப் போல அம்புகள் சென்று படைகளைச் சிதைக்கவும், அதனுல் பிறக்கும் மழைத்துளிகளைப்போலத் தேர்களும் குதிரைகளும் பெருகித்தோன்றவும், அவற்ருல் தோன்றிப் பெருகியோடும் நீரினைப்போல, வீரர்கள் வெட்டிக்கொண்டு மகிழும் வாட்பிளப்பாலாய புண்வழியாலும், வாள்வழியாலும் பிழிந்துகுவதுபோலக் குருதிவெள்ளம் பெருகியோடவும் போராடும் வீரர்கள்மிக்க சேனைகளால் கலக்கப்பெற்றுக் கொங்குநாட்டினையழித்து வெற்றிகண்ட அகன்ற அச்சந்தரத்தக்க பாசறையின்கண் பொலியும் வேந்தே!, இறகில் கண்போன்ற பெரிய பொறிகளைப் பெற்ற மயிலைப்போன்ற சாயலுடைய மகளிர் தம்முடைய இல்லங்கள் தனிமை பெற அவற்றை நீங்கி மன்றத்திற்குச் செல்லாது போர்க்களம் புகுந்து தங்கணவர் மார்பிடை ஏற்ற விழுப்புண்ணைக்கண்டு மகிழவந்து அவரைக் கண்டுகொள்ள மாட்டாது புகலிடம் வேறின்மையால் நின் தாள்நிழல் சேர்கின்றனர். அவர்கள்

ஈன்ற, நுண்ணரிய பூணியினையும் புல்லிய தலையினையும் உடைய சிறுவர்கள் தம் தந்தையரைக் காணவேண்டிப் போர்க்களம் புகுந்து பார்க்கின்றனர். ஆண்டு, அவர்தம் தந்தையர் அம்புகளால் தாக்கபெற்று முகஞ்சிதையுண்டு கிடப்பதால் அவர்களுள் இன்னார் தமர் என்று காண மாட்டாது கலங்குகின்றனர். நீ நின் வாள்கொண்டு எதிர்த்துப் பொராமலே படைகொண்டு வென்றதால் பகை வேந்தர்கள் புறங்கொடுத்து வீழ்ந்து கிடக்கின்றனர். வெற்றிகண்ட நீ மேலும் சினந்தணியாது அவர் மாடங்களை எரிகொளச் செய்கின்றாய். அம்மாடங்கள் வெந்து இடியேறுண்ட மலைக்குவடுகள் பிளந்திறுவதுபோல் சிதைந்து வீழ்ந்து நிலமட்டமாகிக் கிடக்கின்றன. இவ்வாறெல்லாம் பகைத்துச் செல்லும் நின் நிலையினைக் காணும்போது நீ உண்மையிற் கொலைஞனேயாவாய். நீ பகைமேற்சென்று பொருங்கால் உண்டாகிய புண்ணைக் காண்போர் தங்கள் கண்களில் அறைந்துகொண்டு நொந்து கலங்குகின்றனர். இங்ஙனமெல்லாம் அச்சம் விளைக்கும் வீரர்களைக் கொன்று கடாவிட்டு அதரிதெழித்து நெற்கொள்ளும் ஏர்க்களம்போல் வெற்றிக்களமாக்கி வஞ்சிமுற்றத்தைக் கைக்கொண்டாய். அத்தகைய வெற்றி முரசு முழங்கும் நின் போர்க்களம் விளங்குவதாக! விளக்கமிக்க உயர்ந்த வேந்தர்களுடைய போர்க்களந்தோறும் பரிசிலர்களாகிய பெரியோர்கள் சென்று, 'நின் களம் பொலிக!' என்று வாழ்த்திப் பாராட்டிப் பரவி ஆண்டு நீ வழங்கிய புள்ளிகளோடு கூடிய யானைத் திரள்களைப் பரிசிலாகப் பெற்றுச் சென்றனர் என்று சொல்லுவார்கள். யான் அவரையொப்ப என் அழகிய தடாரிப்பறை அதிரக்கொட்டி நின் புகழ் முற்றிலும் பாட முடியாதவனாயினும், நின்னை ஒப்பவர் இவ்வுலகில் பிறர் இன்மை கண்டு நின்பாற் கொண்ட அன்பின் பெருக்கால் நின்னைப் புகழ்ந்து பாடி, இப்பொழுது நீ பிறர்மதில் முருக்கிக் கொண்ட பொருள் முகந்துபோக வந்தேன். பகைவரும் பாராட்டும் வீரமும் நகைவேழம்பர்கட்குத் தடைபடாது ஈயும் பண்பும் உடையாய் நீ. காண்போர்க்கு அச்சம் விளைக்குமாறு பேய்க்கணங்களும், நரித்திரளும்

பிணனுண்டு திரிதரும் அவ்விடத்தே ஊன் நசை வேட்கையவாய சிவந்த தலையையுடைய கழுகுகள் குழுமிக் கிடக்கின்ற போர்க்களத்திற்கு உரியோனே நீ வாழ்வாயாக!

திணை, துறை விளக்கம் :

இப்பாட்டிற்கு மறக்களவழி, ஏர்க்கள உருவகம் என்ற இரண்டு துறைகள் குறிக்கப் பெற்றுள்ளன.

தொல்காப்பியத்தில் வாகைத் திணையுள்,

"ஏரோர் களவழி அன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும்..."

(தொல். புறத். 21)

என்ற துறைக்கு இளம்பூரணர், 'ஏரோர் களவழி கூறுதலும் அன்றிப் போரோர் களவழி தேரோர் தோற்றுவித்த வென்றியும். அது களம்பாடுதலும் களவேள்வி பாடுதலுமாம் (களவழி–களத்தில் நிகழும் செயல்கள்)' என்று உரை விளக்கம் கூறியுள்ளார். இத்துறைக்கே விளக்கம் கூறவந்த நச்சினர்க்கினியர், 'களவழிச்செய்கைகளை மாருது தேரேறி வந்த புலவர் தோற்றுவித்த வென்றி' என்று எழுதியுள்ளார்.

புறப்பொருள்வெண்பாமாலையில் 'மறக்களவழி' என்ற துறை வாகைத் திணையில் உள்ளது. அதற்கு,

"முழவுறழ் திணிதோளானை
உழவனுக வுரைமலிந்தன்று" (புறப். 159)

என்று இலக்கணம் கூறப்பெற்றிருக்கின்றது. அஃதாவது உழவன் ஏரினைப் பூட்டி உழுவான். அரசன் களிற்றினைக் கொண்டு உழுவான். அதனல் அரசனுக்கும் உழவனுக்கும் செய்கின்ற தொழிலால் ஒப்புமைபடுத்திப் பேசுவது இத்துறையாகும்.

இப்பாட்டிற்குக் குறிப்பிட்டுள்ள 'ஏர்க்கள உருவகம்' என்ற துறை புறப்பொருள்வெண்பாமாலையில் இல்லை.

ஆனல், பொருளளவில் அத்துறை மறக்களவழி என்ற பெயரில் அமைந்து கிடக்கின்றது. புறநானூற்றுப் பாட்டு புறப்பொருள்வெண்பாமாலைப்படியும் தொல்காப்பியப் படியும் துறைகொள்ள இடந்தருகின்றது.

விளக்கவுரை :

இப்பாட்டில் கோவூர்கிழார் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் செய்த போர்களையும், ஆண்டு நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும் தொகுத்துரைக்கின்ருர். இவன் கொங்கரொடு பொருத போர்நிகழ்ச்சிகளையும், வஞ்சிநாட்டாரொடு பொருத போரையும் குறித்திருக்கின்ருர். இவ்வளவனைத் தாம் ஒரு பொருநஞக இருந்து பாடுகின்ருர். " இதற்குமுன் என் முன்னேர்கள் நின்னுல் வெல்லப்பெற்ற வேந்தர்கள் களந்தொறும் சென்று நின்னையும் நின் முன்னேரையும் வாழ்த்தி யானைப் பரிசில் கொண்டனர் என்ப. யான் அவரன்ன கிணை ஒற்றும் ஆற்றலற்றேனுயினும் நின்னிற் பெரியோரின்மையால் உன்னைப் பாடி நீ பகைப்புலத்தார்பால் பெற்ற செல்வத்தினைப் பெற வந்தேன் " என்று கூறுகின்ருன்.

இப்பாட்டு மறக்களவழி என்றும், ஏர்க்கள உருவகம் என்றுமிருப்பதால் பாடுகின்ற பாணன் வழிப்புலவர் அரசன் செய்த போரையும் அதன் விளைவையும் உழவர் செய்கைகளோடு சார்த்திப் பேசியுள்ளார்.

இப்பாட்டின் தொடக்கத்தில் சோழன் கொங்கு நாட்டை வென்று களங்கொண்ட செய்தியைப்பற்றிக் கூறுகின்ருர் போர்க்களத்திலே இருபெரு வேந்தர்தம் நால்வகைப் படைகளும் மயங்கிப் பொருதன. படையினை ஊக்கவும், பகையினை மருட்டவும், உயிர்ப்பலி முரசங்கள் முழங்குகின்றன. அம்முரசொலி மழைமேகம் இடித்து முழங்குவதுபோல் முழங்குகிறது. யானைப்படைகள் ஆண்டாண்டு திரண்டு வருகின்ற காட்சி கருமுகிற் குழாங்கள் ஒன்றுகூடுவனபோல் தோன்றுகின்றது. தேர்ப்படையும் குதிரைப்படையும்

எண்ணிறந்தனவாய்க் கூடிப் பெருகுகின்றன. அவை எண்ணித்தொலையா மழைத்துளிகளைப்போல் மிக்க அளவினவாயின. மழை பெய்வதற்குக் காற்று இன்றியமையாதது. அதுபோல் இங்கும் ஒரு காற்று பிறக்கின்றது. வீரர்களால் செலுத்தப்பெறும் கணைக்காற்று அது. பல கோணத்திலிருந்தும் அக்காற்று வீசப்பெறுவதால் படைகள் பெரிதும் அலைப்புண்ணுகின்றன. இப்படியெல்லாம் அம்பாற் சிதைவுண்பதால், மழை பெய்தபின் ஓடும் ஆற்றினைப்போல குருதியாறு ஓடத்தலைப்படுகின்றது.

அடுத்து, வாள்வீரர்கள் யானைகளை வெட்டுவதாலும், வீரர்களை வெட்டுவதாலும் அவர்கள் கையேந்திய வாளி னின்றும் ஓடும் குருதி, நனைத்துப்பிழியும் பொருளிடத்தி னின்றும் ஒழுகும் நீரினைப்போல ஒழுகுகின்றது. இப்படி யெல்லாம் வாள் பிளந்த புண்ணின் ஆழத்தையும், அகலத் தையும், ஒழுகும் குருதியையும் கண்டு வீரர்கள் உவக்கின்ற னர். சில வீரர்கள் அப்புண்ணையே மேலும் கிழித்து மகிழ் கின்றனர். இப்படியெல்லாம் பெரும் படைகொண்டு பாசறை அமைத்துப் பொருது, கொங்கு நாட்டைப் புறங்கொடுக்கச் செய்த கிள்ளிவளவன் விளைத்த வீரத்தையும் வெற்றியையும் சுட்டி விளித்துப்பேசுவதை,

"உருமிசை முழக்கென முரசம் இசைப்பச்
செருநவில் வேழம் கொண்மூ வாகத்
தேர்மா வழிதுளி தலைஇ நாம்உறக்
கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை
இழிதரு குருதியொடு ஏந்திய ஒள்வாள்
பிழிவது போலப் பிட்டைஊறு உவப்ப
மைந்தர் ஆடிய மயங்குபெருந் தானைக்
கொங்குபுறம் பெற்ற கொற்ற வேந்தே"

என்று கூறுவதால் அறியலாம்.

இப்படியெல்லாம் கொங்கு நாடு பொருது அழிந்தபின், அக்களத்து மடிந்த மைந்தர்களின் மனைவியர் நிலையினைக் கூறுகின்றார். கணவன்மார் போர்க்களம் புகுந்தால்

அவர்கள் வெற்றியோடு வருவார்கள் என்று நம்புவது மனைவியர் இயற்கை. அவ்வீரர்களின் மனைவியர் கடை கழிந்தறியாதவர்கள்; மயில்போன்ற சாயலும் அழகும் உடையவர்கள். கிள்ளிவளவனால் நாடு கைப்பற்றப்பெற்ற பின் மாடங்கள் தீ கொளுவப்பெறுகின்றன. அதனால் அம்மகளிர் தம் இல்லம் துறந்து, எல்லோரும் கூடிக்கிடக்கும் பொதுமன்றத்திற் சென்று தங்க விரும்பாது நேரே போர்க் களத்திற்கு வருகின்றனர். போர்க்களத்தில் பட்ட தம் கணவன்மார் ஏற்ற மார்பிற்புண்ணைக் கண்டுகளித்துத் தாமும் உயிர்நீக்க வேண்டுமென்பது அவர்கள்தம் அவா. ஆண்டு அவர்கள்தம் கணவன்மார் உருச்சிதைந்து போனமையால், அவர்களைக் கண்டு உயிர் துறக்க வாய்ப் பற்றுக்கிள்ளிவளவன் இருக்குமிடத்தையே தமக்குப் புகலிட மாகக் கொண்டு அலமருகின்றனர் என்பதை,

“ ......................தண்டா மாப்பொறி
மடக்கண் மயிலியன்று மறலி யாங்கு
நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து
மென்றோண் மகளிர் மன்றம் பேணார்
புண்ணுவந்து...............................
...........உளையணிப் புரவி வாழ்கெனச்
சொன்னிழ லின்மையி னின்னிழற் சேர ”

என்கின்றார்.

அடுத்து, அவ்வீரர்களின் மக்கள் நிலையினைக் கூறு கின்றார். வீரர்கள் போர்க்களம் புகுந்ததால் அவர்கள் செவ் வனம் பேணப்பெறுமலும், அழகூட்டப்பெறுமலும் போய் விட்டனர். முன்னர் அவர்கள் மார்பில் அணிந்திருந்தது நுண்ணிய அணிகலனேனும், தலை எண்ணெய் நீவப் பெறுமையாலும் ஒப்பனைகொள்ளாமையாலும் புல்லென் றிருக்கின்றது. அவர்களும் தாய் போர்க்களம் புகப் பின் தொடர்ந்து வந்தவர். அவர்களும் தமரைக் காணப் பெருவேட்கையினர். ஆனல், அவர் தமரெல்லாம் அம்பி னுலும், வாளினுலும் வடிவறியாவகை முகத்தோடு உடல் சிதைந்து கிடப்பதால், இவர் தமர் இவர் வேற்றவர் எனப்

பிரித்தறிய மாட்டாதவராகிக் கலங்கிக் கையாறு கொள்கின்றனர். இக்காட்சியினைப் புலவர்,

" நுண்பூண் மார்பிற் புன்றலைச் சிறுஅர்
அம்பழி பொழுதிற் றமர்முகங் காணு"

என்று கூறுகின்றார்.

கிள்ளிவளவன் செய்த வாட்போரில் அப்பகைவேந்து வாள்தொட்டுப் பொரமாட்டாது புறக்கொடுத்து அக்களத்தே அழிந்துவிடுகின்றான். எனினும், கிள்ளிவளவனுக்கு அப்பகைவன்பால் நின்ற சினம் நீங்கவில்லை. அதனால் அவன் நாட்டை எரியூட்டுகின்றான். மாடங்கள் எரிகொளுவப்பெற்றதால் அவை வெடித்துப் பிளந்து விழுகின்றன. இக்காட்சி புலவருக்கு இடியேறுண்ட மலைக் குவடுகள் சிதைவதை நினைவுபடுத்த,

"............................வாளிற் றுக்கான்
வேந்துபுறங் கொடுத்த வீய்ந்துகு பறந்தலை
மாட மயங்கெரி மண்டிக் கோடிறு
புருமெறி மலையி னிருநிலஞ் சேர"

என்கின்றார்.

கிள்ளிவளவன் எரிகொளுவி அழித்ததோடு அமையாது வஞ்சிமுற்றத்தை ஏர்க்களம்போல் செய்கின்றான். உழவர்கள் நெற்கதிரை அரிந்துவந்து களத்தில் குவித்துக் கடாவிட்டு நெல்லைப் பொலியாக்கித் தம் சுற்றத்தோடு நுகர்தற்கு முன்னம் கடவுட்பலி கொடுத்துப் பின்னர் பரிசிலர் முகந்து கொள்ளச் செய்யுமாறுபோலக் கிள்ளிவளவனும், நாற்படையையும் அழித்துப் போர்க்களத்தில் பிணத்தைக் குவித்து களிறு எருதாக வாள் ஏர்ப்படையாக உழுது பிணக் குவியலை விளைத்து, நிணச்சோறட்டுக் கொற்றவைக்குப் பலியிட்டுப் பின் பகைப்புலத்துப் பெற்ற யானை, குதிரை, செல்வம் முதலியவற்றைப் பரிசிலர் முகந்துகொள்ளச் செய்கின்றான்

இங்ஙனம் கிள்ளிவளவன் பலவேந்தர்களை வெல்வதால் பரிசில்மாக்கள் அவன் செல்வழியெல்லாம் செல்கின்றனர். ஆண்டு வெட்டுண்ட வீரர்கள் புண்கிழித்து உயிர்விடு வதையும் வெட்டுண்டு கிடக்கும் பிணத்திடைக் காணும் வாட்புண்ணையும் வேற்புண்ணையும் கண்டு அக்கொடுங் காட்சியைக் காணப் பொருதவராய்த் தம் கண்களில் அறைந்துகொண்டு, ‘இங்ஙனம் கொடுமை செய்தோன் கொலைஞனே’ என்று ஆண்டு இயங்குவோர் கூறுமாறு வெற்றி கண்டிருக்கின்றான் கிள்ளிவளவன், இப்படியெல் லாம், அஞ்சாப் பெருமறவர்களை வெட்டிக்கொன்று வஞ்சி முற்றத்தினை வெற்றிக்களமாகக் கொண்டான், வெற்றி முரசு கொட்டப்பெறும் அவ்வெற்றிக்களம் வாழ்க என்று வாழ்த்தினர். பரிசிலர்கள் இப்பெரும் புகழைப் புகழ்ந்து பாடி இலக்கண முறைப்படி முகத்தில் புள்ளிபெற்ற யானைத் திரள்களைப் பரிசிலாகப் பெற்றனர் என்று கிள்ளிவளவன் புகழைப் பெரியோர் பேசுவார்கள் என்பதனை,

“சென்றோன் மன்ற கொலைவற் சென்றெறி
வெம்புண் ணறிநர் கண்டுகண் ணலைப்ப
வஞ்சி முற்றம் வயக்கள னாக
அஞ்சா மறவ ராட்போர் பழித்துக்
கொண்டனை பெரும குடபுலத் ததரி
பொலிக வத்தைநின் பணைதயங்கு வியன்களம்
விளங்குதிணை வேந்தர் களந்தொறுஞ் சென்று
புகர்முக முகவை பொலிகென் றேத்திக்
கொண்டன ரென்ப பெரியோர்”

என்கின்றார்.

இப்பொழுது கிள்ளிவளவன் பகைப்புலம் புகுந்து வெற்றி விளைத்திருக்கின்றான். அதனையறிந்து பொருநன் ஒருவன் பரிசில்பெற வருகின்றான். வந்தவன் கிள்ளிவளவ னின் புகழைப் பலர் சொல்லக்கேட்டவன். கிள்ளிவளவனால் பரிசில் தரப்பெற்றோர் மிகப்பெரிய தகுதியும் முதுமையு முடையவர்கள். அவர்களை நோக்கத் தனக்குக் கிள்ளிவள

வனைத் தன் மாக்கிணை அதிரத்தாக்கிப் பாடும் தகுதியில்லை என்று உணர்கின்றான். என்றாலும், பரிசில்பெறும் வேட்கை அவனுக்கு மிகுதியும் உண்டு. கிள்ளிவளவனிற் சிறந்தோன் ஒருவனை அவன் இதுகாறும் கண்டதில்லை. இக்கிள்ளி வளவன் பகைவரும் புகழும் பேராற்றல் படைத்தவன். அதோடு இப்பொழுது கிள்ளிவளவன் வெற்றி கொண்டிருக்கும் அப்போர்க்களம் பேயாலும், நரியாலும் சூழப்பெற்று அச்சந்தரத்தக்கதாய்க் கிடக்கின்றது. இவையெல்லாம் அவனுக்குப் பாடற்குரிய பொருளாக அமைந்ததால் அவனைப் பாடி, அவன் பகைப்புலத்தார் மதிலழித்துக் கொண்ட பெரும் பொருளினைத் தான் முகந்துசெல்ல வேண்டுமென்னும் தன் வேட்கையைப் புலப்படுத்தி,

“ ..........................................யானும்
அங்கண் மாக்கிணை யதிர வொற்ற
முற்றிலெ னுயினுங் காதலி னேத்தி
நின்னோ ரன்னோர் பிறரிவ ணின்மையின்
மன்னெயின் முகவைக்கு வந்திசிற் பெரும
பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு
கணநரி திரிதரு மாங்க ணினனருந்து
செஞ்செவி யெருவை குழீஇ
அஞ்சுவரு கிடக்கையை களங்கிழ வோயே ”

என்று பாடுகின்றான்.

இங்ஙனமெல்லாம் கோவூர்கிழார் கிள்ளிவளவனின் போர்நிகழ்ச்சிகளையும் அவன் ஆண்டுச் செய்த கொடைப் பெருமையினையும் தம் புலமைதோன்றப் பாடியுள்ளார்.

---

## 15. உலககாக்கும் உயர்கொள்கை

“ மாகவிசும்பின் வெண்டிங்கள்
மூவைந்தான் முறைமுற்றக்
கடனடுவட் கண்டன்னவென்
இயமிசையா மரபேத்திக்
கடைத்தோன்றிய கடைக்கங்குலாற்
டலர்துஞ்சவுந் தான்துஞ்சான்
உலககாக்கு முயர்கொள்கைக்
கேட்டோன் எந்தையென் தெண்கிணைக் குரலே
கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
தொன்றுபடு சிதாஅர் மருங்கு நீக்கி
மிகப்பெருஞ் சிறப்பின் வீறுசால் நன்கலம்
........................... லவான
கலிங்க மளித்திட் டென்னரை நோக்கி
நாரரி நறவின் நாள்மகிழ் தூங்குந்து
போதறியேன் பதிப்பழகவும்
தன்பகை கடிதலன்றியுஞ் சேர்ந்தோர்
பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ
மறவர் மலிந்ததன் ...............
கேள்வி மலிந்த வேள்வித் தூணத்
திருங்கழி யிழிதரு மார்கலி வங்கம்
தேறுநீர்ப் பரப்பின் யாறுசீத் துய்த்துத்
துறைதொறும் பிணிக்கு நல்லூர்
உறைவின் யாணர் நாடுகிழ வோனே ”

(புறம். 400)

திணை : பாடாண்திணை. துறை : இயன்மொழி

சோழன் நலங்கிள்ளியைப் பாடியது.

பொழிப்புரை :—

வானத்து வெண்திங்கள் பதினைந்துநாள் முற்றியபின் கடலின் நடுவே காட்சி தருவதுபோன்ற எனது பறையை அறைந்து அவன் புகழ்பாடின இவ்விடியற்காலையில் பலர்

துஞ்சவும் தான் தூங்காது உலகு காக்கும் உயர்ந்த கோட்பாட்டினையுடைய எம் தலைவன், தன் முற்றத்தில் நின்று யான் இசைத்த கிணைப்பறையின் ஒலியைக் கேட்டான். கேட்டதனால் வேட்கைகுறையாது ஓடிவந்து யான் பூண்டிருந்த சிதைந்த அழுக்காடையைப் போக்கி, தூஉமடி உடுக்கச்செய்து, சிறந்த அணிகலன்களையும் அணியச் செய்து, காய்ச்சி வடிக்கப்பெற்ற கள்ளினை என் துயர் போகத் தந்து மகிழ்மிகச் செய்து தன்னிடமே நீங்காது வாழ வேண்டினான். யானும் நாட்கள் கழிவது அறியேனாயினேன். அவனே, தன்பகை போக்கலோடு, தன்னிட முற்றோர் பசிப்பகையினைக் கடிதலிலும் வல்லவனாக இருந்தான். மறவர்கள் நிறைந்த அவன் மாநகர் மறையுணர்ந்த அந்தணர் செய்யும் வேள்வியால் சிறந்துகிடக்கின்றது. கரிய கழிவழியாக வந்திறங்கும் ஓடங்களை, கடற்குச் செல்லும் வழியாகிய ஆற்றைச் செம்மைசெய்து செலுத்தித் துறைதொறும் நின்ற வேள்வித் தூணங்களிற் பிணிக்கப் பெறும் அன்றூடம் புதிய புதிய பொருட்களைத் தரும் இனிய வாழ்வு கொள்ளும் செம்மையான நாட்டிற்கு உரியவன் இச்சோழன்.

திணை, துறை விளக்கம் :—

தலைவன் எதிர்சென்று ஏறி அவன் செய்தியையும், அவன் குலத்தோர் செய்தியையும், அவன்மேலே ஏற்றிப் புகழ்ந்த இயன்மொழி வாழ்த்தில் அடங்கும் இப்பாட்டு. இத்திணை, துறை விளக்கத்தினை 'கடும்பின் அடுகலம்' என்று தொடங்கும் பாட்டில் காண்க.

விளக்கவுரை :—

பூம்புகாரிலிருந்து அரசோச்சிய நலங்கிள்ளி நடாத்திய அரசியல் முறையினையும், அவன் தன்னிடம் வரும் விருந்தினர்களையும், கலைஞர்களையும் ஓம்பும் பெற்றியினையும் கூறுவதோடு வேள்விமலிந்த அவனது கடற்கரையையும், வங்கங்கள் மலிந்து கிடந்த ஆற்றையும், கழியையும்

கோவூர்கிழார் கிணைப்பொருநன் கூற்ருகச் சிறப்புறப் பாடுகின்ருர்.

பொருநன் ஒருவன் நலங்கிள்ளியைக் கண்டு அவன் வளம் துய்க்கச் சென்ருன். அப்பொருநன் கைக்கணுள்ள கிணை மிகப்பெரியது. அது வெள்ளியப் பச்சையால் போர்த்தப்பெற்றது. அப்போர்வைத் தோலோடு கூடிய அக்கிணை கடலிடைத் தோன்றும் பதினைந்துநாள் நிறைவு பெற்ற முழுமதிபோல் காட்சியளித்தது. அக்கிணையைக் கையேந்தி அவன் நலங்கிள்ளியின் அரண் புகுந்தான். அந்தநேரம் எல்லோரும் உறங்கும் கடையாமமாகும். அதனைத் தெரிந்திருந்தும் பசித்துன்பத்தாலும், அரசனைக் காணும் பெருவேட்கையாலும், காலமல்லா அப்போதிலும் நலங்கிள்ளியின் மரபினைப் புகழ்ந்துபாடிக் கிணையைக் கொட்டினன். அப்பொழுது வழுப்படாது நாடுகாக்கும் வேட்கையால் உறங்காதிருந்த நலங்கிள்ளி அக்கிணை இசையினை விரும்பிக் கேட்டு ஓடிவந்தான் என்பதைப் பொருநன் கூற்ருல்,

“ மாகவிசும்பின் வெண்டிங்கள்
மூவைந்தான் முறைமுற்றக்
கடனடுவட் கண்டன்னவென்
இயமிசையா மரபேத்திக்
கடைத்தோன்றிய கடைக்கங்குலாற்
பலர்துஞ்சவுந் தான்துஞ்சான்
உலகுகாக்கு முயர்கொள்கைக்
கேட்டோன் எந்தையென் தெண்கிணைக் குரலே ”

என்று கூறுகின்ருர்.

இங்குக் கோவூர்கிழார் நலங்கிள்ளியின் அருங்குண மொன்றைக் குறிப்பிடுகின்ருர். அஃதாவது அவன் உலகு காக்கும் உயர்கொள்கையை மரபுக்கடமையாகக் கொண்டிருந்ததால் அக்கடையாமத்திலும் உறங்காதிருந் தான் என்பதாகும். சோழகுலம் காத்தற்கடவுளாகிய திருமாலின் வழிவந்தது என்ப. அத்திருமால் அரிதுயில்

கொண்டு உலகு காப்பதுபோல் இவனும் கடையாமத்திலும் விழித்திருந்து உலகு காக்கின்றான். இதனால்தான் " திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் கண்டேன் " என்றார்போலும்! இங்கு அரச வாழ்வென்பது துன்ப முடையதன்றித் தொழுதகவுடையதன்று என்ற தம் கோட்பாட்டினைக் கொண்ட பேரரசன் நலங்கிள்ளி என்பதைக் கோவூர்கிழார் நுட்பமாகப் புலப்படுத்தலைக் காணலாம்.

சோழன் நலங்கிள்ளி பொருநனை வரவேற்றுப் பேணிப் பரிசிலளித்த தன்மையை அடுத்துக் கூறுகின்றார். இக்கிணைப் பொருநன் சென்று நலங்கிள்ளியைப் பாட, அவன் அது கேட்டு மகிழ்ந்து எழுந்துவந்து அப்பொருநனைக் காணுகின்றான். பொருநன் வறுமையில் தலைநின்றவனாதலின், அவன் உடுத்திய ஆடை சிதைந்து தைக்கப்பெற்றிருந்தது. அரசன் அதனை முதற்கண் களைந்து பாம்புரித்தன்ன அறுவையைத் தந்து பொருநனை உடுக்கச் செய்கின்றான். பின்னர் அவன் கலைப்பெருமையுணர்ந்து அப்பொருநன் பேரணிகளால் பொலிந்திருக்க வேண்டுமென்று கருதிக் கடகம், மதாணிபோன்ற அணிகலன்களால் அவனை ஒப்பனை கொள்ளச் செய்கின்றான். பின்னர் அவன் பசி போக்கித் துன்பம் மறந்து இன்பங்கொள்ள நறுந்தேறலைத் தருகின்றான். அவன் அவ்இன்பக்களி மயங்கியதாலும் அவ்வூரவரோடு பழகியதாலும் இரவுபகலோடு, நாளுந் திங்களும் அறியாவகை உணவாலும் தேறலாலும் பிற வற்றாலும் மகிழ்தூங்கச் செய்கின்றான் என்பதை,

" கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
தொன்றுபடு சிதாஅர் மருங்கு நீக்கி
மிகப்பெருஞ் சிறப்பின் வீறுசால் நன்கலம்
கலிங்க மளித்திட் டென்னரை நோக்கி
நாரரி நறவின் நாள்மகிழ் தூங்குந்து
போதறியேன் பதிப்பழகவும் "

என்கின்றார்.

நலங்கிள்ளிக்குக் கலைஞர்களைப் பேணி அவர் பசிக் கொடுமை நீக்குவது எங்ஙனம் குடிப்பண்பான ஒரு கடமையாயிற்றோ, அங்ஙனமே பகைகடிவதும் உலகுகாக்கும் உயர்கொள்கைக்குத் தலையாயதாதலின் அதனையும் செய்யத் தவிர்தலில்லை. திருமாலுக்கு நல்லோரைக் காத்தலைப் போன்றே தீயோரை அழித்தலும் ஒரு செயலாகும். அதனால் நலங்கிள்ளிக்கு இப்பண்பும் விலக்கன்று என்பதை நுட்பமாய்ப் புலப்படுத்துகின்றார். இதனை,

" தன்பகை கடித லன்றியுஞ் சேர்ந்தோர்
பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ "

என்று கூறுகின்றார்.

அரசன் வீரம் விளைத்து விருந்து பேணினால் மட்டும் போதாது. அச்செயல்கள் அரசனாகப் பிறந்ததால் செய் கடனாகும். ஒவ்வொருவரும் ஒப்புரவு பற்றிய கடன் முற்றுவதோடு தன் உயிர்நலம் பேணவும் வேண்டும். உயிர்நலம் என்பது அறமியற்றலாகும். உயிரோடு தொடர்ந்து செல்லவல்லன கல்வி, அறம், மறம் என்பனவே. அதனால், அரசன் அறமியற்றலும் வேண்டும். அவ்வறம் வேள்வியானும் ஆகும். நலங்கிள்ளி மறக்களவேள்வி எண்ணிறந்தன ஆற்றியவன். அதன்கண்ணேயே ஈடுபட்டு அறக்களவேள்வி செய்ய மறந்திலன். இப்பண்பு எளிதில் வேந்தர்க்கு அமையாது. இதனை, சேரன் செங்குட்டுவனை மாடலமறையோன்

" அறக்கள வேள்வி செய்யாதி யாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோ யாயினை "

(சிலப் : 28-131-32)

என்று இடித்துரைப்பது கொண்டு தெளியலாம்.

அறக்கள வேள்வி செய்தற்குப் பேராற்றலும் பெரும் பொருளும் வேண்டும். சோழன் நலங்கிள்ளி தன் பேராற்றலைக் கடலக வரைப்பு எங்கணும் காட்டி வீரம் விளைத்து மறக்கள வேள்விசெய்து, பகைவர் எயில்

அழித்துக்கொண்ட பெரும் பொருளோடு புகாரிலிருந்து கொண்டு அறக்கள வேள்வி செய்கின்றான். இப்பெரு வேள்வி செய்யும் நலங்கிள்ளிக்குப் புகார் பல்லாற்றான் துணைபுரிகின்றது. புகார் நகரம் என்றும் பேராற்றல் மிக்க படைவீரர்களைக் கொண்டது.

> "பெருஞ்சினத்தால் புறக்கொடா அது
> இருஞ்செருவின் இகல்மொய்ம்பினோர்"
>
> (பட்டினப்பாலை.)

என்பது இதனால் வலியுறும். இங்ஙனம் மறவர் மலிந்த மாநகர் பயனால் பெரியது. அளந்தறியாப் பலபண்டம் வரம்பறியா வகை வந்து ஆண்டு ஈண்டி வளந்தலை மயங்கி எப்பொருளானும் முட்டாச்சிறப்புடையது அது. பொருள் வளம் மிக்க அப்பேரூரில் நலங்கிள்ளி ஆற்றும் அறக்கள வேள்விகள் எண்ணிறந்தன. வேள்வி ஆற்றுதற்குப் புண்ணியப் பேராறு வேண்டுமாதலின் நலங்கிள்ளிக்கு வான்பொய்ப்பினும் தான்பொய்யாக் காவிரியும் துணை புரிகின்றது. காவிரித்துறை,

> "பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
> பொய்யா மரபிற் பூமலி பெருந்துறை"
>
> (பட்டினப்: 104-105)

ஆதலால், அத்தகைய துறைதொறும் வேள்வி செய்கின்றான். அவ்வேள்வியினை இயற்றுதற்கு அமையும் சான்றோர்கள் செறிந்த தொல்கேள்வித் துறைபோயவர்களாயும், வேத நான்கையும் கற்றுத் தெளிந்து அவ்விதிப்படி இயற்ற வல்லவராதலும் வேண்டும். அவர்வழியாகச் செய்யும் வேள்வியே வீயாச்சிறப்பினை நல்கும். ஆதலால் அத்தகைய சான்றோர் துணையினால் வேள்வி செய்திருக்கின்றானாதலின் காவிரித் துறைதொறும் வேள்வித்தூண்கள் செறிந்து நிற்கின்றன. புகார் ஒரு பெருந்துறைமுகப் பட்டினமாதலால் எண்ணிறந்த வங்கங்கள் ஆண்டு வருகின்றன. அவை கடலினின்றும் காவிரித்துறையிடைப் புகுத்தப்பெற்று ஆண்டுநிற்கும் வேள்வித் தூண்கள்தோறும் பிணிக்கப் பெறுகின்றன. இவ்வாறு எண்ணிறந்த வங்கம் பிணிக்க

உதவின வேள்வித் தூணமென்ருல் அவன் ஆற்றிய வேள்விகள் எத்தனை என்பதை நாம் உன்னி உணரும் வண்ணம்,

"மறவர் மலிந்ததன் .........
கேள்வி மலிந்த வேள்வித் தூணத்து
இருங்கழி இழிதரும் ஆர்கலி வங்கம்
தேறுநீர்ப் பரப்பின் யாறுசீர்த் துய்த்துத்
துறைதொறும் பிணிக்கும் நல்லூர்
உறைவின் யாணர் நாடுகிழ வோனே"

என்று பாடுகின்ருர்.

நலங்கிள்ளியின் புகார் வீரவளம், காவிரித்துறைவளம், வங்கம் தந்த பொருள்வளம், வேள்வியாற்றும் சான்ருேர் வளம் இவற்ருல் சிறந்ததாதலின் இனிது வாழ்தற்கமைந்தது. அதனுல்தான் கிணைப்பொருநனும் அப்பதிப் பழகிப் போதறியாது போய்விட்டான். இங்ஙனமெல்லாம், கோவூர்கிழார் நலங்கிள்ளியின் நாட்டுச் சிறப்பினையும் அவன் பண்பு நலங்களையும் பல கோணங்களில் பகுத்துணர்த்துகின்ருர்.

இதுகாறும் கோவூர்கிழார் நலங்கிள்ளியைப்பற்றிப் பாடிய சிறப்பியல்புகளை நோக்கும்போது, பெற்ற நாட்டானும், வாய்த்த வீரராலும், விளைத்த வீரத்தானும், கொண்ட வெற்றியானும், செய்த இருவகை வேள்வியானும், கொடுத்த கொடையானும் அவனிற் சிறந்த ஒரு பேரரசன் உலகத்திலில்லை என்று தெளிவுபடுத்துகின்ருர்.

---

## 16. முதுவோர் மொழி

"அறமுதல் நான்கும் அகலிடத்தோ ரெல்லாம்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனுர் பான்முறைநேர் ஒவ்வாதே
முன்னைய முதுவோர் மொழி."

(திருவள்ளுவமாலை 38)

அறத்தையும், பொருளையும், இன்பத்தையும், வீட்டையும் பற்றித் திருவள்ளுவருக்கு முன் தோன்றிய எத்தனையோ புலவர்கள் நூல் பாடினுர்கள். ஆனுல், திருவள்ளுவர் இந்த அறமுதல் நான்கு பொருளையும் குறள்வெண்பாக்களில் பாகுபடுத்திக் கூறியதற்கு ஒப்பாக அவை இல்லை. திருவள்ளுவர் அத்துணைச் செப்பமுற அந்நான்கு பொருள்களையும் விளங்குமாறு எளிதாகக் கூறியுள்ளார் என்று கோவூர்கிழார் பாடியதாக அமைந்தது இப்பாட்டு.

திருவள்ளுவமாலை பாடிய புலவர்கள் ஐம்பத்து மூவரோடு திருவள்ளுவர் வாழ்ந்ததாகவும், அவர் நூற் சிறப்பினைக் கண்டு அவர்கள் ஆளுக்கொரு வெண்பாப் பாடினர் என்றும் வரலாறுண்டு. அன்றியும், ஔவையாரும், இடைக்காடனும் இரண்டு குறள்வெண்பாக்களைப் பாடி அவற்றின்வழித் திருவள்ளுவர்தம் பெருமையினைக் கூறியுள்ளனர்.

இந்த ஐம்பத்துஐந்து புலவர்களும் திருவள்ளுவர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தனரா? ஆசிரியப்பாவிலேயே பாயாத்த இந்த ஐம்பத்துஐந்து புலவர்களும் திருவள்ளுவருக்காக வெண்பாப் பாடினரா ? இவர்கள் பாடியனவாகச் சங்க இலக்கியங்களில் வேறு வெண்பாக்கள் இல்லாதது ஏனே?சங்க இலக்கியங்கள் அடியானும் பாவானும் தொகைப் பட்டன எனின் குறளான் ஒரு நூல் தொகைப்படலாமே. திருவள்ளுவர் சங்கப்புலவராய் இருந்தும் திருக்குறளையன்றி வேறு ஒன்றும் பாடாதுபோயினரா ? பாடியவை கிடைக்க

வில்லையா? இவர் குறள்வெண்பாதான் பாடுவாரா? நேரிசைவெண்பா, பஃறொடைவெண்பா, இன்னிசை வெண்பா, ஆசிரியப்பா இவற்றில் பாடினுல் ஆகாதா? கபிலர், பரணர், ஔவையார், கோவூர்கிழார் போன்ற வர்களை ஆதரித்த புரவலர்களும், வேந்தர்களும், மன்னர் களும் இன்னின்னுர் என்று சங்க இலக்கியம் காட்டும்போது அவரோடு வாழ்ந்தாரென்னும் திருவள்ளுவரைப்பற்றி மட்டும் செய்தி கிடைக்காமற் போவானேன்? இத்திருவள்ளுவரால் அப்புலவர்பெருமக்கள் மதித்துப் பாராட்டற்குரியர் அல்லரோ?

அடுத்து, கோவூர்கிழார் பாட்டைக் கொண்டு பார்க்கும் போது அஃதாவது, "நேர் ஒவ்வாதே முன்னைய முதுவோர் மொழி" என்பதால் அறமுறைத்த ஆண்டவன் மொழியாகிய வேதமும் வள்ளுவர் நூலுக்கு ஒவ்வாது என்ருகின்றது. அப்படியானுல், உக்கிரப் பெருவழுதியாரின்,

'நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளாய்த்......
.........தந்துரைத்தார் வள்ளுவர்'

என்ற கூற்றுப்படி பிறவாயாக்கைப் பெரியோன் உரைத்த மெய்ப்பொருளையே வள்ளுவர் வகுத்துக் கூறினுர் என்ருல் பெருமை அறமுரைத்தானுக்கல்லவா உண்டு? இவற்றையெல்லாம் பார்க்கின்றபோது திருவள்ளுவமாலை பாடிய புலவர்கள் திருவள்ளுவர் காலத்து வாழ்ந்தவர்கள் என்றல் ஏலாது.

அதனுல், கோவூர்கிழாரால் பாடப்பெற்றதாக அமைந்த இப்பாட்டு சங்க நூல்களில் பாடிய கோவூர்கிழாரால் பாடப் பெற்றது என்று கோடற்கில்லை. இதனை ஈண்டு விரிப்பிற் பெருகும். இதுபற்றி விரிவாக எனது திருவள்ளுவமாலை என்ற நூலிற் காண்க.

## 17. தளிதரு தண்கார்

" வன்பரற் றெள்ளறல் பருகிய விரலைதன்
இன்புறு துணையொடு மறுவந் துகளத்
தான்வந் தன்றே தளிதரு தண்கார்
வாரா துறையுநர் வரனசைஇ
வருந்திநொந் துறைய விருந்திரோ வெனவே "

(குறுந்தொகை. 65)

திணை : முல்லை.

துறை: பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது.

பொழிப்புரை :

தோழி! வலிய பருக்கைக் கற்களினிடத்தேயுள்ள தெளிந்த நீரைக் குடித்த ஆண்மான், தன் இன்புறு பெண் மானேடு களிப்பினுல் துள்ளி விளையாடி நிற்கவும், இங்கே குறித்த காலத்து வாராது சென்றஇடத்தே தங்கிய தலைவர் மீண்டு வருதலை விரும்பி, நோவையும் வருத்தத்தையும் கொண்டு உயிர் வைத்திருந்தீரோ என்று வினவுதற்கு மழைத்துளியைத் தரும் தண்ணிய கார்ப்பருவம் வந்தது.

விளக்கவுரை :

பொருள்வயிற் பிரிகின்ற தலைவர்கள் காலங்குறித் தல்லது பிரிவதில்லை. அவர்கள் குறித்துச் சென்ற பருவத்து மீள்வதற்குத் தடைகள் பல நிகழும். ஆதலால், அவர்கள் சற்றுக் காலந்தாழ்த்து வருவதுமுண்டு. ஆனுல், தலைவி யர்கள் முல்லைசான்ற கற்பினர் ஆதலின் தலைவன் குறித்த காலம் வருகாறும் ஆற்றியிருத்தல் அவர்தம் இயல்பு. அக்காலம் கடக்கும்போது, இயற்கைச் சூழ்நிலைகளைக் கண்டு அவை தமக்குத் தீங்கிழைப்பனவாகக் கருதுதலும், அத்தீங்கைப் பொருட்படுத்தாது தமக்குள்ளேயே ஆறுதல் கூறிக்கொள்வதும் உண்டு. எப்படியும் ஆற்றியிருந்து முல்லையொழுக்கம் காட்டலே அவர்கட்குப் பெருமையளிப்ப

தாகும். ஆற்றுது கையறவு கொண்டு நெய்தல் ஒழுக்கம் மேற்கொள்வரேல் அது பழிப்பாகிக் கணவர்க்குச் சிறுமை கற்பிக்கின்ற செயலாகுமாதலால் தலைவியர்கள் ஆற்றுந் துணையும் ஆற்றி முல்லையொழுக்கத்தினராதற்கே முயல்வர்.

இங்கு, இப்பாட்டில் வருகின்ற தலைவி இத்தகைய பண்புடையவள். இத்தலைவி தன் கணவன் பொருள்வயிற் பிரியுஞான்று,

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை"

என்று தன் ஒல்லாப் பிரிவினை உணர்த்தியவள். தலைவன் புகழும் மானமும் எடுத்து வற்புறுத்த அவற்றைக் காணுதவளாய்க் கலுழ்ந்தவள் அவள். தலைவன் எப்படியோ அவளைத் தேற்றிப் பிரிந்துவிட்டான். பிரிந்தவன் குறித்த கார்ப்பருவமும் கடந்துவிட்டது அப்பொழுது அவள் அவன் வரவுக்கு ஏங்கிவாடுகின்ருள். "அவன் பிரிவுகண்டு வீழ்வேன் என்று உளைந்தவளாய நீ அவன் பிரிந்தபின்னும் வாழ்ந்து, அவன் குறித்த கார்ப்பருவம் வந்தபின்னும் அவன் வாராமை கண்டு, இறவாது ஏன் இன்னும் வாழ்கின்ருய்?" என்று அவளைக் கேட்கவேண்டிய கார், "அவன் வருகைக் காக வாழ்கின்றீர்களோ?" என்று கேட்பதாகத் தனக்கு அவன் பிரிவினுல் தோன்றும் கையறவினைக் குறிப்பிடுகின்ருள். இக்கார் கேட்டதைப்போன்ற ஒரு கேள்விக்குத் தக்க விடை கூறுகின்ருள் ஒரு தலைவி. அவள் தலைவன் தன் பிரிவுணர்த்தியபோது சாவேன் என்று கூறியவள். மேலும் வாழ்ந்தபோது தன்னை இகழ்ந்து கேட்டார்க்கு,

"உரனசைஇ உள்ளம் துணையாகச் சென்ருர்
வரனசைஇ இன்னும் உளேன்"

என்று விடையிறுக்கின்ருள்.

"தலைவன் என்னைப் பிரியும்போது புகழும் மானமுங் கருதிப் பிரியவேண்டுமே என்று பிரிந்தானேயன்றிப் பொருளே காதலித்து என்பால் அருளைத் துறந்து பிரிந்தா

னல்லன். அப்படிப் பேரருளுடையனுய்ப் பிரிந்த அவன் மீண்டு வருகின்றபோது, அவ்ன் பிரிவுணர்த்தியதை உணர்ந்து பொருது யான் இறந்துபட்டேன் என்பதைச் செவிமடுப்பனேல், தன்னுல் தன் காதலி இறந்தாள் என்று நொந்து அவனும் இறப்பன். அவன் இறப்பு என் இறப்பாலானது. ஆகையால் யானே என் கணவனைக் கொன்றவளாகக் கருதப்படுவேன். ஆதலால், அப்பழி என்பாற் சாராவண்ணம் அவன் பிரிவினுலுற்ற துன்பங் களை ஏற்றுப் பொறுத்து வாழ்கின்றேன்" என்கின்ருள்.

கார்காலம் வந்தது உணர்வதற்குப் பல முறைகள் உண்டு. கொன்றை பூத்தலும், மழை பொழிதலும், மான் கணம் உகளுதலும் போன்ற நிகழ்ச்சிகள் அவை. இங்குக் கார்காலம் வந்து, மழையினைப் பெய்து, நீரினைப் பெருக்கி, ஆருக்கி ஓடிப் பின்னர் தெளிந்துவிட்டது. அந்நீரைப் பருகிய ஆண்மான்கள் தெண்ணீர் பெற்ற மகிழ்ச்சிப் பெருக்கால் தம் பெடைமான்களோடு கூடிக் களித்துத் திளைத்துத் துள்ளுகின்றன. இவ்வாறு கார்காலம் வந்து விட்டது. இக்கார்காலமே அத்தலைவன் வருவதாகக் குறித்த காலமாகும். இந்தக் கார்காலத்தைக் கண்ட தலைவிக்குத் தலைவனைக் காணுமையால் கையறவு மிக, தன் தோழியிடம், தான் கொண்ட துன்பத்தைப்பற்றியும் அதன் மேலும் வாழ்கின்ற வாழ்வுபற்றியும் தன்னை நோக்கிக் கார் கேட்பதாகக் கூறுகின்ருள். கார்காலம் கேட்ட அக்கேள்வி தக்க கேள்வி என்றும், தலைவன் குறித்த பருவம் வந்த பின்னும் தான் வாழ்ந்திருத்தல் முறையன்று என்றும், எப்படியாயினும் தன் செயல் தவறுடையதுதான் என்று கருதிக் கூறுவதைக் காணலாம்.

இங்ஙனமெல்லாம் கோவூர்கிழார் அகத்துறையுள் முல்லைத்திணையின் நுட்பத்தினை, நெய்தல் திணையின் வரம்புகாறும் சென்று வரையறுத்துத் தலைவியைக் கார் கேட்பதாகக் கூறி, ஆண்டே விடையையும் வைத்துத் தம் நுண்மாண் நுழைபுலத்தைத் தோற்றுவித்திருக்கின்ருர்.

இங்கு, மானினம் தன் இனத்தோடு தழுவிக் களித்து இன்புறும்வண்ணம் வந்த கார் தனக்குத் துன்பத்தினைத் தந்ததோடு, 'நீ இன்னும் வாழ்கின்றாயே?' என்று இரக்க மற்றுக் கேட்பதாகச் கருதித் தலைவி நோகின்றாள். உண வின்றி இருக்கின்றார் பலரென்றால் ஆண்டு எல்லோரும் வாளாயிருப்பர். ஆண்டே சிலர் உணவினைப் பெறுகின்றார் என்றால் மற்றையோர்க்கு இயற்கைப் பசி நீள்வதோடு, நேர்மை குன்றுவது கண்டு சினப்பசியும் ஏக்கற்றமும் மிகுந்து துன்பமிகும். அதுபோல இத்தலைவிக்குத் தான் தன் தலைவனைப் பிரிந்து வாழ்கின்ற அத்துன்பத்தினும், ஆண்மான்கள் பெண்மான்களோடு கலந்து களிப்பதைப் பார்க்கின்றபோது ஏற்படும் துன்பம் பெரிதாகின்றது. மழை பெய்து மகிழ்வித்த கார் தனக்கு வேண்டுமென்றே தீங்கு தருவதோடு தன்னை நோக்கி, 'நீ இன்னும் வாழ்கின்றாயே?' என்று கேட்கும்போது நின்ற் வருத்தம் நீள்கின்றது இப்படியெல்லாம் தனக்குக் கார்விளைத்த கேட்டினைச் சொல்லு முறையில் தன்னால் இனி வாழமுடியாமையைத் தோழிக்குக் குறிப்பாக உணர்த்துகின்றாள், தலைவி.

இங்ஙனமெல்லாம் தலைவியின் உள்ளத்து நிகழ்ந்த பலதிறப்பட்ட உணர்ச்சிப் பூசல்களைக் கோவூர்கிழார் திறம்படப் பேசியுள்ளார். இக்குறுந்தொகைப் பாட்டு இலக்கியத் தரத்துள் மேலானது. புலவர் புலவராக இல்லாமல் தலைவியாகி, அத்தலைவியும் தன்னிடம் பேசுவன இவை, பேசாதன இவை என்னும் பாகுபாடற்றுக் கார் கேட்பதாகவும் அதுகண்டு தனக்குக் கையாறு நிகழ்வ தாகவும் கற்பனை வளத்தால் பலநிலை கடந்து பாடுகின்றார்.

———

## 18. வதுவைநாண் ஒடுக்கம்

" நெடுங்கழை நிவந்த நிழல்படு சிலம்பின்
கடுஞ்சூல் வயப்பிடி கன்றீன்று உயங்கப்
பாலார் பசும்புனிறு தீரிய களிசிறந்து
வாலா வேழம் வணர்குரல் கவர்தலின்
கானவன் எரிந்த கடுஞ்செலல் ஞெகிழி
வேய்பயில் அடுக்கம் சுடர மின்னி
நிலைகிளர் மின்னல் தோன்றும் நாடன்
இரவின் வரூஉம் இடும்பை நாம்உய
வரைய வந்த வாய்மைக்கு ஏற்ப
நமர்கொடை நேர்ந்தனர் ஆயின் அவருடன்
நேர்வர்கொல் வாழி தோழிநம் காதலர்
புதுவர் ஆகிய வரவுநின்
வதுவைநாண் ஒடுக்கமுங் காணுங் காலே"

(நற்றிணை. 393)

திணை : குறிஞ்சி — துறை : வரைவுமலிந்தது

பொழிப்புரை:

தோழி! வாழ்வாயாக. நீண்ட மூங்கில் கலித்த உயர்ந்த நிழல் மிக்க மலையில், முதிர்ந்த சூலுடைய பிடி கன்றீன்று வருந்த, ஈன்றணிமையினால் உண்டாய வயவு நோயைத் தீர்ப்பதற்குக், களிப்புமிக்க களிற்றியானை வளைந்த தினைக்கதிரைப் பறித்துக்கொண்டு போதலைத் தடுக்கக் கானவன் எறிந்த விரைந்துசெல்லும் தீப்பந் தங்கள், மூங்கில் நிறைந்த மலைப்பக்கமெங்கும் மின்னி, விண்ணிடத்து நிலைபெற்றிராது தோன்றி மறையும் மின்னலைப்போன்று தோன்றுநிற்கும். அம் மலைநாட்டின ராகிய நம் காதலர் இரவில் வரும் துன்பத்தினின்று நாம் உய்யவேண்டி அவர் புதுவராய் வரும் வருகையும், நின் வதுவை நாண் ஒடுக்கமும் காணுங்கால் மணஞ்செய்வதற்கு வந்த வாய்மொழிக்கு ஏற்ப, நம் உறவினர் மகட் கொடைக்கு உடன்படுவர்போலும்! அங்ஙனம் உடன்படு வராயின்,அவர் நம் காதலரொடு மகிழ்ந்து பேசுவரோ?

விளக்கவுரை :

தொல்காப்பியத்தில், 'ஆங்கதன் தன்மையில் வண்புரை உளபட' என்ற துறைப் பகுதியுள் இப்பாட்டு அடங்கும். இப்பாட்டையே, 'ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்' என்ற துறையின்பாற் சார்த்தி வரைவு வேட்கையை உணர்த்திய தாகவும் கொள்ளலாம்.

இப்பாட்டில் ஒரு தோழி தன் தலைவியிடம் அவட்குத் தலைவன் பரியந்தந்து மகட்கொடை நேர்ந்ததால் நிகழும் நிகழ்ச்சியைச் சொல்லி நகையாடும்முகத்தான் தலைவன் வரைவுமலிந்த செய்தியைக் குறிப்பிடுகின்ருள்.

இத்தலைவன் தலைவியோடு இரவுக்குறியின்கண் பயின்றுவந்தவன். இவன் வரவு இன்பம் பயப்பதேனும் களவாதலின் தலைவி முதலிய எல்லோருக்கும் துன்பம் தருவதாகவும் இருக்கின்றது. அவன் வருகை நோக்கி இன்புற்ருல் பிரிவாற்ருமைக்குத் துன்புறவேண்டியுள்ளமை யின் வருந்துகின்றனர். அன்றியும் அவன் வரவால் களவு வெளிப்பட்டு அலராகுமேல் அது குடிப்பழியாம் என்ற அச்சம்வேறு அவர்களை வாட்டுகின்றது. இவ்வாறு இன்பமும் துன்பமும் கலந்த களவொழுக்கத்தில் பயின்றுவந்த ஒருஞான்று தலைவன் வரைவு மேற்கொள்கின்ருன். இம் மணச்செய்தியைத் தெரிந்த தோழி அதனைத் தலைவிக்கு உணர்த்தக் கருதுகின்ருள். அப்பொழுது அவளுக்கு முக்கால நிகழ்ச்சிகள் எண்ணங்களில் தோன்றுகின்றன.

இறந்தகாலத்து நிகழ்ச்சிகளைச் சற்று எண்ணிப் பார்க்கின்ருள். தலைவன் தலைவியோடு தொடர்புகொண்டு அவளைக் காண இரவில் வருகின்ருன். அவன் அவளைக் காணவரும் மலையோ மூங்கில் கலித்து வானேங்கி வளரப் பெற்றது. அம்மூங்கிலோடு பல மரங்களும் செறிந்து பகலி

லும் இருளாய் நிழல்பயக்க வல்லது. அதன் நிலை இரவில் எத்துணை மிகுந்த இருட்சியுடையதாக இருக்குமென்று சொல்லவேண்டா. அந்த மலையில் யானை கன்றீன்றுள்ளது. பொதுவாக விலங்குகளில் பழகியவைகூடக் கன்றீன்ற போதோ, குட்டிகளை ஈன்றபோதோ முட்டவும் கடிக்கவும் செய்யும். இங்குக் காட்டுயானையோ பழகாதது. கன்றைவேறு ஈன்றுள்ளது. யானை கன்றீன்ருல் அதனைக்காக்க அதற்குரிய களிறு மூங்கில் முளைகளை ஒடித்துவந்து ஊட்டிக் காப்ப தோடு, ஆண்டு கன்றிற்கும் கன்றீன்ற யானைக்கும் சிங்கம் புலி போன்ற விலங்குகளால் ஊறு நேராதவாறு கடிகொள்ளவும் செய்யும். இங்கு இக்களிறு தன் பெண் யானையின் ஈன்ற வயவுநோய் தீர்ப்பதற்கு அண்மையில் கானவனல் பயிரிடப் பெற்றுள்ள தினைப்புனத்தில் புகுந்து ஆண்டுள்ள தினைக்கதிர்களைப் பறித்துப் பெண் யானைக்கு ஊட்டுகின்றது. இந்த யானைகளை அப்புறப் படுத்தக் கானவன் இயல்பாகக் கையாளும் பறைகொட் டலைத் தவிர்ந்து தீப்பந்தங்களை அம்பில் வைத்து அவ்யானைகள் நிற்குமிடம் நோக்கி எய்கின்ருன். அவன் தொடர்ந்து எரிகின்ற தீக்கோல் வானத்துத் தோன்றும் மின்னலைப்போல் தோன்றி எரிந்துசென்று மறைகின் றது. இத்தகைய ஏதமும் கலக்கமும் மிக்க இரவில் நாடொறும் தலைவியை நாடித் தலைவன் வருகின்ருன். இப்படித் தலைவன் தொடர்ந்து வரும் ஒவ்வொரு நாளும் தலைவியும் தோழியும், ஆற்றிடை நிற்கும் யானையால் வரும் தீங்கு நினைந்தும், கானவன் எய்யும் ஞெகிழி நினைந்தும் நொந்து நொந்து அவன் வரவிற்கும் செலவிற்கும் வழி நாள்காறும் வாடியிருப்பர். இப்பொழுது அவன் வரைவு மேற்கொண்டதால் அத்துன்பம் அகலும் நாள் வருமன்றே என்று தலைவியைத் தோழி கேட்கின்ருள்.

தலைவன், தலைவியை மணக்க எல்லோருமறிய மணம் பேச வருகின்ருன். வந்தவனிடம் மகட்கொடைக்குப் பரியம்

கேட்பது பெண் வீட்டார் வழக்கம். அவர் வேண்டிய கொடையினை நேர்ந்து அளிப்பது பிள்ளைவீட்டார் கடமை. தலைவியின் பெற்றோர் வேண்டிய கொடையினை நேர்ந்த தலைவன் தலைவியை மணங்கொள்வான். அப்பொழுது தலைவன் மணப்பிள்ளையாதலின் தலைவியை முன்னர்க் காணுதான்போல நாணிக் காண்பான்.

தலைமகளும் அவனை முன்பின் அறியாள்போலப் புதிய தோர் நாணங்கொண்டு ஒழுகுவாள். இவ்வாறு தலைவனும், தலைவியும் களவில் ஒருவரோடு ஒருவர் தோழியறியப் பயிலப் பழகியிருந்தும் ஒன்றும் அறியாதவர்போலப் பழகும் அழகு ஒரு தனியழகு. இவர்கள் பழகிய நிலையும் இப்பொழுது இவர்கள் மேற்கொண்டிருக்கும் நாணத் தையும் காணும் தோழிக்கு எல்லையில்லா மகிழ்ச்சியையும் வியப்பையும் அளிக்கும். இதனை முன்கூட்டியே மனத்தில் எண்ணிப்பார்த்துத் தலைவியிடம். 'இத்தகைய மெய்ப் பாடெல்லாம் உனக்கும் உன் தலைவனுக்கும் எனக்கும் நிகழுமாறு தலைவன் கொடைதந்து மணங்கொள்வான் கொல்!' என்று கூறிச் செய்தியை உணர்த்துகின்றுள் தோழி.

பிடி கன்றீன்றதும் அதனைக் களிறு காத்தல் இயல்பான செயல். ஆனுல், அது தினைப்புனங் கவர்ந்தது அடாதது. யானை தன் பெண்யானையின் ஈன்றணிமையால் நிகழ்ந்த புனிறு தீர்த்தற்கு மூங்கிலைப் பறித்து உணவாக்கினுல் கானவன் கவலைகொள்ளப்போவதில்லை. காரணம் அது அதற்கு இயற்கையான உணவு, அக்களிறு தன் மனைவியின் துன்பம் போக்கக் கானவன் துன்புற்றுப் பயிரிட்டுப் பேணும் தினைப்புனத்தினை அழித்ததால்தான் அவன் அது பொருது தீக்கோலால் எறிய முற்பட்டான். அதுபோல ஒரு தலைமகன் தனக்குரிய தலைமகளைப் பெறுவது இயல்பேனும், முறை யோடு பெருமல் களவில்கொள்வதும் அதனை நீட்டிப்பதும் தவறுடைய செயல். யானை கன்றீன்றதைக் கானவன்

அறியான். ஆனுல், அதனைக் கானவன் அறியக் காரணம் அக்களிறு தொடர்ந்து தினைப்புனத்தைச் சூழ்ந்து வந்ததும் கவர்ந்ததும் ஆகும். அதுபோலத் தலைவியைத் தலைவன் களவிற்கொண்டது ஒருவரும் அறியாச் செய்தி. அவன் தொடர்ந்து களவிற் பழகியதால் பலரறி செயலாயிற்று. கானவன் புனமழிவு கண்டு அதனைக் காக்கத் தீக்கோல் எய்து யானையைப் புனங்கவராது தகைத்ததுபோல, தலைவி நலனழிந்து 'நாற்றமும் தோற்றமும்' வேறு பட்டிருப்பது கண்ட பெற்ருேர் தலைவியைக் கடிகொண்டனர். அதனுல் தலைவன் பயின்றுவர வாய்ப்பில்லாமற்போயிற்று. கடிகொண்டதின் விளைவே ஞெகிழிபோல இன்று அலராகி மறையைப் புலப்படுத்திக் களவிற்குத் தடையாயிற்று. யானை தினைப்புனங் கவர்வதைத் தீக்கோல் தடைசெய்ததுபோலத் தலைவன் தலைவியைப் பெற அலர் தடையாயிற்று. இவ்வாறு தலைவனைப் பெருது, பிறர் கூறுவனவற்றைத் தமக்காக்கி இட்டும் சுட்டியும் பேசுவதாகக் கலங்கிய கலக்கமெல்லாம் தீப்பந்தம்போல் பலரறி செயலாயிற்று. அஃது இப்பொழுது தலைவன் மகள்பேசித் தமர்கேட்கும் கொடைநேர்ந்ததால் தீர இருக்கின்றது என்று அழகொழுக உள்ளுறை அமைத்துப் பாடிக்காட்டுகின்ருர்.

செய்யுள் அமைப்பில் கருப்பொருள் துணையினுல் ஒத்துப் பொருள்முடிய உள்ளுறை பாடுவது என்பது உணர்வுடைய பெரும்புலவர்கட்கேயாகும். இத்துறையில் கோவூர்கிழார் தாம் கூறவந்த அகப்பொருட்செய்தியை யானை, தினைப்புனம், கானவன், ஞெகிழி போன்ற கருப் பொருளின் துணையினுல் தலைவன், தலைவி, அவர் மேற்கொண்ட களவொழுக்கம், அதற்கு நிகழ்ந்த அலர், காப்பு என்ற செய்திகளைத் திறம்பட உள்ளுறுத்துப் பாடியுள்ளார்.

இப்பாட்டில், 'ஆற்றது தீமை அறிவுறு கலக்கம்' இருந்து அது தீர்ந்தவாறும், கொடைநேர்ந்து மணம் உடன்பட்டவாறும், அதுவழிப்பட்ட வதுவையில் புதுநாண்

ஒடுக்கம் பெற்றவாறும், அப்புதுநாண் ஒடுக்கங்கண்டு தோழி நகைத்தவாறும் தம் மனத்து உருவாக்கி தாம் தோழியாகி உணர்வோடு பாடிய கோவூர்கிழாரின் புலமை உன்னிஉன்னி மகிழற்பாலது.

இதுகாறும் கோவூர்கிழார் பாடிய பாடல்களின் பெருமைக்ளையும் அவற்றின் திணை, துறை பற்றிய செய்திகளையும், உவமைநயம்போன்ற பகுதிகளையும் அவர்தம் இலக்கியஉணர்வுகளையும் கண்டோம். இனி இவரைப் போன்று சங்கநூல்களில் நம் அறிவுவரம்பிகந்து ஆயிரமாயிரம் செய்திகளைக்கூறிய புலவர்பெருமக்கள் ஈட்டிந்தந்த இலக்கியச் செல்வங்களை நுகர்வோமாக.

வாழ்க தமிழகம்! வளர்க தமிழ்!!

## அருஞ்சொற் பொருள்.

| | | | |
|---|---|---|---|
| | | | பக்கம் |
| அலமந்து | — சுழன்று | ... | 91 |
| அலராகி | — பழியாகி | ... | 153 |
| அவலித்து | — துன்புற்று | ... | 37 |
| அணங்கிய பக்கம் | — கேடுசெய்த பகுதி | ... | 65 |
| அஃகுதல் | — சுருங்குதல் | ... | 21 |
| ஆர்புனைந்து | — ஆத்திப்பூச்சூடி | ... | 71 |
| இகுந்தொறும் | — அடிக்குந்தோறும் | ... | 118 |
| இவர்ந்து | — மேலேறி | ... | 28 |
| உகளுதல் | — துள்ளி விளையாடுதல் | ... | 148 |
| உட்கி | — உளம்நடுங்கி | ... | 37 |
| உடுக்கணம் | — விண்மீன் கூட்டம் | ... | 16 |
| உளைந்தவள் | — துன்புற்றவள் | ... | 147 |
| உறழ்ந்து | — ஒப்பிட்டு | ... | 55 |
| உன்னம் | — நிமித்தம் | ... | 16 |
| எவ்வம் | — துன்பம் | ... | 93 |
| ஏக்கற்றம் | — ஆசையால் எதிர்பார்த்தல் | ... | 148 |
| ஏதம் | — கேடு | ... | 95 |
| ஏற்றிழிபு | — உயர்வு தாழ்வு | ... | 107 |
| கடாம் | — மதம் | ... | 87 |
| கடிகொண்ட | — காவல் செய்த | ... | 153 |

| | | | |
|---|---|---|---|
| கடிப்பு | — | முரசடிக்குங்கோல் | ... 118 |
| கலாம் | — | கலகம் | ... 89 |
| கவர்பு | — | கூறுபட்டு | ... 91 |
| கவலாது | — | கவலைகொள்ளாமல் | ... 19 |
| கழறி | — | இடித்துரைத்து | ... 13 |
| கழலராய் | — | வீரக்கழலை உடையவராய் | ... 34 |
| கண்ணின்று | — | முன்னின்று | ... 13 |
| கண்படை | — | உறக்கம் | ... 34 |
| காழ்த்து | — | முதிர்ந்து | ... 112 |
| காலார் | — | காலில் கட்டிய | ... 34 |
| கிளத்தாது | — | சொல்லாது | ... 84 |
| கிளர்ந்து | — | எழுச்சியுற்று | ... 68 |
| குணில் | — | முரசடிக்கும் சிறுகோல் | ... 112 |
| குளகு | — | தழையுணவு (குன்றிமணித்தழை) | ... 33 |
| குறளை | — | கோள் | ... 84 |
| கூலம் | — | நெல், கொள், கம்பு போன்ற உணவுப் பொருள்கள் | ... 23 |
| கோறல் | — | கொல்லுதல் | ... 83 |
| ஞெகிழி | | தீப்பந்தம் | ... 153 |
| சிறங்கணிப்ப | — | கண்ணைச் சாய்த்துப் பார்க்க | ... 52 |
| சுரத்துய்த்து | — | காட்டிற்செலுத்தி | ... 124 |
| சுவல்மிசை | — | முதுகின்மீது | ... 93 |
| சூழ்ச்சி | — | ஆராய்ச்சி | ... 14 |

---

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 23 | ஒதுங்குதல் | ஓடுங்குதல் |
| 34 | 28 | என்பர் | என்னூர் |
| 47 | 10 | காடுகோடலும் | நாடுகோடலும் |
| 67 | 23 | நலங்கிள்ளி | நெடுங்கிள்ளி |
| 83 | 1 | நலங்கிள்ளி | நெடுங்கிள்ளி |
| 84 | 1 | ள்ளி | கிள்ளி |
| 90 | இறுதியிலுள்ள வரி மேலே இருக்கவேண்டும். | | |
| 103 | 2 | சீறியாள் | சீறியாழ் |